# வேதாந்த சாஸ்திர ரத்நத் திரயம்





[illegible] ஞாநாசாரிய ஸ்வாமிகள்,
திருப்பூவணம்.

விலை ரூ. 3.00

உ

2-4-4

# வேதாந்த சாஸ்திர ரத்நத் திரயம்.



இதில்,

1. விவேக சூடாமணி கவி 671.
2. அஞ்ஞ வதைப் பரணி கவி 494.
3. பஞ்ச தசி கவி 794.

ஆக மூன்றுக்குக் கவி 1950

அடங்கி உள்ளன.



திருப் பூ வணம், வேதாந்த மடம்,

காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்,



இதன், விலை ரூபாய் மூன்று.

24-4

சிவமயம்.

# விவேக சூடாமணி கவி 671-க்கு, கவி 17.

## எண் சீர்க் கழி நெடி அடி ஆசிரிய விருத்தம்.

(1) அகளவ்ளி அம்பிகா போற்றிசெக
சுத்தஅருள்ஈந ஆதியில் பரவுசா சகல, அஙசீவர்
சத்திபே சியளஎத்தி பிங்ந அருமை ஓநியஈத
லாவித்த ஆகை, திகஅிசெ புத்திர சித்அருவி
அறவிதீ திலாஆத மேதையி உத்த சாந, உக
நித்தி சத்திஅத் திர துன்னி பரவிஉரை எத்துசுத்
தசுத் ஆதியில் சுஙவே. (1)

31

(2) சுஙமருவி ஓதிபன் னியமுத்நி ஓது
சுரு திகா ரணபத்தி நாதநி படர்ந்த, இஙசாது
கருநாத னேபிரம நாதஇப்ப இவ்வித வித்து
வித் துவான் வித்த, எஙசுத் தமன்னி உன்
னிய ஊன என்ற ஏதுதான் ஈதுகே தந்தை
சென் பரவி, பஙஞாந கருதிஓங் கியதன்னு
ஈதுபரம் ஆதலால் பரவுமரு மருவீர புசவே. (2)

71

(3) புசதிரிசி தரணிஈது ஆதலால் பாத்திபுரி புத்திபின் புதன் சத்திய விரிவு, உச மச்சை இயானென சுத்திய மருவிபேசி உலதவ் வியபர வியதிட ஆதலால்வி, மசசுத்த ஙிச்சஙித் தழுசாது மோதிமரு வியதேக மோகம் மெத்தி முங்தி, துசபெருகி ஆகைஓ தியவங்ந சிரவதுன் னுவிரிவிரி சிரவஈ துதான் மெஞவே. (3)

111

(4) மெஞகஙவி சருயாதி ஞஅறிவு ஓதி மெத் தவும்ஈது பின்ஆடுமு அகங்க, இஞஆத லாௗஓதி புரிஅரிய தரணிஈ துசஈது மசகல கிரி உரவ். ஙஞஇருளு பெரிதுஅருமை ஆதலால் ஈதிநித் திசத்துவ புருடதிர முறுமு சுத்த, திஞ இவ்வி அகிலவுட மாயைகா எத்தைதிரி வியா தனே யாதிதீ தொத்தி ஙிடவே· (4)

151

(5) ஙிடயாதி சாதுவே அடர்சாது பத்த ஙித் தஙித்தமு அங்ஙி புத்திர சதுர, அடஅகண் ஙிருபல பின்னர அனேயபா நுஅஙக னேஅகலு மாசாது விரிபொறிஙி. இட ஓதி கரணசுரு தியை அங்ஙி ஓதிஇங் தவாஆகை மருவிய இவ்வி அங்ந, உடஈது அத்தமோ தியஓதி மேதைஉட மேதை மொழி உன்னு ஓதுதே மணமே. (5)

191

(6) மணஜந்து உன்னிஅந ஒதிய மநதி மநதுதன் சாதுவே வீசிவி ரிபெருகி, துணஇது கோதிமந மெனுமுன்னி சிறுமதுனி ஆதல் ஆத லான்வீ டுறும் பரவி, அணபோத பகுதி அக மெனுவிரிவு தகவில்ஆ தலால்ஞாநநித்தமு புத்தி என்ன, உணஏத ஈதிருல் விரிவுஒரு பிரிவ ஒதி தோத கநஆதி ஊநமாம் பதமே. (6)

231

(7) பதபுத்தி நித்தமல ஆதலால் சாதுபரம யாதொரு அநகபர வுசோ திருசி, எதபர விவிரி என்ன ஆதலால் விரிவ எதுயாதி சூநிய சாது வித் தரவி, நதகடச கோதிலா போதநித் தநித்த நல் பிரமே பிரமமே சத்தி பன்னி, இதயாதிகநமு விரி வுறுசாற்றி கநபஇது வெனுங்கநம சகசாது பின்உநவே. (7)

271

(8) உநஆத லால்பித்த சாற்றிபர ஒருமை உரியனே இத்திறஞ் சாதுபரு அரிய, விநகார தரணிநிரு மலவேத இவ்வி விட்டதிரு இத்தி றம் இத்திறம் ஆதல, அநகருது யாதிருல் கன யாதி பேதயா . தெலாமரு மித்தி ஆதிவி தொத்து, அநகார கருஏத யாதினில் ஒதிஅடர் நிரும்சத் தசத்வத்து மைந்த பவே. (8)

331

(9) தபஈந தேபுத்தி ஒருஊக்க இப்பசல ஈதுபோ வத்து அரிமந சந்த, தபபோத மித்தை நா ஞெருசுருதி சாதுதத் துவமஸி மூடவிவி ங்த்தி மாதி, சபகுறு கிபரஏ ததீதிலா அருவச ருஆத லால்சாது ஆதலால் ஓதி, திபதொந்த எவள இருள் இருளினுல் நிருமதீ ரனும்வெப்ப பகைசொ ரூபசுக தெமவே, (9)

351

(10) தெமபுகழ்ச ஆதலால் பிந்திபெரு பலபுதே காதிகா ரிகாரி யம்வந்த ஓதி, சுமஎவ்வ ஓதியசர் வஇருள் திருசிசொ ருபஆத லால் பொருவி தீரனும் சலித்த, சுமபுலனி அருஆத லால்கேத போத சுருசத்தி ஆதலாற் தீதிலாங் வாகி, மமவாகி சாதுவுடல் தன்னேயே சகலமரு அகில திருஆத லால்ஓது தியவே. (10)

391

(11) தியஇருளு மாசற்று நல்புத்தி செவ் வி தீதறவி ஏதபுங் திகபகுதி சத்த, பெயஇத்தி நிருடத்த னேசமத எவர்கள் பேதமாம் ஏகமாம் கிரியைமிக மெத்த, இயஇடைவி ஆனபலி பிரிவி ஆத லாற்பொ ஏதுமே ஏகாந்த வாதஅரி ஏத, வியஆத லால்பாக பரவிபா மிகவு விரயாதினுல் விடச மித்தைஇல பொரவே. (11)

431

(12) பொரஅந்த கருதொனு நிகழ்இகழ் வி பகரு போதமா ஏத ஓதியயாதி எதிலே, பரஈது பூரண பிரமஅலெ அகில பகுதிவா னிகர் விரிவ பிரமமே மலம, நரஅரிய நிருமக ருதிய தன் னுசோக ஞாதிரு அற்பபர வியஒருவ நிருவி, பர இகழு கற்சித்த மேசந்த ஈந பகுதியின் அகிலநிலெ உதயவல அலவே. (12)

471

(13) அலசருவ விரிஆத லால்சச்சி பலபி அ கண்டதத் துவமிகுந் துஒதிய மெத்த, நில விரிவ நிலெஏத மாமவகு சந்த நித்தசொப் பந யாதொ சேலாரநா சுத்த எலதேக நிலெபெறு எவசித்த பூத ஏதமுங் பிரவிரித்துளசடமா சுருதி, தலபேத பிரிமுன்ன மெத்தவும் நித்த தகுபிரம பேதசங் கமில்ஒருமை நவமே. (13)

511

(14) நவபோத புலிஆகை பிரமயா தொரு வு நனஅன்ன இந்தகரு ஒநிய வாநமா, அவ என்று கற்பிஆ தலால்அந் ந இப்ப அகிலபூ ரண சுத்த தள்நிரஞ் சித்த, சுவபோக ஆதலால் நிரு விதன் பந்த சுருதிகள் சகலபர விமருவி இரு மை, எவபரவி ஓதிபர விபஉன்னு பரம என்ன லும் இந்தபிர விருசிந்து நழவே. (14)

551

(15) நழுபங்கு பேதபிர தேசிக நின்னு நா தசங் கமுகத்து ருகத்துரு தெரிந்தி, உழுபகரு பரவிபர சகசகல அகலு உலகர்பற் பலபரவி பூதவா வாத, உழுஒரு இந்திபுரு டதிருசி சந்த ஒன்றினைச் சலி பரவி யசலத்தி கத்தி, இழுபகுதி யின்பகுதி உன்சகல ஒருசெ௬ சரு பன்னிகுரு இன்னவா நிளவே. (15)

591

(16) நிளஅக சகளந்த மித்தியா உன்னைநிரு மித்தியா ஏகதத் துவம் ஏத, உளதன்னிஅந்தவா தேவஇர வேத ஒதியவி ஓதியவிந் பிரிபரவி சிந்தை, அளசுத்த இன்னஅக தத்துவம் ஒரு மையா ஒருவிஅரு ஒன்றிஉரை ஏத மாந்தூ, தளவிரியின் ௬துபன் ஒருபேத சத்த தாஞ்சு த்த யாதொருகி ரிஒருந சுறவே. (16)

631

(17) சுறதருவி சச்சிர தெனில்ஆதல் மர முசுரு திதிருஇர வியின்கி ரநீர் பொருவி, அற அருமை மித்தைஇருள் சருவதா விரிவு அகி

பரமாம் பூதுசக லசக இந்த, உறஅந்த இந்தநித் தகன்மோக மெத்தவும் இப்பஇந்த திருமகிழ் அகில மென்னும், அறுநூற்றி எழுபத்தோர் கவிகளின் பொருளை ஆநந்த குருவினுல் அறி குவார் பரமே.

**விவேக சூடா மணி கவி 671–க்கு**

**தலைப் புக் கவி 17.**

முற்றிற்று.

---

சிவ மயம்.

# விவேக சூடா மணி கவி 67 முதற் குறிப் பகராதி,

முற்றும்.

சிவமயம்.

# அஞ்ஞ வதைப் பரணி, கவி 494-க்கு தலைப்புக் கவி 7.

---

## பதி ஞன்கு சீர்க் கழி நெடி லடி ஆசிரிய விருததம்.

(1) தரணிபடை அழிந்தலை பலஅழியா ஈருகி ஓர்தாவில் சினஒழி யாஇறை - தறுகண் நினை தனிநாடி மறைஅருபு ஐயபார் தனிகரு த உளக னவளே, நரசிதையு மருஉலக ஓதல்ஆவி யிபொருளே நம்மைவிழி அளஅ முந்த-நாம் ஒழித் உருதரணி குறியுமறை கல்லுசெயிர் வெரு தருவர் அணிகொள், திருநீள ஆராத செத்அறங் காவெய்ய தின்ருக ரைமேல இன்னம் திகழ்ஓத ஏதமள ஒன்றென்இல தண்டைஅலே தீர்வறிய வம்பு பொய்மை, பருகுஆவ ஆறுஉண்ண கண்டவயி சவலே அடை உழமெய் கவலேதன்நீளுபஞ் சொல் ஒளி கலேஅன்பு அருபோகா ஆகாசநா லுட னெழு பதாறே.

(2) ஆறுநில அழல்என்றிவ் ஆதிசம மெய்விளக் அண்டபவ தமது உடைமரு - அயனைசெறி இறைநெரிய மாருத மேனேக்கி ஆசையெ அன்னை மதுர. மாறுதொழு கதிமருவி கடவெரு அவனிஒரு அநுபஉரு பொருது தத்தம் - மருதொல்லை விளம் அடைய அன்னைமா சுணசாத்தும் மருவுபா தாதி வேதம், நீறுயோ கிநிகலையே பஞ்சா அரணேபுரம புணர்நித்தி பெத்தம் உரைஅழுக- நிகழ்அவனி அலைசகல உருகுதமர் இருள் பொருளை வீதெளியும் ஆதிக யிஆல, ஆறு இசை ஆயர்தம் வாததன் உலகபெரு அண் டர்கூ சாதே கரை-ஆனகவி இரண்டுக்கும் பாடலின் றெகைநூ ஞ்ரு டைம்பதுட னென்று திருவே

71 (151)

(3) திருசாத லாவந்த அண்டஉல வாச தபாக் திருநாவி அடுத்த சாந்தி-சீலைகர் முத்திஆ ராதபா காஉங்கள் இப்பஅடி பூண்கின் உடலை, அருஅழியு சமஅழிவ தெருள்அழுத அளியு நெஞ்சு அழகிவெரு கடுசெயிர்-அறுபல்ஐயப்பசி பாருண் ஒழிதொல்லை மாயைவா யொருஞாங

வாய நாய இருகுமா யாஇன்ஓ ராதஅல கருது பர ஞெளிஅந்த மெய்யெ நசையு-எவ்வஇள மைசாயை மின்றன்அற நிரஓத இந்த அற்ப மில ஆகமே, கருமுறைஉண் அவவன்பே ஆராவ குருபிறவி ஞாந மேதிரு ஞாநமே-கம பூவில் உம்பர்மம் மரபுணர்வின் மதிநானூற் றைம்ப திற்சரி பாதியே.

74 (225)

(4) திஇனியொன் அளவில்சொன் மண் ஞேரி பண்வேலே விதியு மலபரி யேகரும்-தேனிலவு தூமனனும் அனிபாவ குலேதெருட வருமறுக கோப அடலோ ஏய்பேரோ ஆல உரை ஈசன்புகர் மோகமுற வேமுமோ கமுற ஓசை – என்னளக தத்தயா எச்சதந் தவஞாந இங்கி எவ்வுயிர் போராரு, சாஎம்பி, வருகச்சு என்றுதம் பிரானிகட உறவொசித இனி இந்த-சந்தநொந் தனர்செயலி எண்ணிலா கீழிநிறை தேராத மாலாய நரம், ஏய்தசை கற்கநா பீளே மெய் பாவைஇறை மாசாவை தாபொது இகழா - எரிமுகுளி மொழிதமிகை பொறை என்று வாஞள் உளம்புலன்இல் ஒன்றுந் திரி சதையே.

76 (301)

(5) துய்யபடை ஆமாகு வாதாகி ஏசாத சந்தோவி அத்த சால – துணிவந்த அமருழி சுற்றகத கழியஉற வடிதத் தஞ்சே வித்த, எய்வாத தானபுற முகுமருவி சமயகுடி பறைவவிடர் மூவர் யாவர் – ஏகவா நவர்ஓது ஆண்டஎன் றுவேத துன்னிஇர புரண அறிவ. மெய்ஒட அறிவிண்டி நனவுகற் றவ உள்ளம் அறிவினுன் மகஅ முக்கில் - மேவிஉரு பாவமோ கனுஆன அறஆங் கதற்க ஆவியை அறிவிலன், டைஇ நள் அழி தேவர் இந்த அதி நாயனுர் ஞாநஎன் றவன் உம்பரி-பழுதுவெரு தென்றிபெரி செறிறிவி லாசலி முந்நூற்றெ ழுபதுதறு தூசிபே.

75 (37ó)

(6) தூசுஇலா குறிதறித் தல்குதனி ஒரு செககலும்தனி சகப்பு காபா–சுத்த கோதற்ற எம் பிரான்அல்ல லானஅறி பிறிவறி கரக்கு இருக்க, மூசுஅழிங் கறஉபூங் துருஅறிவி லாகாய அடிசெய்ய போக்கு சாவர்–முத்தி அந் தக்கசம எவ்வளக டம்பஅஞ் ஞாநஒழி யாத அடங்கா, பூசைதோன் றும்விஎல்லே வீரஞா ஞாநசக் கிரஞாந வாஒழிவ தன் பொருளே – பொய்எண் ணுதஏ யாதஅரு

அன்னே செய்முழு எனஉ டைஇல, ஈசஓ ராதொத்த மைப்ப அவிழ் நெய்விஇணே செற்ற பழிஒ ராகமே – இந்தக்க சாந்தியு மேலாரொ பொறைமுடி நானூற்றி நாற்ப தெய்தும்.

64 (440)

(7) தெய்பணி தன்ஒருமை பறவைஅரு மாயபின் நம்மாலே வான்று உலகா தேசிசாத் திரவல்ல சத்தமா மிடையிஇழை செப்பா தே கனி தண்மை நய்வகட அணவெந்த நசிளட்டு ஒளிபடுத்து வேதாசுத் தபணி யப்படு–ஞாநம் போ துரியாதீ வெறுஉடலே தியஅச்ச நின்ம ல பா விடை, மைவமீட் டவிஎன்னே துன்னிஞா நமுஞேய மதிஒன்று வரவு உரைக – மதம் கொடி பிணபாச கோரநினே பந்தபா வைத்த சுத் த்மறை வாழி, செய்வதொன் றறியாமல் அழிசாந வாரிகரை சேர்க்கும்இப் பரணி தன் னின்–செய்யுளின் முழுத்தொகை நானூற்றி யுடனொரு தொண்ணூற்றி நான் காகுமே.

54 (494)

**அஞ்ஞ வதைப் பரணி கவி 494–க்கு**
**தலைப்புக் கவி 7.**

முற்றிற்று.

# அஞ்ஞ வதைப் பரணி கவி 494 முதற் குறிப் பகராதி.

**அஞ்ஞ வதைப் பரணி**

**முதற் குறிப்பு**

**முற்றிற்று.**

சிவமயம்.

# பஞ்ச தசி கவி 796
# முதற் குறிப் பகராதி.

பஞ்ச தசி முதற் குறிப் பகராதி முற்றிற்று.

பஞ்சதசி

## 6. சித்திர தீபம்.

அனைய தேயங்கி யோங்யாத் தியாசமா மாவியோர் காற்கூடத். தனைம றத்தலே யநாதி யா கியவவி வேகமாந் தானீதே, நினைக மூலமா மவித்தையென் றின்னது நினைப்பொடு மறைப் பென்றும், வினையி லானிலேத் தெரிபடா னென் பது விளம்பிய மறைப்பாகும். 12

இதனை அந்த இடத்தில் சேர்க்குக முன் 12-வது பாட்டை 11-வது பாட்டாகப் படிக்குக.

# பஞ்ச தசி பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | 10 | தகனரு | சுகனரு |
| ,, | 12 | தேசிகேந் | றேசிகேந் |
| 3 | 1 | வேத்திய | வேத்தியம் |
| ,, | 5 | வேத்திய | வேத்தியம் |
| 9 | 3 | ஞலுமாந் | ஞனுமாந் |
| ,, | 12 | தாக்கமாம் | தாக்கமாந் |
| 12 | 2 | ரூமெனீ | ரூமெனி |
| ,, | 8 | மதனிகட் | மதனிக |
| 13 | 1 | நினைவையு | ணிலைவையு |
| 38 | 5 | தேகமத | தேசமத |
| 39 | 1 | ஒடுதேலிஞ | ஒடுதேலிஞ |
| 43 | 13 | நினைவீன் | நினைவின் |
| 47 | 10 | றறிய | றரிய |
| 49 | 7 | கண்போலு | கன்போனு |
| 54 | 7 | தன்ர்மிக் | தனர்மிக் |

| | | | |
|---|---|---|---|
| 58 | 5 | கார்ந்த | காநந்த |
| 97 | 18 | 143 | 320 |
| 144 | 19 | 157 | 477 |
| 156 | | 503 | 502 |
| 187 | 13 | முத்தாப் | முத்தாப |
| 201 | 12 | கலகன்ம | நலகன்ம |
| 202 | 21 | யொழிவ | யொழிவே |
| 203 | 5 | கனங் | கனவி |
| ,, | 6 | முறையில் | முறையிங் |
| 204 | 6 | ,, | ஆகச்செய்யு 6 |
| 205 | 4 | வற்சியர் | வற்கியர் |
| 207 | 20 | யம்மேசு | யம்மேக |
| 208 | 17 | யொருட் | பொருட் |
| 213 | 7 | பொருன் | பொருள் |
| ,, | ,, | பிரிவே | வேறுபிரிவே |

---

ஓம் :

பரப் பிரஹ்மணே நம :

ஸ்ரீ சங்கர பூஜ்ய பகவத் பாதாசாரிய

சுவாமிக ளவர்களால்

சம்ஸ்கிருதத்தில், திரு வாய் மலர்ந் தருளிய

# விவேக சூடாமணி.



இது

திரு விடை மருதூர்

உலக நாத சுவாமிக ளவர்களால்

செய்யு ளாக மொழி பெயர்த் தருளப்பட்டு



திருப் பூவண மடாதிபதி

ஸ்ரீலஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய

ஸ்வாமிக ளவர்களால்

பரிசோதித்துப் பதிப்பிக்கப் பெற்றது.

# அநுக்கிர மணிகை.

---

# அரும் பத வுரை.

—: :—

## நூல்.

பாட்டு எண்.

1 மற்ற மாநம்-உபநிடத மொழிந்த பிரமாணங்கள்.

2 ஓவலற்று-ஒழிதலற்று.

5 ஆரணார்த்தம்-வேதார்த்தம்.

8 கோதிலா-குற்ற மில்லாத.

10 வர மான-சிரேஷ்ட மான.

12 அநிசம்-எப்போதும்; நாவாய்-மரக் கலம்.

13 வித்தம் பொருள்; ஏடணை ஆசை, அத்திரம்-நிலையில்லாமை.

15 பிரமத்தால்-பிராந்தி ஞாநத்தால்! பழுதை-கயிறு; மற்றது-பழுதை ஞாநம்.

17 ஏதம்-குற்றம்.

19 மேதை-புத்தி; சதுரன்-திறமை யுடைய [வன்.

22 இத்திலும்-இகத்திலும்.

24 விரதி-விரக்தி (வைராக்யம்).

25 திட்டி-திருஷ்டி.
26 இரு வகை யிந்தியம்-ஞானேந்திரியம், கண்மேந்திரியம்; கோளகம்-இடம்.
34 மருந்தேசம்-காநல்; தோயம்-சலம்.
37 மாநம்-பிரமாணம்; காட்டம்-விறகு.
4) பவ மாம் பவ்வம்-பிறவிக் கடல்,
41 பவநன்-காற்று; காந வந்நி-காட்டுத் தீ.
42 சிந்து-கடல்.
45 சுதை-அமிர்தம்.
46 கேதம்-துக்கம்.
47 அரந்தை-துன்பம்.
49 வித்துவான்-ஞாநவான்.
50 வெருளுறேல்-மயங்காதே; எதிகள்-துற [விகள்.
51 வித்தரம் விரிவு.
53 பன்னிய கூறிய; துன்னிய-பொருந்திய; ஏது-காரணம்; துக ளிலா-குற்றமில்லாத.
55 ஊநம்-கெடுதி.
58 தந்யன்-பாக்கியவான்.
59 ருணம்-கடன்.

62 இந்து-சந்திரன்.
70 ஞானத் திறமை-அபரோட்ச (பிரத்தி
76 காத்திரம்-தேகம். [யட்ச) ஞானம்.
77 ஏகாக்கிரம்-ஒருமுகம்.
79 பேணியே-விரும்பியே.
80 வத்து-ஆன்மா,
82 மச்சை-மூளை; மேதசு-கொழுப்பு; ஊரு-
தொடை; அங்கோபாங்கம்:- அங்கம்-
கை கால் முதலியன; உபாங்கம்-அவற்
87 மால்-ஆசை. [றின் விரல் நக முதலியன.
88 புலன் விஷயம்.
90 மா னக்கரம்-மால் நக்கரம்-ஆசை யாகிய
91 வசி-வாள். [முதலை.
96 பிராரத்தம்-அந்நியத்திற்குரியது. (நாய்
நரி முதலியன ஈண் டந்நிய மாம்).
99 தேக தாரஞ் சுதாதி-தேகம், உடம்பு.
தாரம்-மனைவி; சுதாதி-பிள்ளை வீடு
காணி முதலியன.
100 தொக்கு-தோல்; அத்தி-எலும்பு.

101 இந்த ஆக்கை-இவ் வுடம்பு.
102 தாதாந்மியம்-அத்தியாச ஐக்கியம் (ஒருமைப்பாடு).
103 வாகியம்-வெளி; போக ஆலயம்-சுக துக்கங்களை யநுபவித்தற்குரிய இடம்(தேகம்)
104 சரை-மூப்பு; சைசவம்-பால (குழந்தை)ப் பருவம்; கௌமாராதி குமார, யௌவந விருத்த பருவங்கள்.
105 வன்னம் - ஜாதி; ஆசிரமம் - (பிரமசரிய முதலிய) நிலை.
107 விருத்தி-அந்தக்கரணத்தின் பரிணாமம்.
109 சொன்னாதி-பொன் முதலியவை.
111 அபஞ்சீகரித்த-பஞ்சீகரண மாகாத.
118 மூகத் தன்மை-ஊமைத் தன்மை,
120 அவயவத்தில் இந்திரியங்களில்.
134 பிரமத்தால்-பிராந்தியால்.
136 ஏதுமே யறியாத் தன்மை – அபாவனை; ஓதினு முணராத் தன்மை-அசம்பாவனை; ஐயஞ் சேர்கை சம்சய பாவனை; பேதமா யறியுந் தன்மை விபரீத பாவனை.

140 மிசிரம்-கலப்பு; சருவதா-எப்போதும்.

147 பாவம்-இருப்பு.

149 பரவ லாகும்-வியாபிக்கப்பட்டிருக்கும்.

154 உலைத்தல் - வருத்தல்; சுடு கந லயப் பிண்டம்-காய்ந் துள விரும்பு

156 பகுதி யாதி-பிரகிருதியும், அதன் காரியமான உலகமும்,

158 தரங்கம்-அலை; பாரம்-கரை.

160 வெண்மை - அறி வின்மை; புலன்கள் - உணவு முதலியன; கோசகாரம்-பட்டு நூற் பூச்சி,

161 மதி நிகர் தமசினலே-சந்திரனை யதனிடத்துள்ள களங்கம் மறைப்பது போலுள்ள அஞ்ஞானத்தாலே. அசத்தின் மால்-அசத்தில் சத் தென்னும் பிராந்தி.

166 முகிலின் பந்தி மேகத்தின் வரிசை.

167 அநகன்-பாப மில்லாதவன்.

168 விவித மாய்-நாநா வாக.

173 அநிலம்-காற்று.
175 கோசம்-உறை; வாவி-நடை கிணறு.
176 உதகம்-நீர்; சலிலம்-ஜலம்.
177 அபவாதித்தால்-பொய் யென்று நிச்சயித்தால்; பிரத்யக்-உள்.
180 பிரவிலாபித்து-அபவாதித்து (தெளிந்து)
182 அறு விகாரம்-சட் பாவ விகாரம்; அவை: உண்டாதல், இருத்தல், மாறுபடுதல், அதிகரித்தல், குறைதல், நாச மடைதல் என்பன வாம்.
183 அத்தம்-கை; துனி-துன்பம்.
186 குரம்பை-தேகம்,
193 இட்டாநிட்டம்-விருப்பு வெறுப்பு.
195 வாசனை-உலக வாசனை முதலியன.
216 அகுதின்-தேசுபதிகளின், [விலட்சணம்
219 பரிச்சேதம் - நீக்கம்; மித்தை - சத் அசத்
220 அயோ விகாரம்-இரும்பின் விகாரத்தை; வந்நி-நெருப்பு. [முதலியன.
252 ககநம் - ஆகாயம்; பீதாதி - மஞ்சள் நிற

239 இட்ட நோக்காதி-பிரிய மோதப் பிரமோ
252 மார்த்தாண்டன்-சூரியன். [தம்.
253 பதிபிம்பங்கள்-பிரதிபிம்பக்கள்.
254 ச தசத்திற்குப் பேத மாம்-சதசத்(பாவ-அபாவ) விலட்சண மாகிய.
260 சொத சித்தம் - தானே பெறப்பட்டிருப் பது; பித்தியக்-பிரத்தியக் (ஆத்மா).
278 கோசரிக்கப்படாததாய் - அறியப்படாத
278 சோதிப் புற்ற ஆராயப்பட்ட. [தாய்.
279 வாதகம்-கெடுதி.
281 வாச்சியார்த்தம் - சொல்லின் (வெளிப் படை)ப் பொருள், (இலட்சியார்த்தம்-சொல்லின் குறிப்புப் பொருள்).
282 துவந் துவம்-இருமை.
284 நேதி நேதி-இது வன்று இது வன்று.
298 சடூர்மி-பசி, தாகம், சோகம், மோகம்,
ஷேப்பு ஜரை, மரணம். [சரீர தாபம் (துன்பம்)
300 ஆதி வியாதி-ஆதி-மாநச தாபம்; வியாதி-
301 நித்தரங்காழி-அலை யிலாக் கடல்.

303 வெண்மை-மாயை; வெண்மை காரியம்-மாயா காரிய வுலகு; அக்கரம்-அட்சரம் (அழியாதது).

313 வித்தியால் - (தத்துவ) ஞாநத்தால்.

322 இரு குணம் - சத்துவ குணம், இரசோ குணம்; சோதி யாவது-மிசிர சத்துவ [குணம்,

334 கேதம்-குற்றம்,

337 கணிகம்-கணப் போ திருப்பது.

338 கரி-சாட்சி; துயில்-சுழுத்தி; சத் தசத்து-பாவாபாவம், (இருப்பு-இல்லாமை).

343 எவம்-எவ்வம் (தீமை),

344 இந்து-சந்திரன்,

348 அரோக மில்லாது-நோ யிருத்தலை.

356 பல புலம்-பல விஷயம்.

360 வாகியச் செய்கை-வெளி வியாபாரம்.

362 விவ் விதம்-பல வகை.

364 அருணன்-சூரியன்.

370 வாரியை-நீரை.

375 கேவல ஞனவன்-சீவந் முத்தன்; உடலி லாத பேற்றிலும்-விதேக முத்தியிலும்.

377 நிடேத கர்த்தா-சாஸ்திரம் விலக்கிய கருமங்களைச் செய்பவன்.
378 அசோரர்-திருடாதவர்.
390 சதுரர்-பண்டிதர்.
398 பொய்யதாம் புணர்ப்பு-மித்தியா தாதாத் மியம் (கற்பித ஒற்றுமை).
400 பகுதி-பிரகிருதி (மாயை).
403 மந முடிச்சு-இருதயக் கிரந்தி (மாயை).
408 ஆசக்தி-விருப்பம்; கீடம்-புழு, பிரமரம்-
411 சொன்னம்-பொன். [குளவி.
413 வாசனை முடிச்சு-வாசநாக் கிரந்தி.
419 வரை யிலா-எல்லை யில்லாத;
423 வாகியம் வெளி; ஆந்தரம்-உள்.
425 பட்சம்-இரக்கை.
429 விட சம-விஷத்தை பொத்த.
430 அக மதி-நா னென்னும் புத்தி.
432 சுதை-அமிர்தம்.
435 விசாதிக விருத்தி-அநாத்மாகார விருத்தி.
439 குசூலம்-குதிர் (தாங்ய வுறை).

440 தம்பம்-(ஸ்தம்பம்) கட் புலனுக்கு விஷய
மாகாத தொரு பிராணி (மிகச சிறிய
459 பிரமை-(ஈண்டுப்) பிராந்தி. (ஜந்து).
461 மரு புவி-கானல் நிலம்,
502 வாரி-கடல்.
513 இலக்கியம் குறிக்கப்படுவது,
523 உசாவில்-வினுவினுல்,
532 தத்துவம்-உண்மை.
554 சாகரம்-கடல்.
566 பகுதி யாம்-மாயை யாகிய. [தின்கண்.
567 அத்தியாசம்-பிராந்தி; கான்மிசை-காலத்
569 இரவி-சூரியன்; வரை-மலை, [தை.
570 மேகப் புணப்பினை-மேகத்தின்சம்பந்தத்
571 வாதகம்-கேடுறுவது; சாதமே முதல்-
பிறத்தல் முதலிய; கோ-பர்வதம்,
574 தாபம்-உஷ்ணம்,
577 துய்ப்போன்-அநுபவிப்பவன். [பிம்பம்.
579 பாற்கரன்-சூரியன்; பதிபிம்பம்-பிரதி
581 சாதுத்துவாதி-சாதுத் தன்மை முதலியன
582 ககந நேர்-ஆகாயத்தை யொத்து.

586 பகிர்ப்பு-பகுப்பு; ஆலம்பம்-ஆதாரம்.
588 வியாக்கிரம்-புலி; தீநன்-ஏழை.
590 வரை-எல்லை.
591 மின்னிய வத்ந நுக-மலர்ந்த முகத்தின
592 ஆறிய-சாந்த மான. [நுக.
594 ஓவியம்-சித்திரம்.
597 வா னமர் புரம்-ஆகாச பட்டணம்.
601 பதிபந்தம்-பிரதிபந்தம் (தடை).
இலக்கிய திட்டி-ஒரு குறியில் பார்வை
604 பாவநம்-பரிசுத்தம். [யைச் செலுத்தல்.
606 இலக்குவது-விளங்கச் செய்வது.
611 தைரியம் - தீநத் தன்மை; வநம் - காடு;
612 திக்கை-திசையை. [மயாநம்-சுடு காடு.
614 சிதம்பரம்-சிதாகாசம்; திகம்பரம்-திக்கே
யாடை (நிர்வாணி); வற்கலை-மர வுரி.
618 அருத்தம்-பொருள்; விடமம்-விஷமம்
622 இனன்-சூரியன். [(வேறுபாடு)
624 தந்நிய-தந்நியனே.
625 தாரு வாதி-மர முதலியன.

926 தடத்தன்-சாட்சி.
627 சக்கர மூலம்-(சுழலும்) சக்கரத்தி னடி.
630 சரிதமோ டிருக்கும் - தேகாதி யுபாதிக ளோடுங் கூடி ஜீவித் திருக்கும்.
632 தரு-மரம்; பங்கம்-இலை.
633 பூன்ற-பூரண; உச் மே லான.
635 எவனில்-எவ்விடத்தில்,
638 திரணம்-துரும்பு; படம்-ஆடை,
639 வான் கடாகாயம்.
640 கீரம்-பால்; தைலம்-எண்ணெய்.
646 முகில்-மேகம்; ஆவரணம்-மறைப்பு.
647 அசங்கம்-கூட்ட மற்றது.
652 அநுஞ்ஞை-உத்தரவு.
653 தொந்தம்-பந்தம்.
655 நித்த கன்மம்-நிஷ்காம கர்மம்; சன்-நல்ல
656 முத் தாப பாநு தேசால்-ஆதியாத்மிகம், ஆதி பௌதிகம், ஆதி தைவிக மென் னும் தாபத் திரய சூரிய வெப்பத்தால்,
660 பிரம வம்சம்-பிராமண குலம்.

---

முற்றும்.

ஓம்.

பரப் பிரஹ்மணே நம:

# விவேக சூடாமணி.

---

## பாயிரம்.

எவ்விநா யகனை முன்ன மியாவரும் பூசை செய்து. தவ்வறத் தங்க ளிட்டந் தரணியிற் றுமடைந்தார், செவ்விய கருணை கூர்ந்த சிவனருள் குமர னுன, வவ்விநா யகனை யென்று மகத்தினு ளதுசந் திப்பாம். 1

அம்பிகா சகித னுகி யாநந்த நடனஞ் செய்து, நம்பினேர் துன்ப நீக்கி நற்சுக நல்கா நின்ற. வெம்பிரா னான வீச னிருபதக் கமலந் தன்னை, நம்புவாந் துன்ப நீங்கி நற்சுக மடைவதற்கே 2

போற்றிய நடந ராசன் பொருவிலா வுருவந் தானே, யேற்றிய குரவ னுக விங்ஙனே

வந்து தித்து, மாற்றிட வொஞ்ஞத வெம்மின் மாசெலா மாற்றிற் றன்றே, தோற்றிய வந்த வாசான் றுணையடி தொழுதல் செய்வாம். 3

செகத்தினுற் பத்தி யாதி செய்திடு மேது வேனு, மகண்டதன் வடிவி னின்று மற்பமும் பேதி யாதாய்ப். புகழ்ந்துநன் றுணர்ந்தோ ருக்குப் பூரண வாங்மா வாகத், திகழ்ந்தவா நந்த வுண்மைத் தெளிவினைத் தியாநஞ் செய்வாம். 4

சுத்தவே தாந்த மெல்லாஞ் சொல்லிய பொருள்க டம்மை, மெத்தவுங் கருணை யாலே மேன்மைசேர் பாடி யாதி, தத்துவ நூல்கள் கொண்டே தடையறத் தெரிய வைத்த, வுத்தமச் சங்க ராசா னுண்மையை யுளத்தில் வைப்பாம், 5

அருண்மிகு சங்க ராசா னருளினு லமைத்த தான, மருளறு விவேக சூடா மணியெனுங் கிரந்த நூலைக், கருதரு நடாந ராசன் கருணையாங்

திறமை கொண்டே, வரதமிழ்க் கவிதை யாக
வழுவற வமைக்க லுற்றேன். 6

ஈனமில் சங்க ராசா னிசைத்தவிஞ் ஞான
நூலை, யூனமா மென்றன் வாக்கா லுரைத்திடு
நீதி யோரின் வானமர் பானு தானே வையகம்
விளக்கி வைப்ப வூனமின் மினியு நானீ தொளிர்ப்
பனென் றுரைத்தல் போலாம். 7

ஆதியில் வேத முந்தா னச்சமுற் றன்பி
ஞேடே, நேதிநே தியெனும் வாக்கா னிகழ்த்
திய நுண்மை யான, போதவா னந்த வுண்மைப்
பொருளினை யானு ரைக்கு, நீதிதா னெவ்வி
தத்து நிலைமையாய்ப் புகுவ தற்கே. 8

பரவுசா தனசம் பத்தி பாங்குடன் குரவன்
சேவை சிரவண மனனந் தியானஞ் சீர்பெறுஞ்
சமாதி ஞான, மிருவித வீடு ரைக்கு மிந்தநூற்
கவியி லக்க, மரியநற் பாயி ரத்தோ டறுநூற்றி
னெழுபத் தொன்றும். 9

பாயிரம் முற்றிற்று.

---

## நூல்.

சகலவே தாந்த நூலிற் சார்ந்தசித் தாந்த மெல்லா, மிகவுமே கோச ரிக்கு மெய்ம்மையாய் மற்ற மாந, நிகழுநங் கோவிந் தாசா னிலைமை யைப் போற்றல் செய்வாம். 1

சீவருக் கிங்கு மாந்தர் சென்மமே யரிதா மத்தின், மேவுதற் கரிதா மாண்மை மேவினு மறையோன் றன்மை, யாவதற் கரிதா மத்தை யடையினும் வேதந் தானே, யோவலற் றோது மார்க்க மொன்றுவ தரிய தாகும். 2

அத்தினும் வித்து வானு யமைவதிங் கரிதா மத்தின், வித்தர வாங்மா நாங்ம விவேகமெத் தரிதே யத்தின், சுத்தமா ஞாந மற்றே சொரூப மாய் நிற்கு முத்தி, புத்திசே ரநந்த கங்மப் புண்ணிய மன்றி யெய்தா. 3

பேசிய வடைவா யாவும் பெற்றிட வொ ணுத தேனு. மீசனல் லருளி னலே யிசைவதா

யருமை யான, மாசிலா மநுடத் தன்மை மன்
னிய முமுட்சுத் தன்மை, தேசிக ராசன் சே
வைத் திறமையிம் மூன்றும் போதும். 4

எத்திற வேது வாலோ வெய்தியு மநுடத்
தேக, மத்திலு மார ணூர்த்த மறிவதற் கேது
வாக, வொத்த்வாண் மையைய டைந்து முண்
மையா முத்தி சேர, வெத்தநஞ் செய்யா மூட
னென்றுமாங் மாவைக் கொன்றேன். 5

பிங்மி லாங்ம ரூபம் பிரிவறத் தானாய்
நின்று, மன்னவ னசத்தாங் தேக மாதியை யபி
மா நித்திங்; குன்னிய வாங்ம ரூப முணர்ந்து
தா னடையா தத்தாற், றன்னுடை யாங்ம
ரூபங் தன்னையே கொன்ற வன்றான். 6

அருமையா மநுடத் தேக மடைந்ததி
லாண்மை தன்னை, மருவியும் யாவன் றன்சேர்
மாசிலாப் பயனை வேண்டித், தரணியின் முய
ன்றி டாமற் றவிருவ னவனை யன்றி, யொரு
வனு மூட னுண்டோ வுள்ளவா றேருங் காலே,

ஓதிய பலவா நூலை யொழுங்குறப் படித்து மென்ன, தீதிலாத் தேவர் தம்மைத் திருமுமர்ச் சித்து மென்ன, நீதியாங் கன்ம மியாவு நித்த முஞ் செய்து மென்ன. கோதிலாத் தேவர் தம் மைக் குறித்துபா சித்து மென்ன. 8

ஈதலா லின்ன மிங்ங னெத்தனை யியற்றி யென்ன, வாதியாம் பரசி வைக்ய மறிந்திடு மறிவா லன்றி, யோதொணுக் கற்ப கோடி யுற்றகா லத்தி னுலுங், கோதிலா முத்தி சித்தி கூடுவ தென்று மில்லை, 9

வித்தமா தியினு லென்றும் விமலமா முத்தி யாசை, வைத்திட வேண்டா மென்னும் வர மான சுருதி தானே, மெத்திய கன்மங் கட்கு மெய்ம்முத்தி யேதுத் தன்மை. சுத்தமா யில்லை யென்று துலங்கவே சொல்லு மன்றே 10

ஆகையால் வித்து வான்ற னமலமா முத்தி சேர, வாகிய சுகவி ருப்பம் வரையற

விடுத்து மேலோ, ஞகிய நல்லா சானே யடைந் தவ னுபதே சித்த. வேகமாம் பொருளிற் சித்த மிருத்தியே முயல வேண்டும். 11

அிசமிப் பவமாம் பவ்வத் தமிழ்ந்திடுந் தன்னேத் தானே, இனியயோ கத்தி ஞலே யெய்திய சொரூப ஞாந, மெனுமகா நாவாய் கொண்டே யிப்பவ வாரி நின்றுங், கடபரப் பிரம மாகுங் கரையின்மே லேற்ற வேண்டும்.

புத்திரர் மாதர் வித்தம் பொருந்துமே டணேயை விட்டிவ். வத்திர மான கன்ம மனேத் தையு மறவே தள்ளிப், புத்திமா ஞன தீரன் பொருந்திய பவத்தை விட்டு, முத்தியாம் பேற்றைச் சேர முயற்சிசெய் திட வே வெண்டும். 13

சித்தசுத் தியினேச் சேரச் செய்தகன் மங்க ளன்றி, வத்துவின் ஞாநஞ் சேர வகுத்தகன் மங்க ளன்று, வத்துவின் ஞாநஞ் சேரல் வர விசாரத்தி ஞலே, சித்தியாங் கோடி கன்மஞ் செய்யினுஞ் சித்தி யாகா. 14

அருவிசா ரத்தி னாலு மாத்தனின் வாய்மை
யாலும், பிரமத்தால் வந்த சர்ப்பப் பீதிதுன்
பங்கள் போக்கும், பரிசுடைப் பழுதை ஞானம்
பாரினில் வருவ தன்றி, மருவிய மற்றொன்
றாலு மற்றது வாரா தேபோல். 15

அறவிசா ரத்தி னாலு மாத்தனின் வாய்மை
யாலு, மறிபொரு ளுண்மை தன்னை யறியலா
மஃதை யன்றிச், செறியுநீ ராட றானஞ் செய்தி
டும் பிராணா யாம, முறுசெயல் யாதி னாலு
முண்மையை யுணர வொண்ணா. 16

தீதிலா வதிகா ரிக்குத் திரவிசா ரத்தி னாலே,
கோதிலா ஞான சித்தி கூடிடுஞ் செவ்வி தாக,
வேதமி றேசங் கால மீசனல் லருளே யாதி,
யோதிய ஞானஞ் சேர வுறுதுணைக் கார ணந்
தான், 17

ஆதலா லாந்ம ரூப மறியவிச் சித்த தீரன்,
காதறீர் பிரம வித்தாய்க் கருணைவா ரிதியா
மாசான், பாதமே யநுச ரித்துப் பரமமா மாந்

மாத் தன்னின், கோதிலா நல்வி சாரங் குறைவ
றச் செய்ய வேண்டும். 18

மேதையின் மிக்கோ ளுகி மிகுந்துள
சாரா சாரம், யாதுமே கூட்டத் தள்ள வியல்
புறுஞ் சதுர ளுகி, யேதமி ஞாலு ரைத்த விலக்
கண மியாவும் பெற்ருே, ளுதியா மாங்ம வித்
தைக் கதிகாரி யாவ னன்றே. 19

உத்தம விவேகி யாகி யுள்ளுற விரத்த
ளுகி, நித்தமுஞ் சாந்தி யாதி நின்மலக் குணஙி
றைந்த; வுத்தம முமுட்சு வுக்கே யுண்மையாம்
வத்துத் தன்னி, னுத்தம விசாரஞ் செய்ய
யோக்கியத் தன்மை யுண்டால். 20

சாதந நான்க தாகச் சாற்றலா மேலோ
ராலே, யோதிய வதிகா ரிக்கிங் குரைத்தவீ
திருக்குங் காலே, போதமாம் பிரம நிட்டை
பொருந்தலா மீதி லாக்காற் கோதிலா வந்த
நிட்டை கூடுவ தென்று மில்லை. 21

நித்தியா நித்தி யங்க ணிகழ்த்திய விவேக மொன்று, மித்திலும் பரத்தி லுஞ்சே ரின்பிடை விரதி யொன்றுஞ், சத்தியஞ் சமத மாதி சட்க சம் பத்தி யொன்றுஞ், சுத்தமா முமுட்சுத் தன்மை சொல்லலா மற்றென் றுக. 22

சத்தியம் பிரம மேயாஞ் சகமிது மித்தை யாமென், றித்திறஞ் சாத்தி ரத்தா லெய்திய நிச்சயந்தா. னித்தியா நித்தி யங்க ணிகழ்த்திய விவேக மென்று, சுத்தமா மேலோ ராலே சொல்லிட லாகு மன்றே. 23

அத்திர மான தேக மாதியா யயனே யீறுய், நித்திய மிலாத தான நிகிலமாம் போக்கி யத்தி, னத்திறங் காண்டல் கேட்ட லாதியா லறிந்த வற்றின், மெத்தவு மருசி தானே மேன்மை சேர் விரதி யாகும். 24

துன்னிய விடய மெல்லாந் தோடமென் றெண்ணுந் திட்டி, தன்னிறு லக்ஷி னின்றுந் தடையிலா விரதி பெற்று, மன்னிய விலக்கி யத்

தின் மாசற மநதை வைத்தல், பன்னிய சமமா
மென்றே பகருவர் மேலோ ரெல்லாம். 25

பரவிய விடயக் கூட்டம் பற்றியே தாவா
நின்ற, விருவகை யிந்தி யத்தை யித்திர ணின்று
மீட்டு, மருவுதன் கோள கத்தின் மாருது நிற்க
வைத்தல், பொருவிலாத் தமமா மென்றே புக
லுவர் பெரியோ ரெல்லாம். 26

உரைதரு சமத மத்தி னுறவினுற் சித்த
மற்றும், பரவிய பாகி யத்தைப் பற்ருது தன்
னிற் ருனே, திரமதா யூன்றி நின்று திரமிலாக்
கன்ம மெல்லாம், வரையற விடுத்த ருனே வர
வுப ரதியா மன்றே. 27

எத்துய ரெய்தி னுலு மேங்கியே யழுதி
டாம, லத்துயர் நீங்கு பாய மற்பமுஞ் செய்தி
டாமற், புத்தியின் றயிரி யத்தாற் பொருந்திய
துயரை யெல்லா, மெத்தவுஞ் சகிக்குந் த்ன்மை
மேன்மைசேர் திதிட்சை யாகும். 28

சுத்தவே தாந்த நூ லுஞ் சூக்குமக் குரவன்
சொல்லுஞ், சத்திய மென்ப தாகக் சார்ந்திடு

நிச்ச யத்தை, வத்துவின் சாட்சாத் காரம் வரு வதற் கேது வான, வுத்தமச் சிரத்தை யென்றே யுரைப்பருண் மையையு ணர்ந்தோர். 29

சுத்தமாம் பிரமத் தின்கண் சுழலுறுஞ் சித்தந் தன்னை, யெத்தந மியாதி னுலு மென் றுமே யூன்ற வைத்தல், சத்தியச் சமாதி யென் றே சாற்றலா மஃதை யன்றிச், சித்தமே கின்ற வாறே செல்வது சமாதி யன்ருல். 30

ஆதியி லஞ்ஞா நத்தா லாகிய வகங்கா ராதி, யேதமாந் தேக மீரு யெய்திய பந்த மெல்லாந், தீதறு ஞாநத் தாலே தீர்ப்பதற் கிச்சை செய்த, லேதமின் முமுட்சுத் தன்மை யென்றுகூ றிடலா மன்றே. 31

மருவிய முமுட்சுத் தன்மை மந்தமத் திமம தேனும், பெருகிய விரதி யாலும் பெருஞ்சம மாதி யா லுங், குருவர னருளி னுலுங் குறைவற வளர்ந்து காலம், பருவமெய் திடில்வா ளாகா பயனேயே நல்கு மன்றே. 32

ஓதிய விரதி யோடே யுத்தம முமுட்சுத் தன்மை, தீதிலா தெவனி டத்திற் றீவிர மாயி ருக்குங், கோதிலா தவனி டத்தே கூடிய சமத மாதி, நீதியாந் தன்ப லத்தை நிகழவே நல்கு மன்றே. 33

பன்னிய விரதி யோடே பற்றிய முமுட் சுத் தன்மை, மன்னிடா தெவனி டத்தில் மந்த மாய்த் தானி ருக்கு, மன்னவ னிடத்திற் சாந்தி யாதியா பாச மாகத், துன்னிடு மருதே சத்திற் றோன்றிய தோய மேபோல். 34

முத்தியி னேது வாக மொழியுபா யங்க ளுக் குட்.பத்தியே மிகவு மேலாய்ப் பகரலா மஃதே தென்னி, னித்தமுஞ் சொச்சொ ரூப நிகழ்த் திய வநுசந் தானம், பத்திதா ஞகு மென்றே பகருவர் பரமு ணர்ந்தோர். 35

ஓதுசா தநசம் பத்தி யுள்ளவா றுற்ற தீரன், தீதிலா வாந்ம ரூபந் திகழவே யுணர வே ண்டி., யாதுமே யுணர்ந்து தன்னை யெய்தினோர்

பவபங் தத்தைக், கோதறத் திர்ப்போ னை குரு
விடைச் செல்லல் வேண்டும். 36

சுருதியே முதன்மா நத்தாற் சொல்லிய
தநுட்டா னித்துப், பரவிய பாவ மற்றுப் பற்
றெலா மற்றோ னகிப், பிரமவித் தாகி யந்தப்
பிரமமே சார்ந்து காட்டம். மருவிடா வங்கி
போல மாசறச் சாந்த னகி. 37

காரண மியாது மின்றிக் கருணைவா ரிதி
யே யாகிப், பாரினிற் றன்னைப் பற்றிப் பணிந்த
சா துக்க ளுக்குப், பூரணப் பந்து வாகிப் பொருந்
திய வாசான் றன்னைச், சேர லுற் றன்பி னோடே
சீடன்சே விக்க வேண்டும். 38

பத்தியால் வணங்கிச் செய்த பலவிதச்
சேவை யாலே, மெத்தவுந் தன்னி டத்தின் மெய்
யருண் மேவா நின்ற, வுத்தமக் குருவை நோக்கி
யுணரவேண் டியதை யெல்லாம், புத்திமா னை
சீடன் போற்றியே வினவல் வேண்டும். 39

நாதநின் சரணம் போற்றி நல்லருட் கட
லே போற்றி, பாதமே பணிந்தோ ருக்குப் பந்

துவே பவமாம் பவ்வ,மீதினுன் மூழ்கு மென்னை யினியநற் கருணை கூர்ந்த, கோதினின் றிட்டி நாவாய் கொண்டுமே லேற்றி வைப்பாய். 40

படர்ந்ததீ வினையே யாகும் பவநனு லுலர்த் தப் பட்டுக், கடந்திடாப் பவமே யாகுங் கான வங் கியினுல் வெம்பித், தொடர்ந்தபீ தியினு னீயே துணையென நம்பு மென்னை. முடிந்திடா மரண மாதி முடிவுறச் செய்து காப்பாய். 41

சா துவாய்ப் பூன்ற ராகிச் சாந்தராய் வசந்த கால, நீதிபோ லுலகர்க் கிட்ட நிறைப்பராய்ப் பவமாஞ் சிந்துப், பீதியைக் கடந்து மற் ருேர் பீதியுங் கடப்பிப் போரா. யோதிய நீதி சேர்ந்த வொத்தமே லோர்க ளுண்டால். 42

கருதிய சூரி யன்வெங் கதிரினு லெரிக்கப் பட்ட, தரணியை யிந்து தானே தண்கதிர் கொண்டு காக்கும், பரிசுபோற் பற்றி னோரின் பவத்துயர் தீர்க்குஞ் சத்தி, சொருபவித் தான மேலோர் சுபாவமே யாகு மன்ருே. 43

நாதனே யுன்னை யல்லா ளுனேதுஞ் சர ணைய்க் காணேன், யாதுமே யேது வன்றி யெய்தி னோர் தம்மைக் காக்கு, நீதிதான் றம்மொத் தோர்க்கு ஙித்தமு நிறைந்த தன்றோ, வாதலா லருளா லென்னை யாளுவ துன்பொ றுப்பே. 44

பிரமவின் பாநு பூதி பெற்றதாற் சீத மாகி, நிருமல மாகித் தூய்தாய் நின்முகக் கலச நின்று, வருவதாய்ச் சுகமே செய்யும் வாக்கியச் சுதையி னாலே, விரிபவக் காநத் தீயால் வெதும்பிய வெனை நனைப்பாய். 45

நாதநின் கடாட்ச திட்டி நாடிடுங் கண்பார் வைக்குக், கோதில்பாத் திரரே யாகிக் குமர னென் றொப்பப் பட்டோர், ரேதமில் பாக்கி யத்தை யிங்ஙனே யெய்தி னோராய்க், கேதமா மியா வும் விட்டுக் கேவல ராவ ரன்றோ. 46

இப்பவச் சிந்து தன்னை யெவ்வித மியான்க டப்பயே, னெப்படி யிங்கு பாய மேதுதான் கதி யெ னக்கா, மிப்படி யென்றி வற்றை யெவளவு

முணர்கி லேனியா னப்பனே யருளா லிந்த வரந்
தைதீர்த் தென்னை யாள்வாய். 47

இவ்வித முரைத்துத் தன்னை யியல்புடன்
சரணு மெய்தி, வெவ்விய பவதா பத்தால்
வெதும்பிய சீடன் றன்னைச், செவ்விய கருணை
கூர்ந்த சீதள திட்டி யாலே, யவ்விதக் குரவ
னேக்கி யபயமே யளிப்பா னன்றே. 48

வித்துவா னுன வாசான் விதியுடன் றனைய
டைந்து, முத்தியை மிகவி ரும்பி மொழிந்ததை
நன்றாய்ச் செய்யுஞ், சத்தியுள் ளவனுய்ச் சித்த
சாந்திசேர் சீட னுக்குத், தத்துவ வுபதே சத்
தைத் தயையினுற் ருனே செய்வான். 49

வித்துவா னுன மைந்தா வெருளுறே லினியு
னக்குச், சுத்தமாய்க் கேடே யில்லைச் சுழல்ப
வக் கடல்க டக்க, வுத்தம வுபாய முண்டிங்
கூநமி லெதிகள் முன்ன, மெத்தினு லிவைக
டந்தா ரின்றுனக் கதையி சைப்பாம். 50

வித்தரப் பவப யத்தை விரைவிலே நாசஞ்
செய்யச், சத்திசே ரோரு பாயஞ் சகத்தினின்

மேலா யுண்டு, புத்திர வதனு னீயும் புகல்பவக் கடல்க டந்து, நித்தமும் பரமா நந்த நிலைமை யை நண்ணி நிற்பாய். 51

சுத்தவே தாந்த நூலிற் சொல்லிய பொருள்க டம்மி, னுத்தம விசாரத் தாலே யுதித்திடு முண்மை ஞாநம், புத்திர வவற்றி னுலே பொருந் திய பவதுன் பங்க, ளித்தனை யேனு மின்றி யிறந்திடு மிங்குத் தானே. 52

மன்னிய சிரத்தை பத்தி மாசிலாத் தியாநம் யோகம், பன்னிய முமுட்சு வுக்குப் பரமமா முத்தி சேரத், துன்னிய வேது வென்றே துகளிலா வேதந் தானே, பன்னுவ தாலி வற்றைப் பற்றினோர் பந்தம் பற்றார். 53

உன்னிய சிரத்தை யாதி யுத்தம சாதநத் தை, மன்னியே நிலைமை யாக மாசறச் சாதிப் போர்க்கே, வின்னவென் றுணர வொண்ணு வியல்புறு மவித்தை செய்த பிங்மாந் தேக பந்தம் பெயர்ந்திடும் பின்னுங் கேளாய். 54

ஊனமில் பரமாங் மாவா முன்றனக் கஞ்
ஞா நத்தா, லீனமா யனாத்ம பந்த மிசைந்ததா
லிச்சம் சார, மானதிவ் வாத்மா நாத்ம வரு
விவே கத்து தித்த, ஞானமாங் கனலிம் மூலாஞ்
ஞானகா ரியமெ ரிக்கும். 55

என்றவா சானே நோக்கி யந்தநற் சீடன்
சொல்வா. னின்றுநான் செய்வி னுவ லீசனே
யருளாற் கேட்பா, யுன்றனன் முகத்தி னின்று
முத்தர மிதற்குக் கேட்டு. நன்றதாம் பயனே
நண்ணி நான்றுயர் தீர்வ தற்கே. 56

ஏதுதான் பந்த மாகு மெவ்வித மீது வந்த,
தேதுதா னிருப்பி தற்கா மெவ்வித மீதி றக்கு.
மேதுதா னுன்மா வாகு மேதநாங் மாவு மாகு.
மேதுதா னுன்மா நாத்ம வியல்புணர் விவேகஞ்
சொல்வாய். 57

ஈதுகேட் டாசான் சொல்வா னிவ்வவித்
தையினுல் வந்த. வேதமாம் பந்தம் விட்டிங்
கேகசிற் பிரம மாகச், சா துவே யிருப்ப விச்சை

சாரலாற் றங்கி யன்னி. நீதொழி லியாவுஞ்
செய்தோ னின்குலந் தூய்தே நின்னல். 58

தந்தைகொள் ரிணத்தைத் தீர்த்துத் தளர்
வறச் செய்வ தற்கு. வந்ததன் மைந்த ராதி
வையகந் தன்னி லுண்டு, சிந்தைசேர் பந்தந்
தன்னைச் சீக்கிரஞ் சிதைப்ப தற்குப், பந்து
வாய்த் தன்னை யன்றிப் பாரினி லாரு மில்லை. 59

சென்னிசேர் பார மாதி செய்ததுன் பம்வி
டுக்க, வந்நிய ருலகி லுண்டிங் கடைந்ததன்
பசியே யாதி, தன்னினல் வந்த துன்பந் தவிர்த்
திடத் தன்னை யல்லா, லந்நிய ரில்லைப் பந்த
மகற்றலு மிந்த வாறே. 60

பரவிய மருந்தை யுண்டு பத்தியஞ் செய்
வோ னுக்கே, யரியனே பிணிக ணீங்கு மன்றி
மற் றொருஞ் செய்த, கருமம்யா தொன்றி னலுங்
கருதிய பிணிக ணீங்கா, வுரவிய பந்த நீக்க
முரைத்தவிந் நீதி போலாம். 61

ஞாநல் விழியாற் றன்று னற்பொரு ளுணர வேண்டு, மேனையோர் ஞாநி யைக் கொண் டிப்பொரு ளுணர வொண்ணு தீமிற் றனது கண்ணுலிந்துவை யுணர்வ தன்றி,யேனை யா தொன்றி னுலு மிந்துவை யுணர லாமோ. 62

கருதிய வவித்தை காமங் கன்மமே யாதி யாகப், பரவிய பவமா கின்ற பலமுறும் பாசந் தன்னைக், கருதொணுக் கற்ப கோடி காலமோ டிடினு மிந்தத், தரணியிற் றன்னை யல்லாற் றவிர்ப்பதற் கியாவர் வல்லோர். 63

ஓங்கிய பரசீ வைக்கிய முணர்ந்திடு முணர் வா லன்றிச், சாங்கிய மதத்தி னுலுஞ் சார்ந் திடு மியோகத் தாலும், வீங்கிய கன்மத் தாலும் வேறுபா சனையி னுலு மோங்கிய முத்திப் பேற்றை யொன்றுவ தென்று மில்லை. 64

தன்னுடை வீணை ரூபத் தகைமையுந் தந்தி யாலே, பன்னிய காநஞ் செய்யும் பான்மையுஞ் சபையின் கண்ணே, மன்னிய சநங்க டம்மின்

மநமகிழ் மாத்தி ரத்தைத், துன்னிடச் செய்யு மன்றித் தோன்றலாந் தன்மை செய்யா. 65

ஈதுபோ லுயர்ந்த வாக்கு மிசைந்தசொற் சாதுரீய மோதிய நூல்க டம்மி னுரைசெயுஞ் சத்திப் பாங்கும், பூதமா வித்தை யுந்தன் போ கத்தின் பொருட்டா லன்றி, யேதமின் முத்திப் பேற்றை யிசைவதின் பொருட்டா லன்றால். 66

பரமமாந் தத்து வத்தைப் பார்த்துநன் றுணர்ந்தி டாக்காற், பரவிய நூல்க ளோதல் பலமேது மிலாத தாகும். பரமமாந் தத்து வத்தைப் பார்த்துநன் றுணர்ந்தி டுங்காற்,பரவிய நூல்க ளோதல் பலமேது மிலாத தேகாண். 67

ஆதலான் மநம யக்க மடைவதற் கேது வான, காதல்செய் சப்த சாலக் காநகந் தன்னை விட்டுத், தீதிலாப் பிரம வித்தாந் தேசிகன் றன் பாற் சென்றிங் கேதமில் பிரமந் தன்னை யிலங் கவே யுணர வேண்டும். 68

பரவுமஞ் ஞாந மாகும் பாம்பிநுற் கடிக்கப் பட்டோர்க். கருமையாம் பிரம ஞாந மாகிய

மருந்தை யன்றி மருவிய மறைகளாலென் மற்றுள நூல்களாலென், பரவிய மருந்தி னுலென் பகருமந் திரங்க ளாலென். 69

மருந்தினைப் புசித்தி டாது மருந்தெனும் வசநத் தாலே. பொருந்திய தனது ரோகம்போகுவ தெங்கு முண்டோ, திருந்திய பிரம ஞாநத் திறமையைச் சேர்ந்தி டாது, பரிந்துநான் பிரமமென்று பகரலாற் பந்தம் போமோ 70

வீரராம் பகையோர் தம்மை வென்றிடாதகில மான, பாரினுட் பாக்கி யத்தைப் பாங்குறப் பற்றி .டாதிங், காருநா னரச னென்றேயறைந்திடும் வசநத் தாலே, தீரனு மரச னுகித் திகழ யோக் கியனே சொல்வாய். 71

திரிசிய நாசந் தன்னைத் திரமுறச் செய்திடாமற், பிரமமா மாந்ம ரூபம் பிறங்கவேயுணர்ந்தி டாமற், பரமமே நானென் றேதும் பகரன்மாத் திரமே யான, வுரையினுற் பிரமமாக வொன்றிடு முத்தி யுண்டோ. 72

தரணியுட் டநத்தைச் சேரத் தகைமைசே ராப்த னின்சொல், தரணியைப் பிளத்த லந்தத் தநத்தின்மேற் சிலையைத் தள்ளல், மருவியே யெடுத்த லிந்த வாறெலா மியாது மின்றி, விரி வுறு வாக்காற் ருனே வெளியுற வதுதான் வாரா. 73

ஈதுபோற் பிரம வித்தி னிடத்தினற் சிரவ ணத்தோ, டேதமில் மநநந் தியாந மேகமாஞ் சமாதி ஞாந, மீதெலா மன்றி மாயை யிரு ளினுன் மறைக்கப் பட்ட, கோதிலாத் தன்சொ ரூபங் குதர்க்கமே கொண்டு மேவார். 74

ஆதலால் விவேகி யானோ ரனைத்துபா யத்தி னுலுந், தீதிலாத் தற்சொ ரூபந் தெரிந்துபந் தம் வி டுக்க, நீதியாய்த் தாங்க டாமே நித்தமு முயல வேண்டும், மோதுரோ காதி நீக்க முயன்றிடு நீதி யேபோல். 75

பாத்திர னுன மைந்தா பகர்ந்திடு நின்வி னுவல், சாத்திர ஞாநி கட்குச் சம்மத மாகி மே லாய்ச், சூத்திர மொத்த தாகிச் சூக்குமப் பொ

ருளு டைத்தாய்க், காத்திர மெடாமு முட்சுக் கருதிடத் தக்க தாகும். 76

புரிந்தவிவ் வினவ லுக்குப் பொருந்திய வுத்த ரத்தைப், பரிந்துநா மின்று னக்குப் பகருவம் பவபந் தத்தால், வருந்திய நீயி வற்றை மநத்திநே காக்கி ரத்தோ. டிருந்துகே ளிவற் றுற் பந்த மீதுதா னுடனே நீங்கும். 77

புத்திமா ஞன மைந்தா பூரண முத்தி சேர, நித்தமில் லாத தான நிகிலமாம் பொருள்க ணின்று, மெத்தவும் விரதி தன்னை மேவுதன் முன்ன ரேது, சித்தமார் சாந்தி தாந்தி திதிட்சை யும் பின்ன ரேது. 78

பின்புதன் கன்ம மியாவும் பேணியே துறப்ப தேது, பின்புவே தாந்த வர்த்தம் பிறங் கவே கேட்ட லேது. பின்புதான் கேட்ட வர்த் தம் பிரித்துணர் மநநமேது, பின்பிடை விடாம லென்றும் பேணிய தியாந மேது. 79

சத்திய நிர்வி கற்பச் சமாதியா லமைவ தான, வத்துவின் சாட்சாத் கார வலியினுற் பரமா நந்த முத்தியை யிவ்வி டத்தே ழுமுட் சுத்தான் பெற்று நிற்ப னுத்தம முத்தி சேரு மொழுங்கிதே யுண்மை யீதே. 80

விரிவுறு மாங்மா நாங்ம விவேகம்யா துறுதி யாக, வரியனே யின்று நின்று லறிந்திடத் தக்க தத்தை, யுரைசெய்க் கேட்டு நன்ரு யுளத் தினுட் டரிய வற்றிற், புரையநாங் மாவை முன்னம் புகலுவாம் பொருந்திக் கேளாய். 81

மச்சைமே தசுவெ லும்பு மாமிச முதிரஞ் சர்ம, மிச்சைசெய் சுக்கி லம்மிவ் வேழுதா துக்க ளூற்றிவ், வுச்சமாஞ் சிரசு பாத மூருகை முதுகு மார்பென். றிச்சட வங்கோ பாங்க மியாவையு மிசைந்த தாகி. 82

இயானென தென்ன வெங்கு மியாவரு மறிவ தாகி, யீநமா மோக மெல்லா மிருப்பதற் கிடமே யான, வூநமா மிவ்வு டம்பே யொன்றிய

தூல தேக, மானதென் றுரைப்பர் மைந்தா
வகிலமு மறிந்த மேலோர். 83

சுத்திய வாந மாதிச் சூக்குமப் பஞ்ச
பூதம், புத்திர வொன்றி லொன்று புகுந்துபஞ்
சீக ரித்து, மெத்தவுந் தூல மாகி மேவிய தூல
வாக்கைக், கொத்தகா ரணம தாக வொன்றிடு
மற்றுங் கேளாய். 84

மருவிய பஞ்ச பூத மாத்திரை யைந்து
மெங்கும், புரிவுசெய் சத்த மாதிப் புலன்க
ளாய்ச் சீவ ருக்குக், கருதிய சுகம ளிக்கக்
காரணம் போலத் தோன்றும், பரவிய வவைக
டம்மைப் பற்றினோர் கெடுவ தைக்கேள். 85

பேசிய புலன்க டம்மிற் பேதையா மெந்த
மூர்க்க, ராசையாம் பாசத் தாலே யழுந்தவே
கட்டுண் டாரோ, தூசுறு தங்கள் கன்மத்
தாதனு லிழுக்கப் பட்டு, வீசவே கீழு மேலும்
வெறிதவ ரலைந்து சோர்வார். 86

*உலவுபாம் பானை விட்டி லூருமீன் வண்டிவ் வைந்து, மொலிமுதற் புலனென் றொன்றி லுவந்ததா லிறக்கு மாகிற், புலனிவை யைந்தி னும்மால் பொருந்திய புருடன் சேரும். பலவிதத் துன்பந் தன்னைப் பகர்ந்திட முடியு மோசொல். 87

தவ்விய புலனை னைத்துந் தன்னுடைத் துக ளி னாலே,வெவ்விய கருநா கத்தின் விடத்தினுங் கொடிதே யாகுங், கவ்விய வவ்வி டந்தான் கடித்தலுற் றவனைக் கொல்லும், தவ்விய புலன் க ணுற்பார்த் தவரையுங் கொல்லு மன்றே. 88

பரவிய புலன்க டம்மைப் பற்றிய வாசை யாகு, முரவிய மாபா சத்தை யுள்ளவா றறுத்த வன்று, னருமையா முத்திப் பேற்றை யடைந் திடச் சதுரன் மற்றேன், கருதிய வாறு நூல் கள் கற்கினுஞ் சதுர னன்றால். 89

* "உலவுமா னியானை" என்றும் பாடம்.

திடமிலா விரதி யோடே தீர்க்கமாம் பவ மா கின்ற, கடலுடைக் கரையி லேறக் காதல் செய் முமுட்சுத் தன்னே, யடருமா நக்க ரந்தா னவனுடைக் கண்டத் திழ்த்திக். கடலுடை மத்தி யத்திற் கடிதினின் மூழ்க வைக்கும். 90

ஆதலால் விடய வாசை யாகிய நக்க ரத்தை, யாதொரு முமுட்சு வானே லிலங்கிய விவேக மாகுங், கோதிலா வசியி னலே கொய்வனன் னவனே யாதும், வாதக மிலாம லிந்த வாரிதி கடக்க வல்லோன், 91

சுத்தமாம் புத்தி யின்றிச் சூழ்புல னெறி யிற் சென்றேன், மெத்தவுந் துன்பந் துஞ்சன் மேவுவன் மேலு மேலு, முத்தம புத்தி யோடே யுயர்ந்தவ னுசான் சொல்லி, வைத்தநன் னெறிந டந்தோன் வரமான பயனே சார்வான். 92

நிச்சய மீதே மைந்தா நினக்குநன் முத்தி சேர, விச்சையே யிருக்கு மாகி லிப்புல னனைத்

தை யும்நீ, துச்சமாம் விடத்தைப் போலத் தூ
ரவே போகத் தள்ளி, யுச்சமா நற்கு ணத்தை
யொழிவற வுவந்து சார்வாய். 93

நித்தமு மருட்க ளிப்பு நேர்நடை பொறு
மை மற்றுஞ், சுத்தமாம் சாந்தி தாந்தி சூக்கநூ
லுரைத்த மற்ற. வுத்தம குணம னைத்து மோங்
கிய சுதையைப் போலப், புத்திர வன்பி னோடே
புந்தியிற் பொருந்து வாயே. 94

சாதுவே சந்த தம்நீ சகலகா ரியமும் விட்
டே, யாதியில் லாவ வித்தை யாக்கிய பந்தந்
தன்னின். கோதிலா முத்தி தன்னைக் குறைவ
றத் தேடு வாயிவ், வேதமாந் தேகந் தன்னை
யெவளவு நம்பி டாதே. 95

மோதிய விந்தத் தேகம் முடிவிலே பரார்த்த
மேயா, மீதினை யாவன் காப்ப விச்சைசெய்
தபிமா னிப்ப, னோதிய வவன்றே கத்தி லொன்
றிய வபிமா னத்தாற். கோதிலாத் தன்னுந் மா
வைக் குமரனே கொன்ற வன்றான். 96

மருவிய தேகங் காக்கும் மதியுடைத் தாகி யாவ. னருமையா மாத்ம ரூப மறிந்திடக் காதல் செய்வ; னுரவிய நக்க ரத்தை யொன்றிய தெப்ப மென்று, கருதியே கடக்க வன்னேன் காதல் செய் கின்ற வன்ருன். 97

தேகமே யாதி யான திரளிலே தியங்கா நின்ற, மோகமே பெரிய காலன் முமுட்சுவாம் புருட னுக்குச், சோகமா ரம்மோ கத்தைச் சுத் தமாய் வென்ற வன்ரு. னேகமா முத்திப் பேற் றை யெய்திடச் சதுர னுனேன். 98

மோகம்யா தினைமுன் னுள்ள முநிவர்கள் வென்று நன்ரு, யேகபூ ரணவாங் மாவி னேத் திய பதம டைந்தார். தேகதா ரஞ்சு தாதித் திர ளிலே யிசைந்த வந்த, மோகமா காலன் றன்னே முழுதும்வென் றப்ப தஞ்சேர். 99

மெத்திய தொக்கு மேதை மேதசு மச்சை யத்தி, சுத்திய நரம்பி ரத்தஞ் சுழல்மல மூத்தி

ரங்க, ளித்தனை வகைநி ரம்பி யிருக்குமித் தூல
தேக, மித்தினும் வைய கத்தி லிகழ்ந்திடும் பொ
ருள்வே றுண்டோ, 100

முந்திய கன்மத் தாலே முன்சொன தூல
பூதந், தந்தவித் தூல தேகந் தடையிலா வாந்
மா வுக்குத், தொந்தபோ கம்பு சிக்கத் தொடர்ந்
தவோ ரிடமே யாகு, மிந்தவாக் கையின வத்
தை யிலங்குசாக் கிரமே யாகும். 101

பெருகிய கந்த மாலை பெண்முதல் விவித
தூலப், பொருள்களின் போகந் தன்னைப் புறத்
துள பொறிக ளாலே, கருதுமித் தேகத் தோடே
கவ்வுதா தாந்மி யத்தாற். பரவிய வாந்மா வுண்
ணும் பகர்ந்தசாக் கிரமி தேயாம். 102

ஆகையாற் சாக்கி ரத்தி லறியலா மிந்தத்
தேகம், வாகிய பவம னைத்தும் வந்தது புருடர்க்
கத்தா, லாகுமோ ரில்வாழ் வோனுக் கமைந்த
வோ ரில்லம் போலப், போகவா லயமே யாகும்
புகலுட லாந்மா விற்கே, 103

ஓதிய வித்தே கத்திற் குற்பவஞ் சரைம ரித்தல். சாதுவே பெருத்த லாதி சகலமுந் தரும மாகு. மேதமாஞ் சைச வம்மற் றெய்திய கௌமா ராதி. யாதுமே யித்தே கத்தி லிசைந் துள வவத்தை யாகும். 104

வங்மாச் சிரம மாதி வகுப்பிதன் னியம மாகும். முன்னுமா நாவ மாந முதலிதன் விசேட மாகு. மின்னல்செய் பிணிக ளெல்லா மிருப்பிட மிந்தத் தூலங், துன்னிய சூக்க தேகத் தொடர்பினை யினியி சைப்பாம். 105

சிரவணந் தொக்குச் சட்சுச் சிங்நுவை நாசி யைந்தும், பொருள்களை யறிவ தாலே போத விந் திரிய மாகும், பரவிய வாக்குப் பாணி பாத பா யுருவு பத்தங், கருமமே செய்வ தாலே கருமவிந் திரிய மாகும். 106

துன்னுமுட் கரண மொன்றே தோன்றிய விருத்தி யாலே, மன்னிய மநது புத்தி மற்றகங்

காரஞ் சித்த, மென்னவே நான்க தாக விசைந் ததா மெவ்வி டத்தும். பன்னிய விதன்வி ருத்திப் பகுப்பினைப் பகரக் கேளாய். 107

விரிவுறு சங்கற் பாதி விருத்தியான் மநமி தாகும், பொருளுணர் நிச்சயத்தாற் புகன்றபுத் தியுமி தாகும், பரவிய வபிமா நத்தாற் பகரகங் கரமு மீதாம், பொருளநு சந்தா நத்தாற் புகன் றசித் தமுமி தாமே. 108

விரிவுறு பிராண னென்றே விருத்தியின் பேதத் தாலே, பரவிய பிராண பாநன் பகர் விபா நன்னு தாந, னுரவிய சமாந னைந்தா முதகசொன் னுதி தாமே, பரவிய விருத்தி யாலே பலவித மாவ தேபோல். 109

சிரவண மாதி யைந்துஞ் செறிந்தவாக் காதி யைந்தும், வருபிரா ணாதி யைந்து மரு வும்வா னாதி யைந்து. மிருதய மாதி நான்கு மெய்திய வவித்தை காமம், பரவுகன் மம்மிவ் வெட்டும் பகர்புரி யட்ட கங்காண். 110

ஈதுதான் சூக்கதேக மீதபஞ் சீக ரித்த. பூதமே தந்த தாகும் பொருந்துவா தனையு டைத்தாஞ், சாதமார் கன்ம போக சாதந மாங்மா விற்கீ. தோதிய வஞ்ஞா நஞ்செய் யுபாதியா மநாதி யீதாம். 111

நவித னவத்தை யாமிக் கநவினி லுள்ள மொன்றே, நநவுகா லத்த நேக நாடுவா தனைக ளாலே தனிபதாய்க் காத்ரி ராதித் தன்மையை யடைந்து தோன்றுஞ் சொனவவித் தையிலே யாங்மா சுத்தசிற் சோதி யாகும். 112

சருவசான் ருன வாங்மா சாற்றிய வவத்தை தன்னி லொருமநோ மாத்தி ரத்தை யுபாதியா யுடைத்தா யங்குப், பரவிய பாவ மாதிப் பல விதக் கன்மந் தோடு. மருவிடான் ருனே யாக மாசற விலங்கா நிற்பன். 113

யாதினு லிந்த வாங்மா வென்றுமே யசங்க மாகு. மாதலா லவத்தை யீதி லம்மந வுபாதி யாலே, சாதமாங் கன்ம மெல்லாஞ் சற்றுமே

சார மாட்டா, தாதியாஞ் சோதி யாகி யகிலமும்
விளக்கு விக்கும். 114

அறிவுறு வாங்மா விற்கிங் ககிலமாந் தொழி
லுஞ் செய்யச், செறியுமிச் சூக்க தேகஞ் சேர்ந்த
வோர் கரண மாகும், முறியுளி வாச்சி யாதி
முற்றுமோர் தச்ச னுக்கிங், குறுதொழி லியா
வுஞ் செய்ய வொன்றிப கரண மேபோல். 115

ஓதிய கரணந் தானே யுள்ளகன் மங்க
ளெல்லா. நீதியா யாங்மா முன்னர் நித்தமுஞ்
செய் வதாலே, சா துவே சகலத் திற்குஞ் சாட்சி
யா மாங்மா வெந்தப், போ துமே யசங்க மாகும்
பொருந்திடா தொருவி காரம். 116

மெத்தவும் பார்க்குந் தன்மை மெதுவ
தாய்ப் பார்க்குந் தன்மை, சுத்தமாய்ப் பாராத்
தன்மை சுழன்றகண் குணதோ டத்திற், கொத்
ததாய் வருவ தாலே யுரைத்தவை கண்ணின்
றர்மஞ், சுத்தமா மாங்மா விற்குச் சொன்னவை
தர்ம மாகா, 117

ஈதுபோற் செவிட்டுத் தன்மை யெய்திய மூகத் தன்மை, யாதிப சோத்தி ராதி யடைந்த தர் மங்க ளாகும். போதபூ ரணமா யாதும் பொருந்திடா வாங்மா விற்கிங், கோதிய விகார மெல்லா மொன்றிய தர்ம மன்றால். 118

பின்னுமுட் புறமார் மூச்சுப் பெற்றகொட் டாவி தும்மல், மன்னிய மரண மாதி மற்றுள சலந மியாவுந், துன்னும்ப்ரா ணாதி தர்மந் துயர் தரு பசிதா கங்கள், பன்னிய பிராண னென் றின் பரவுதர் மங்க ளாகும். 119

ஆடுமுட் கரண மொன்றே யமைசிதா பாசத் தோடே, கூடியிச் சட்சு வாதிக் கூட் டமா மவய வத்தி, லோடிநா னென்ப தாக வுரமதா யபிமா னிக்கும், பாடுமவ் வபிமா நந்தான் பகையகங் கார மாகும். 120

அகங்கரங் கர்த்தா போக்தா வதுவேதான் சத்து வாதி, மிகுந்தமுக் குணவ சத்தால் மேவிய

வவத்தை மூன்றும், வகுத்துதா னநுப விக்
கும் வந்துள விடய நன்றேற், சுகிக்குமவ் விட
யங் நீங்கேற் சோர்ந்திடு மதுதான் காணே 121

ஆதலா லின்ப துன்ப மகங்கரத் தர்ம மே
யாஞ், சாதுவே யகண்டா நந்த சாகர வாங்மா
விற்கே, தேதுமே யில்லை யென்று மெய்திய
விடய மெல்லா, மோதுமாங் மாப்பொ ருட்டா
லொன்றிடு பிரிய மாக, 122

ஓதிய விடயந் தானே யுள்ளவா பிரிய
மாகா, தேதமி லாங்மாத் தானே யெவர்க்குநற்
பிரிய மாகு, மாதலா லாங்மா வென்று மகண்
டவா நந்த மேயாங், தூயதா மாங்மா விற்குத்
துன்பமோர் காலு மில்லை. 123

புரிவுசெய் சுழுத்தி யின்கண் புலனிலா
வாங்மா நந்தந், திரமதா யாவ ராலுந் திநமநு
பவிக்க லாகுஞ், சுருதிதான் பிரத்யட் சந்தான்
சொல்லிய வைதி கந்தான். பரவிய வநுமா நந்
தான் பகர்ந்ததிற் பிரமா ணங்கள். 124

அரியனே கார ணுக்கை யடைவினி யறை
யக் கேளா, யிருளவ்வி யத்த மாயை யேதமா
மவித்தைப் பேராய்ச், திரிகுண வடிவ மாகித்
திருசியங் கட்கு மேலாய்ப், பரவியே யநாதி
யாமோர் பரசிவ சத்தி யுண்டால். 125

தரணியி லந்தச் சத்தி தன்னுடைக் காரி
யங்கொண், டருமையாம் புத்தி மான்க ளாகி
ஞே ரநுமா னிக்கு, முருவமாய்ச் சகம னைத்து
மொழுங்குறப் படைப்ப தாகி, யொருவித மீதா
மென்ன வுரைத்திட வொணுதை தாகும். 126

ஈதுசத் தான தல்ல வீதுதா னசத்து மல்ல,
வீதுமற் றுபய மல்ல வீதுதான் பிந்ந மல்ல
வீதுமற் றபிந்ந மல்ல வீதுதா னுபய மல்ல
வீதுசா வயவ மல்ல விதுநிர வயவ மல்ல, 127

ஈதுமற் றுபய மல்ல விதுவிசித் திரமே
யாகி, யாதிதென் றுணர வொண்ணு வநிர்வச
நீய மாகுந், திதிலாப் பரசீ வைக்யத் தெரிவுதா

னிதைய மிக்குஞ், சாதுவே பழுதை ஞாநஞ் சர்ப்பமா லழிப்ப தேபோல். 128

சகலரு மறிவ தான தன்னுடைக் காரியத் தால், மிகவுமெங் கும்ப்ர சித்த மேவிய முக்கு ணந்தான், புகல்பரன் சத்திக் குண்டு புகன்றவிம் முக்கு ணத்தி, லகலிரா சதகு ணத்தா லாகும் விட் சேப சத்தி. 129

கிரியையே வடிவ மாகிக் கிட்டும்ப்ர விர்த்தி யெல்லாந், தருவதற் கேது வாகத் தங்கும்விட் சேப சத்தி, பரவிய காம மாதிப் பலதுய ராதி யான, விருதய விகார மெல்லா மீதிரு லிசையு மென்றும் 130

உரவிய காமங் கோப முலோபடம் பம்ம கந்தை மருளுறு மசூயை யீர்ஷை மச்சர முதல் வி காரந். தரணியி லிராச தத்தின் றர்மமா மிக்கு ணந்தான், புருடரிற் பிரவிர்த்தி செய் யும் புரையினுற் பந்த வேது. 131

இருளுறு தமகு ணத்தா லீன்றதா வரண சத்தி, பரமமாம் வத்து வித்தாற் பார்க்கலாம் வேறே யாகப், பிரிவுறு விட்சே பத்தைப் பெற் றவே துவிஞ லீதே, புருடரின் பவத்தி னுக்குப் பூருவ கார ணங்காண். 132

பெரிதுபண் டிதஞ ஞலும் பிரஞ்ஞையுள் ளவஞ ஞலு, மருமையாஞ் சூக்க மார்த்த மற வறிந் தவஞ ஞலுஞ், சருவவல் லவஞ ஞலுஞ் சாற்றுமா வரண சத்தி, யிருளினுன் மூடப் பட்டோ னியல்பினை யியம்பக் கேளாய். 133

அருமையாங் குரவன் மேலோ ராங்மரு பத்தை யன்பா, லுரமதாய் வெகுவி தத்தா லுணர்த்தினு முணரா னன்றேன். பிரமத்தா லாரோ பித்த பேதமாம் பொருளைத் தானே, திரமெனு நன்றி தென்னுந் திபங்கியே யவலம் பிப்பன். 134

ஆதலாற் பொல்லாங் காக வமைந்ததா மதகு ணத்திற், சாதமா யுரமே யாகச் சார்ந்த வா வரண சத்தி, சா துவே யற்ப ராலே சாலவுங் கடக்க வொண்ணு, தீதுடை வல்ல பத்தை யென்னவென் றுரைப்ப மந்தோ. 135

ஈதினே டிசைந்தோன் றன்னே யேதுமே யறியாத் தன்மை, போதினு முணராத் தன்மை யுணரினு மையஞ் சேர்கை, பேதமா யறியுந் தன்மை பேசிய விவைக டூரா, வேதவிட் சேப முந்தா னென்றுமே யிழுத்த லைக்கும். 136

நித்திரை சோம்பல் வெண்மை நிகிலமுந் தவிர்தன் மோகம், புத்தியின் சாட்டி யாதிப் புகறமோ குணவி கார, மித்தினே டிசைந்தோ னியாது மெவளவு முணரா வண்ணம், நித்த முந் துயில்வோன் போலு நீண்டதூண் போலு நிற்பன். 137

சத்துவ குணஞ்ச லம்போற் சாலவுஞ் சுத்த மேனுந், தொத்திய விருகு ணத்தைத் தொடர்ந்

ததாற் பவத்துக் கேது. நித்தமு மாங்மா வித்தி னிகழ்வுறப் பதிபிம் பித்துச், சுத்திய சடம னைத்துஞ் சூரியன் போல்வி ளக்கும். 138

புருடனன் முயற்சியாலே பூருவம் போல மெத்த, விருகுண மிகுந்தி டாம லியங்கிய சத்து வத்தின், மருவிய தருமங் கேளாய் மாநமில் லாமை யாதி வரியம நியம மாதி வரன்மிகு சிரத்தை பக்தி. 139

திரமுறு முமுட்சுத் தன்மை தெய்வசம் பத்தி மற்றும், புரையுறு செய்கை யின்கண் பொருந்திடா மீட்சி யாதி, சருவமு மிசிர மான சத்துவ குணத்தின் றர்மஞ், சருவதா சுத்த மான சத்துவ மகிமை கேளாய். 140

சுத்தசத் துவகு ணத்தின் சூக்குமத் தெளிவி னலே, நித்தியாநந் மாநு பூதி நிகழ்ந்திடும் பரம சாந்தி, சித்தியாந் திருப்தி மேவுஞ் சேர்ந்திடு மிகக்க ளிப்பு, நித்தமு மாநந் தஞ்செய் நின்மல நிட்டை கூடும். 141

இவ்வித முக்கு ணத்தோ டிசைந்தவவ்
வியத்த சத்தி. செவ்விய வாங்மா விற்குச் சேர்ந்
தகா ரணவு டம்பாம். விவ்விதப் பொறிம
நங்கள் விருத்தியில் லாச்சு ழுத்தி, யெவ்வமா
ரிவ்வு டம்பி னிசைந்துள வவத்தை யாகும்.

அகிலமாம் விதமு மான வறிவிலாச் சுழுத்தி
யின்க, ணிகன்மநம் வித்தாய் நிற்கு மேதுமே
யுணர்கி லோமியாஞ். சுகமதாய்த் துயின்றே
மென்று சொலும்பிர சித்தி யாலே, மிகுசுக
வாங்மாத் தானே மிஞ்சியே யிதில்வி ளங்கும்,

உடலுயிர் பொறிபு லன்க ளுலேமந மகங்
கா ராதி, யிடர்தரு விகார மியாவு மின்பதுன்
பாதி யும்மற். றடர்தரு வாநமாதி யாகிய சகம
னைத்து, மிடரவ்வி யத்த மீறு மிவையெலா
மநாங்மா வாகும். 144

மாயைகா ரியமே யான மகத்தத்து வாதி
யாயிக். காயமீ றுன யாவுங் கலங்கிய பொய்யே
யாகுந், தூயனே சொன்ன வெல்லாந் தொகுத்

தநாங் மாவு மாகும், நீயிதைக் கான னிரி னிக
ரென நினைதி யென்றும். 145

எத்தைநன் றுணர்ந்தோன் பந்த மிகந்து
கே வலனு மென்றும், பத்தனே யினியு னக்கப்
பரமாங்ம சொருபஞ் சொல்வாம், நித்தமு நானு
னென்று நிகழ்ந்திடு மநுபூ திக்கிம், மெத்திய
பொருளே யாகி மெய்ம்மையாய் நிற்கு மாங்மா.

திரிவித வவத்தை கட்குந் திருந்திய சாட்சி
யாகி, விரிவுறு பஞ்ச கோச விலட்சண மாகி
யாது, மருவிய மநவி ருத்தி மற்றதன் பாவா
பாவங், கருதிய வவத்தை மூன்றிற் கண்டிடு
மஃதே யாங்மா. 147

யாதனைத் தினையுங் காணு மியாதினை யனைத்
துங் காணு, யாதுதான் புத்தி யாதி யாவுமே
சித்தாய்ச் செய்யும், யாதினைப் புத்தி யாதி
யாவுமே சித்தாய்ச் செய்யா, தோதிய வதுதா
னேயுன் னுடையவாங் மாவா மைந்தா. 148

யாதிலுற் சகம னைத்து மெங்குமே பரவ லாகும், யாதினைச் சகம னைத்து மெவளவும் பரவமாட்டா யாதொரு போத ரூப மிசைந்து விச் சடம னைத்து, நீதியாய் நிகழு மீதே நின் னுடை யாங்மா வென்றும். 149

தீதுட லிந்தி யங்க டியங்கிய மநது புத்தி, யீதுதன் செய்கை யின்கண் ணேவிடப் பட்ட தேபோற், சாதுவா மைந்த யாதின் சந்நிதி மாத்தி ரத்தா, னீதியாய்ச் செல்லு மீதே நின் னுடை யாங்ம ரூபம். 150

தொத்திய வகங்கர ராதித் தூலமீ ருன யாவுஞ், சுத்திய புலன னைத்துஞ் சுகாதியுங் கடமே போல, நித்திய போத மாகி நிலைமை யாய் நிகழா நின்ற, வெத்திறு லறிய லாகு மீதுநின் னுங்மா வாகும். 151

யாதினு லுயிரும் வாக்கு மியாவுமே யியங்கு மந்தப், போதமா மந்த ராங்மாப் பூரணன் புராண னென்றும், பேதமி லகண்டா நந்தன் பெருகிய

வேக ரூபன், சாதமார் விருத்தி தோறுஞ்
சாட்சியாய்ச் சார்ந்து நிற்பன், 152

சாதுவே யித்தே கத்திற் சார்மநக் குகை
யின் கண்ணே, யோதுமவ் வியத்த விண்ணி
லொளிர்ந்திடு மிந்த வாங்மா, பேதமாம்
பொருளை யெல்லாம் பெருகிய தன்றே சாலே,
நீதியாய் விளக்கும் விண்ணி னிகழ்ந்திடு மிரவி
பேபோல். 153

அடர்மந வகங்கா ரங்க ளாக்கிய விகார
மியாவு, முடல்பொறி யுயிர்கள் செய்யு முலைத்
தலு முணரு மாங்மா, சுடுகன லயப்பிண் டம்
போற் சொல்லிய வனைத்தி லேடுங், தொடரி
னும் விகார மேவான் சொற்பமுஞ் செய்தோ
ழுகான், 154

சாதுவே யிந்த வாங்மா சநநமா கான்ம
ரிக்கா, னேதுமே வளர்வு றுன்மற் றிளைத்தி
டான் விகாரி யாகா, னேதமா மிந்தத் தேக
மிறக்கினு மிறவா னித்தன், பேதமாங் கடமி
றக்கிற் பெருகுவா னிறப்ப துண்டோ. 155

பத்தனே பகுதி யாதிப் பகுப்பினுக் கெல்லாம் வேருய்ச், சுத்தசிற் சொருப மாகிச் சுழல்வுறுஞ் சதசத் தெல்லா, நித்தமும் விளக்கிவைத்து நிருவிசே டம்பொ ருந்துஞ், சத்தியப் பரமாங் மாவே சாக்கிரா தியிலி லங்கும் 156

நித்தமு நானு னென்றே நிலைமையாய் நிகழா நின்று, புத்தியின் சாட்சி யாகப் பொருந்திய பரமாங் மாவைச், சித்தவே காக்கி ரத்தைச் செறிந்துநான் பிரம மென்றே, புத்தியின் றெளிவி னுலே புலனுற வுணர்தி மைந்தா. 157

நித்தமு நின்னுங் மாவை நின்னிடை நீயுணர்ந்து, தத்திய சநந மாதித் தரங்கமாய்ப் பாரமற்ற, கத்துசம் சார மாகுங் கடலினைக் கடந்து நன்ருய்ச், சத்தியப் பிரம மாகிச் சார்பயன் சார்ந்து நிற்பாய். 158

அந்நிய வநாங்மா விண்கண் ணகமெனும் புந்தி பந்த, மின்னது புருடர்க் கெல்லா மேதமா மஞ்ஞா நத்தாற் றுன்னிய சநந மாதித் துயர்தரு

மேது வாக, மன்னுமிவ் வஞ்ஞா நத்தின்
மயலினை மற்றுங் கேளாய், 159

புத்திர வெண்மை யாலிப் பொய்யுடன் மெய்
யென் றெண்ணி, யித்தினி லாங்ம புந்தி யிசைந்
திதைப் புலன்க ளாலே, நித்தமும் வெகுவாய்க்
காப்பர் நிகிலருங் கோச கார.மெத்துவாய் நூல்க
ளாலே மேனியைக் காப்ப தேபோல். 160

சதுரனே யவிவே கத்தாற் சர்ப்பமே யிரச்சு
வென்னும் மதிநிகர் தமசி னலே மறைந்திடப்
பட்டோர்க் கெல்லா மதுவலாப் பொருளிடத்தி
லதுவெனும் புந்தி யுண்டா. மதனினு லசத்தின்
மாலே யநர்த்தமாம் பந்த மாமே. 161

அகண்டமாய் நித்த மாகி யவிநாசி யான
போத. மிகுந்ததன் மகிமை யாலே மிகவுமே
விளங்கி மெத்தத், தகுந்ததன் னுன்மா வேயித்
தமமயா வரண சத்தி, யிகழ்ந்திட மறைப்ப தாகு
மிராகுதா னிரவி யைப்போல். 162

நிருமலத் தேசி ஞலே நிகழ்ந்திடுந் தன்ஞுந் மாவை, யிருளுமா வரண சத்தி யிவ்வித மறைத்த லோடும், புருடனிவ் வநாங்மா வான பொய்யுட ஞனே யென்று, கருதுவன் மோகத் தாலே காமமா தியிஞைச் சேர்வன். 163

பின்னரக் காம மாதிப் பெந்தவே துக்க ளாலே, துன்னுவிட் சேபசத்தி துயர்தரும் புருட னுக்கு, முன்னுமா மோக மாகு முதலையால் விழுங்கப் பட்டுத், தன்னுடைச் சொருப ஞாநந் தவிர்ந்தவன் றளர்வ தைக்கேள். 164

அனையவன் மநவ வத்தை யகிலமுந் தன்ன தென்றே, நனியுபி மாநஞ் செய்து நாடிய விடய மென்னு, நினைவுறு விடங்க ளாலே நிரம்பிய வபார மான, கநபவக் கடலின் மூழ்கிக் கலங் குவன் கதிகெட் டோஞய். 165

பாநுவின் கிரணத் தாலே படைத்துள முகிலின் பந்தி, பா நுரு பம்ம றைத்துப் பரவியே வளரு மாபோ, லானதன் ஞங்மா வின்கண்

ணுகிய வகங்கா ரந்தான், மாநமி லாங்ம ரூப மறைத்துடன் வளரு மன்றே. 166

அநகனே யான மைந்தா வழுந்திய மழைக் காலத்திற், கநமுகிற் றிரளி ைலே கதிரவன் மறைக்கப் பட்ட, திநமதிற் பனிமி குந்து தியங் கிய கொடிய காற்று, நனிபுவி யிருக்கின் றோரை நண்ணியே துயர்செய் மாபோல். 167

அகலுமா வரண சத்தி யமலமாந் தன்னுந் மாவை, யிகழுவே மறைக்கும் போதி லேதவிட் சேப சத்தி, மிகவுமே மூட புத்தி மேவிய புருடன் தன்னை, வெதுவிதத் துயர்க ளாலே விவிதமாய் வருத்தஞ் செய்யும். 168

சாதுவே சாற்று கின்ற சத்தியிவ் விரண்டி னலு, மேதமா மிந்தப் பந்த மிசைந்ததாம் புருட னுக்கிங். கிதினுன் மோக முற்றே யெவ னுமிவ் வநாங்மா வாக, வோதிய வுடலாந் மாவென் றுன்னியே மயங்க லாலே. 169

விரிபவத் தருவி னுக்கு வீங்கிய தமசே வித்தா, மருவுதே காங்ம புத்தி மற்றதன் முளை யாங் காமங், தருவதன் றளிராங் கர்மங் தாங்கிய சலமாங் தேக, முரவடிக் கட்டை யாகு முயிர் களே பணைக ளாகும். 170

பொறிகிரை நுனிக ளாகும் புலன்களே மலர்க ளாகுஞ், செறிபல வான கன்மஞ் செய்த்துன் பங்க ளியாவு, முறுபல மப்ப லத்தை யுண்பது சீவ னென்னும் பறவையே யிவித மாகப் பவத்தரு பரவ லாகும். 171

ஓதிய வநாங்ம பந்த மூலவஞ் ஞாந மூல, மீதுதா னநாதி யேனு மேகஞா நத்தி லீறுஞ், சாதுவே சநநந் துஞ்சல் சரைபிணி முதலாங் துன்பம், யாதுமே யிவற்றி னுலே யிசைந்த தாஞ் சீவர்க் கெல்லாம், 172

கரணமார் தெளிவி னுலே கறையறத் திட் டப் பட்ட, வருமையா ஞாந மென்னு மசியி னுற் சிதையும் பந்தம், பரவிய வத்தி ராதிப்

படை கண்மற் றநிலம் வஞ்சி. புரவிய கன்ம
கோடி யொன்றிலுஞ் சிதைய மாட்டா. 173

சுருதியை நம்பி னோர்க்குச் சொன்னதங்
கன்ம நிட்டை, மருவிடு மவற்றி னாலே மன்
னிடுஞ் சித்த சுத்தி, பரவுமச் சுத்தி யாலே பரமு
ணர் ஞாந முண்டாம், விரிவுறும் பவம வற்
றால் வேருட னசிக்கு மன்றே. 174

அந்நிய மிலாத வாந்மா வடைந்ததன் சத்தி
யாலே, மன்னிய வந்ந மாதி மயமதாம் பஞ்ச
கோசந், தன்னினுன் மூடப் பட்டுத் தடையற
விளங்க வில்லை, முன்னிய பாசிக் கொத்தான்
மூடிய வாவி நீர்போல். 175

ஓதிய பாசிக் கொத்தை யுதகநின் றேதுக்
குங் காலை, சாதுவே புருட னுக்குச் சலிலமே
தூய்தாய்த் தோன்றித், தீதுறு தாகந் தாபந்
தீர்ப்பதாய்ச் சுகம ளிக்கு. மேதுவா யுதவு
கின்ற வியல்பினை யிங்குக் கண்டோம். 176

இந்தவா டஞ்ச கோச மிவற்றினை யபவா
தித்தாற், சந்ததா நந்த மாகிச் சாலவு மிலங்கா
நின்ற, பெந்தமில் பரமாங் மாவும் பிரத்தியக்
காங்மா வாக, மைந்தனே தூய்தாய்த் தோன்றி
மாசுக மளிக்கு மன்றே. 177

ஆகையால் விவேகி யானோ னடைந்ததன்
பந்த நீக்க, வேகமா யாங்மா நாங்ம விவேகமே
செய்ய வேண்டு, மூகமாம் விவேகத் தாலே
யுண்மையா நந்த சித்தா, யேகமாம் பரமாங்
மாவை யிங்கறிந் தின்பஞ் சார்வான். 178

மருவிய முஞ்சிப் புல்லின் மத்தியு ளாணி
யைப்போற் றிருசியத் திரளி னின்றுங் திகழ்ந்
திடுந் தன்னுங் மாவை. யருமையாம் புத்தி
யாலே யசங்கமா யசல மாக, மருவிய தென்று
கண்டு மாசற வகுக்க வேண்டும். 179

இவ்விதம் வகுத்த பின்ன ரிங்குள திருசி
யங்க, ளவ்வித வாங்மா வென்றே யநிசமும் பிர
விலா பித்துத் தவ்வற வாங்மா வாகத் தரணிபி

லிருப்ப வன்ருன், செவ்விய முத்திப் பேற்றைச்
சேர்ந்தவ னாக மைந்தா. 180

அந்நமே செய்த தூல வாக்கையே யந்ந
கோச. மந்நமுண் டாலலீ துய்யு மஃதிலா தேலி
றக்குந், துன்னிய மேதை யத்தி தோன்முதற்
கூட்ட மான, வன்னது நித்த சுத்த மாகிய
வாந்மா வாகா. 181

ஈதுமுன் பின்னி லாதா யிடையிலுண்
டாய்க்க ணத்திற், பேதமாய் விகார முற்றுப்
பேசுமோர் நியம மற்றுத், திததாய்க் கடமே
போலத் திருசிய மான தாலே, யாதியா யறுவி
கார மறிந்திடு மாந்மா வாகா. 182

அத்தபா தாதி யான வவயவங் கெடினு
மாந்மா, வுய்த்திருக் கின்ற தாலு மொன்றிய
வந்த வந்தச், சத்திக ணசியா தாலுஞ் சந்தத
மேவப் பட்ட, வித்துனித் தேக மென்று
மேவிடு மாந்மா வாகா. 183

மோதிய மேதை யத்தி மூத்திர மலமே
யாதி, யாதுமே நிரம்பி மெத்த வீநமா யூழ லான,

தீதுட லெவ்வி தத்திற் றிகழ்ந்திடு மாந்மா வாகு,
மீதினை யுணரு மாந்மா விதனிலந் நியமே
யென்றும், 184

ஓதிய வுடலந் தன்னி லொன்றிய தர்மங்
கர்ம, மீதுடை யவத்தை யாதி யாதுமே யறியுஞ்
சாட்சி, யாதலாற் சாட்சி யாக வமைந்தவிவ்
வாந்மா விற்கிங், கீதினில் வேறாந் தன்மை
யென்றுமே சுபாவ சித்தம். 185

மேதைதொக் கத்தி யாதி மேவிய கூட்ட
மான, வேதமாந் தேக நானென் றெண்ணுவன்
மூட னேன், கோதிலா விசார சீலன் குரம்
பையின் வேறே யான, வாதியா மாந்ம ரூப
மகமென வறிவன் மைந்தா. 186

உடலிது நானே யென்றிங் குன்னுவன் மூட
னே. னுடலுயி ரிரண்டு நானென் றுன்னு
வன் கரும ஞானி திடமுறு விவேக ஞானத் திற
முடைத் தான மேலோ, னிடரிலாச் சொரூப
நா னென் றெண்ணுவன் றன்னை யென்றும்,

மேதைதொக் கென்பே யாதி மேவிய வாக்கை யின்கண், சாதுவே யாங்ம புந்தி சற்றுநீ சார்ந்தி டற்க, போதவா நந்த வுண்மைப் பூரண சொரூப நானென், றீதினைச் சார்ந்தே யென்று மெய்திடு பரம சாந்தி. 188

மொழியும்வே தாந்த நீதி முழுவதுந் தெரிந் தோ னேனு, மழியுட லாதிபின்க ணத்தியா சந்தி ஞலே, யெழுமகம் புந்தி தன்னை யெவன் விடா னெம்மட் டம்மட், டொழிவிலா முத்தி யென்றிங் குரைத்தலு மவனுக் கில்லை. 189

உன்னுடைச் சாயா தேக முன்பதி பிம்ப வாக்கை, யுன்னுடைக் கநவு தேக முன்மநோ ராச்சி யாக்கை, யின்னதி லாங்ம புந்தி யேதுநீ யியற்ற தேபோ, லின்னதூ லாக்கை மீது மிதனைநீ யியற்றி டாதே. 190

ஓதுதே காங்ம புந்தி யுணர்விலா மூடர்க் கெல்லா, மேதமாஞ் சநந மாதி யின்னல்செய்

வித்தே யாகு, மாதலான் முயற்சி யாலே யதனை விட் டுளத்தி ளுசங். தீதறச் செய்யி வற்றுற் றிரும்பவிப் பவமே சாராய். 191

ஐந்துகன் மேந்தி யத்தோ டமைபிரா ணன்க லந்து, மைந்தமுன் சொல்பி ராண மய மெனுங் கோச மாகு. மிந்தக்கோ சத்தி னுன் முன் னிசைத்தகோ சம்நி றைந்து. வந்ததன் செய்கை யெல்லாம் வலியுறச் செய்யா நிற்கும்.

உன்னிய வாயு வைப்போ லுள்ளிலும் வெளியி லும்போ. யின்னதின் விகார மாகி யெங்குமே யிட்டா நிட்ட, மங்கியங் தனதி தென்ன மணுவுமே யறியா தத்தாற், பின்னரும் பரவ சத்தாற் பேசுமீ தாங்யா வாகா, 193

அநகஞா நேந்தி யங்க ளைந்துடன் மநங்க லந்து, மநமய கோச மீது மமதைசெய் விகற்ப வேது, கநபல விருத்தி பேதங் கலந்ததாய் வலியு டைத்தாய், முனமிசை கோசந் தன்னை முற்றுமே பரவ லாகும், 194

ஓதிய பொறிகளென்னு மோமகர்த் தாக்க ளாலே, வாதனை விறகி னாலும் வருபுல னெய்யி னாலுந், தீதுற வளர்க்கப் பட்டுத் திரமுறச் சொலிக்கா நின்ற, வோதிய மநம யத்தீ யுலக மெல்லாந்த கிக்கும். 195

மநதினை யன்றி வேறாய் மற்றொரு வவித்தை யில்லை, மநதுதா னவித்தை யாகு மற்றிதே பந்த வேது, மநதுதான் வளரும் போது மற்ற தும் வளர்ந்த தாகு, மநதுதா னசிக்கும் போது மற்றது நசித்த தாமே, 196

மநதுதன் சத்தி யாலே மற்றொரு பொருளு மில்லாக், கநவினிற் போக்தி ராதிக் கற்பனை யாவுஞ் செய்யு, மனையவா சாக்கி ரத்து மகில முஞ் செய்வ தாலே, மநதுடை வளர்வே யாகு மன்னிய சகம னைத்தும். 197

சாதுவே சுழுத்தி யின்கண் சலமந மொடுங் கும் போது, யாதுமே யணுவு மில்லை யாவரு மறிவ ரித்தை, யாதலாற் புருட னுக்கிவ் வசத்தி

யப் பவசம் பந்த. மோதிய மநத்தா லுண்டா
முண்மையிற் பவமே யில்லை, 198

வீசிய காற்றே முன்னர் விண்மிசை முகி
லைச் சேர்த்துப், பேசிய வஃதே பின்னும் பெரு
முகி றீர்ப்ப தேபோற், றாசுறு மநமே முன்னந்
துன்பமார் பந்தஞ் செய்யும், மாசறு மநமே
மற்று மாசுக வீட ளிக்கும். 199

விரிமநந் தேக மாதி விவிதமாம் விடயத்
தின்கண், புருடனுக் காசை யைமுன் புரிந்த
தாற் பந்தஞ் செய்யும், மருவுமவ் விடயத் தின்
கண் மற்றதே நஞ்சி னைப்போல், விரதியைத்
திடமாய்ச் செய்து விடுத்திடும் பந்த நின்றும்.

பெருகிய கயிற்று லாவைப் பிணிப்பதும்
விடுவ தும்போற், றிரிவிதக் குணங்க டம்மின்
றிறமையாற் சீவ னுக்கிங், குறைதரு மநது
தானே யுபயமுஞ் செய்வ தாலே, பரவிய பந்த
மோட்சம் படைப்பதற் கேது வீதே. 201

இதுதமோ ரசகு ணங்க ளிசைந்துதான்
மலிந மாகித், திதமுறு பந்த வேது திகழ்ந்திடுஞ்

சத்து வத்தை, நிதமுமீ தநுச ரித்து நிருமல வடிவ மாகி, யதிசய முத்தி யேது வாயிடு மநக மைந்தா. 202

கோதிலா விவேகத் தாலுங் குறைவிலா விரதி யாலு, மீதுதான் சுத்த மாகி யின்பவீட் டின்பொ ருட்டா. மாதலாற் புத்தி மாஞ யமைந்துள முமுட்சு வாஞே, ஞேதுமிவ் விரண்டை யும்முன் னுரமதா யடைய வேண்டும். 203

மநமெனும் பெயரு டைத்தாய் மகத்தான புலியொன் றிந்தக், கநமுறு விடய மென்னுங் காநகத் தேசத் தின்க, ணநுதிநஞ் சஞ்ச ரிக்கு மாதலா லத்தே சத்தி, லநிசமு நன்மு முட்சு வற்பமு மணுக வேண்டா. 204

முன்னிய தூலஞ் சூக்க முதலிய விடயம் யாவும், வங்நவாச் சிரம மாதி வகுப்புட னுட லங் கன்மங், துன்னிய குணங்க ளேது தொடர்பய னிவைய னைத்து, மன்னிய சீவ னுக்கு மநமிதே படைக்கு மென்றும். 205

சிறுமந மசங்க போதச் சீவனே மோகிப் பித்துக் குறுகிட விந்தி யாதிக் குணங்களாற் பந்திப் பித்து, வறிதுதன் செய்கை யாக மருவிய பலபோ கத்தில், வெறிதுநா னெனதி தென்றே விவிதமாய் மயக்கு மென்றும். 206

துனியுறு மத்தி யாச்த் துகளினுன் மநதே யிந்தக், கனமுறு பவபந் தத்தைக் கற்பனை செய்வ தாகும், நனிதமோ ரசவி கார நண்ணிநல் விவேக மற்றோர்க். கினையதே சநந மாதி யின் னல்செய் கின்ற வேது, 207

ஆதலா லாந்ம ரூப மறிந்தபண் டிதர்க ளெல்லா, மோதிய மநதே யென்று மோங்கிய வவித்தை யென்பர் மோதிய காற்றி னலே முகிற்றிரள் சுழல்வ தேபோ, லீதினு லிந்த ஞால மியாவுமே சுழலு மன்றே. 208

ஆதலான் முமுட்சு வானோ னலைவுறுந் தன்ம நத்தைச், சூதிலா முயற்சி யா லே சோதிக்க வேண்டு மீது, சோதனை செய்யப் பட்

டுச் சுத்தமா நிற்குங் காலே, யோதிய முத்தி சித்தி யுளங்கையிற் கனியே ராமே. 209

வீடுறும் விருப்பத் தாலே விவிதமாம் விடயத் தின்க, ணேடணை விட்டுக் கன்ம மியாவை யுந் துறந்தன் போடே, நீடுறுஞ் சிரவ ணாதி நிட்டையி னிற்ப வன்றான், மூடிய மனோவி கார முழுவதும் விடுத்தோ னவன். 210

பரவியே யொடுங்க லாலும் பரிணாமி யாத லாலும், விரிதுயர் வடிவ தாலும் விடயமாந் தன்மை யாலு, முரைமனோ மயகோ சந்தா னுணர்வுரு வான்மா வாகா, தெரிவுரு வான வான்மாத் திருசியப் பொருளா மோசொல். 211

போதவிந் திரிய மைந்தும் பொருந்திய புந்தி யேயிங், கோதுவிஞ் ஞாந கோச முரைத்தவிக் கோசந் தானே, காதல்செய் விருத்தி யோடே கலந்ததாய்க் கர்த்தா வாகிச், சாதுவே புருட னுக்குச் சம்சார வேது வாகும். 212

பகுதியின் விகார மாகிப் பரமசிற் பதிபிம் பத்தின், றிகழ்வினைத் தொடர்வ தாலே தியங்

கிய கிரியை ஞானத், தகைமையை யுடைய தாகித் தாக்குதே காதி யின்க, ண கமக மெனவே யென்று மறவுமீ தபிமா நிக்கும்.

அகமெனுஞ் சுபாவ மாகி யநாதியாங் கோச மீதே, நிகிலமாம் விவகா ரத்தை நிருவகிக் கின்ற சீவன், புகலறம் பாவ மியாவும் பூருவ வாத னைக்குத், தகுவதாய்ச் செய்த வற்றுற் றுக்கிய பயன்பு சிக்கும். 214

விரிவுறுங் கோச மீது விசித்திர யோநி கட்குள், மருவியே கீழு மேலு மாறுது திரியு மற் றும், பரவிய சாக்கி ராதிப் பலவித வவத்தை மேவும், பிரிவுறு சுகதுக் கங்கள் பெருகவே புசிக்கு மீதே. 215

தகவிறே காதி தம்மின் றன்மகன் மங்கு ணங்க, ளஃதினுச் சிரம மாதி யகிலமு மெனதே யென்று, மிகவுமீ தபிமா நிக்கு மெத்தவும் பரமாந் மாவின், றகமையைக் கிட்ட லாலே தடையிலா திதுவி ளங்கும். 216

ஆதலா லாந்மா விற்கீ தணுகிய வுபாதி யாகு. மோதிய கரணங் கட்கு ளுளமெனுங் கர ணத் தின்கண், சோதியா யிலங்கு மாந்மாச் சுத் தகூ டத்த னேனு, மீதினை மயலா ருனென் றெண்ணியே பவத்தைச் சாரும். 217

ஞாநமெய் யான வாந்மா நவையில்கூ டத்த னேனு மீநவிஞ் ஞாந கோச மென்னுமிவ் வுபாதி சேர்ந்தே, யூநதா தாந்மி யத்தா லொன்று செய் கர்த்தா போலு, மேனையுன் போக்தா போலு மிலங்கிடு மெங்கு மைந்தா. 218

நித்தமு மிந்த வாந்மா நிகிலபூ ரணமே யேனும் புத்திதா தாந்மி யத்தாற் பொய்ப்பரிச் சேத மேவி. மித்தையாய்த் தன்னைத் தன்னின் மிகவுமே வேருய்க் காணுங், கொத்துறு மண் ணின் வேருய்க் குடத்தினைக் காண்பதேபோல்.

புத்திர வாந்மா வென்றும் பூரண வேகரூப மொத்துள சுபாவ மேனு முபாதியின் சம்பந் தத்தா, லத்துடைத் தர்மந் தன்னை யநுசரித் தது

போற் றேன் று. மெத்திய வயோவி கார மேவிய வந்தி யேபோல். 220

என்னலுங் குருவை நோக்கி யிநமில் சீடன் கேட்டான், பன்னிய வாந்மா விற்குப் பகர்ந்த விச் சீவ பாவ, மன்னிய மயலா லேனு மற்றுமே யெவற்று லேனுந், துன்னிடு மேலி வற்றிற் றேன்றிய சங்கை சொல்வேன். 221

ஏதமாஞ் சீவ பாவத் தேதுவா யிசையு பாதிக், காதியில் லாத தாலே யழிவிலா தாக வேண்டு, நாதனே யநாதிக் கெல்லா நாசமு மில்லை யன்றே, வாதலாற் சீவ பாவ மழிவிலா நித்த மாமே. 222

ஈதினு லிச்சம் சார மென்றுமே நீங்கா தாமே, யாதலான் மோட்சப் பேற்றை யடைந் திடு நீதி யெங்ங, னுதனே யிந்தச் சங்கை நசிப் பதற் குத்த ரத்தை, யோதிநீ யருளு கென்ன வுத்தரங் குரவன் சொல்வான். 223

விரிவுறு விவேக முற்றேய் விகிதமாய் வினவு கின்று, யுரைசெயு முத்த ரத்தை யுளத்

துட ெனுருமை யாய்க்கேள், கருதொணு மயலி
னுலே கற்பனை யாவ வெல்லா, முரியநற் பிரமா
ணத்தா லோர்ந்திடி லுண்மை யாகா. 224

ஒருவடி வொருவி கார மோர்செய லோர்
பற் றின்றி, மருவிய வாங்மா வின்கண் மன்னிய
மயலா லன்றி, யொருபொருட் புணர்ச்சி யேனு
முண்மையா யொன்ற மாட்டா, நிருமலக்
ககநத் தின்க ணீலமீ தாதி யைப்போல். 225

பிரிவறு சாட்சி யாகிப் பிரத்தியக் குருவ
மாகி நிருமல நிருவி கார நிர்க்குண போதா நந்த,
சொருபமா மாங்மா விற்குச் சொல்லிய சீவ
பாவம், புரையுறு புத்தி தன்னின் பொய்ம்மய
லதனுற் றேன்றும். 226

ஓதிய நீதி யாக வூநமா மயலி னுலே, சாத
மாஞ் சீவ பாவஞ் சத்திய மாகா தென்று,
மேதமா மயலி றக்கி லீதுட னிறந்து போகு,
மேதெனில் வத்து வாகா வியல்பினு லநக
மைந்தா, 227

தோதகமயலி னுலே தோன்றிய பொருளுக்கெல்லா, மோதுமம் மயலெம் மட்டோ வுண்மையு மந்த மட்டே, மோதிய விரச்சு சர்ப்ப முதன்மய லளவே தோன்றிக் காதுசெய் மயலிறக்குங் கணத்திலே யிறக்கு மன்றே. 228

கருமுறு மவித்தை யத்தின் காரிய மான யாவும், வினவிடி லநாதி யேனும் வித்தைநன் றுதிக்குங் காலை, யநகனே யணுவு மில்லா தழிந்திடு மைய மில்லை, கநவுநன் னநவு றுங்காற் காணும லழிவ தேபோல். 229

ஆதியில் பிராக பாவ மநாதியே யான போது, மோதிய வதற்கு நாச மொப்பிய நீதியேபோற், சாதுவே யவித்தை யாதிச் சஞ்சல வுபாதி யெல்லா, மாதியில் லாத தேனு மழிவதிலைய மில்லை. 230

ஊநமாம் புத்தி யென்னு முபாதியின் சம்பந்தத்தா, லீநமாம் சீவ பாவ மேகமா மாங்மாவின் கண், கானனீர் நிகரே யாகக் கற்பித மாத

லாலே, யானவீ துண்மை யாகா தஙிர்வச நீய மாமே. 231

புத்தியோ டேபு ணர்ச்சி பூரண வாங்மா விற்கு, மித்தியா ஞாநத் தாலே மேவிய தாத லாலே, சத்திய ஞாந மொன்ருற் சாற்றிய புணர்ச்சி நீங்கும், புத்திர மற்ருென் ருலப் புணர்ச்சிதா னிங்கா தென்றும். 232

நித்தமாம் பரசீ வைக்ய நிகழ்த்திய ஞாநந் தானே, சத்திய ஞாந மென்று சம்மதஞ் சுருதிக் கெல்லாஞ், சுத்தமா மாங்மா நாங்ம சொருபநல் விவேகத் தாலே, யத்திற ஞாந முண்டா மாத லால் விவேகஞ் செய்க. 233

மலமுள சலத்தி னின்று மலத்தினை நீக்குங் காலே, சலமது நிமல மாகிச் சகத்தினிற் ருேன்று மாறே. நிலையுறு தன்னுந் மாவி னின்றகங் கார மாதிப், பலவித வசத்தை நீக்கிற் பரமமா யாங்மாத் தோன்றும். 234

ஆதலா லகங்கா ராதி யகிலமா மசத்தை யும்நன், னிதியா யாங்மா நின்று நித்தமு நீக்க

வேண்டு, மோதுவிஞ் ஞாந கோசமுண்மையா யாங்மா வாகா. தேதெனி லஙக மைந்தா வேதுவை யியம்பக் கேளாய். 235

சாதுவே விகாரி யாலுஞ் சடமதாந் தன்மை யாலுந், தீதள வுடைய தாலுந் திருசிய மாவ தாலு, மேதுமே நியம மின்றி யிதுவிப சாரி யாலு, மாதியா மாங்மா வாகா தநித்திய நித்த மாமோ. 236

பரமமா மாநந் தத்தின் பதிபிம்ப மதனைச் சார்ந்த, வுருவமா மவித்தை விர்த்தி யோதுமா நந்த கோசம், பிரியமோ தப்ர மோதப் பிரி வுடைத் தாகி யிட்ட, மருவிடும் போது திக்கு மற்றகா லத்தொ டுங்கும், 237

யாதொரு கோசந் தன்னி லியாவரு முயற்சி யின்றி, யோதுமா நந்த மெய்யா யொன்றிநித் தஞ்சு கிப்பர், போதனே யக்கோ சத்தின் பூரண வநுப வந்தான், சாதுவா மறிஞ ருக்கே சந்ததஞ் சார லாகும், 238

அஙகனே சுழுத்தி யின்க ணுறைந்த மயகோ சத்தி, னநுபவ மிகவுந் தோன்று மகிலமாஞ் சீவ ருக்கு மினையதி னநுப வந்தா னிட்டனோக் காதி யாலே, சொனகாரா நநவு கட்குட் சொற்பமாய்த் தோன்று நிற்கும். 239

பரவுசோ பாதி யாலும் பகுதியின் விகாரத் தாலுங், கருதிய புண்ணி யத்தின் காரிய மாத லாலுந், தரமுறு விகாரக் கூட்டந் தன்னிலுட் பட்ட தாலு, மருவுமா நந்த கோச மாசிலா வாங்மா வாகா. 240

திருசியக் கடமு ணர்ந்து திகழ்ந்திடுந் தேவ தத்தன், மருவுமக் கடமு மாகான் மற்றதன் றர்ம மேவான், பரிசுபோற் பஞ்ச கோசப் பகுப்பினை யுணரு மாங்மா, மருவுமக் கோச மாகா மற்றதன் றர்ம மேவா. 241

பரவிய பஞ்ச கோசப் பகுப்பினை யூகத் தாலே, புரையற வபவா தித்தாற் புரிந்தவவ் வபவா தத்தின், மருவிய வவதி யாகி மாசிலா

வகண்ட போத. வுருவமாய்ச் சாட்சி தானே
யொருமையாய் மிஞ்சித் தோன்றும். 242

விரிவுறு பஞ்ச கோச விலட்சண வுருவ
மாகிக், கருதிய வவத்தை மூன்றின் கரியதாய்
நிருவி கார, நிருமல போதா நந்த நிலைமையா
மிவ்வாத்மாவை. யரியனே விவேகி யானே னக
மென வறிய வேண்டும், 243

என்னவா சானை நோக்கி யேதமில் சீடன்
சொல்வான், சொன்னவிப் பஞ்சகோசஞ் சுத்த
மாய் மித்தை யென்றே, யுன்னினா னூகத் தாலே
யொதுக்கிய பின்ன ரையா, மன்னுசூ நியமே
யன்றி மற்றேது மிங்குக் காணேன். 244

ஆதலால் விவேகி யானே னகமென வறியும்
வண்ண, மேதுதான் வத்து விங்குண் டிதையி
சைத் தருளு வாயென், றோதிய சீட னுக்கிவ்
வுத்தமக் குரவன் சொல்வான், சாதுவே விசார
மீது சதுரனீ யுண்மை சொன்னாய். 245

விரிவகங் கார மாதி விகாரமற் றவற்ற
பாவ, மிருமையா மிவற்றை யெல்லா மிங்கியா

துணரு மியாதை, யொருபொரு ளுணரா தந்த
வுணர்வுரு வான சாட்சிப், பொருளினை மிகவு
நுண்மைப் புந்தியா லுணர்தி மைந்தா. 246

எதுவெது வேதனு லிங்ங னிதுவென
வறிய லாகு, மதுவது வதனைச் சாட்சி யாகவே
யடைந்து நிற்கு, மெதுவுமே யறியா தத்தி
லென்றுமே சாட்சி யாகா. சதுரனே யிவித
மாகச் சார்ந்திடு நீதி யெங்கும். 247

யாதினு லிந்த வாங்மா வென்றுமே தன்னுற்
ருனே, நீதியா யிலங்கா நிற்கு நித்தமு மாத
லாலே, சாதுவே தன்னைத் தானே சாட்சியா
யடைந்து நிற்கு, மாதலாற் சூநி யத்தை
யறிந்திடு நீயே யாங்மா. 248

சூநியத் தப்பா லாகச் சொல்லிய வாங்மா
விற்கு, மேனிலை யாக வொன்று மேவிய தில்லை
யென்று, மானதா லறிபொ ருட்கு மறிபடாப்
பொருளி னுக்கு, மேனிலை யறிவே மெய்யாய்
மேவிய வாங்மா நீயே. 249

சாதுவே யெந்த வாங்மா சாக்கிர மாதி யின்க, ணேுதிய பிரத்ய காங்ம வுருவமாய் நானு னென்று, சோதியா யுளத்தி லென்றுஞ் சொலித் திடு மேக மாக, வாதியா மவ்வாங் மாவை யகமென வறிநீ யென்றும். 250

வித்தர விகார முற்று விவிதமாய்த் தோன்று கின்ற, வத்திர வகங்கா ராதி யகிலமு நேரே கண்டு, நித்தியா நந்த சித்தாய் நிகழ்ந்திடு நின்னுங் மாவைப், புத்திர சூக்க மான புந்தியா லுணர்தி நன்ருய். 251

கடசலங் தன்னிற் கண்ட கதிரவன் பதிபிம் பத்தை, மடமையாய் மூட ஞேன் மார்த் தாண்ட னென்ப தேபோ, லுடலுறும் புந்தி யின்க ணுதித்தசிற் பதிபிம் பத்தை, யடைவுறு மயலான் மூட னகமென வபிமா நிப்பன். 252

கோதிலா விவேகி யானேன் குடஞ்சலம் பதி பிம் பங்கள், யாதுமே விட்டு விண்ணி லேக மாய்ப் பொதுவே யாகி, யோதிய விவைகண்

மூன்று மொளிர்விப்ப ஞகித் தானே. சோதியாங் கதிரோன் றன்னைச் சுத்தமாய்க் காண்ட தேபோல். 253

போதமார் விவேகி தேகம் புந்திசிற் பதிபிம் பங்கள், யாதும்விட் டிதய விண்ணி லேகமா யாவுங் காணுஞ்; சோதியா யகண்ட போத சொரூபமாய்ச் சதசத் திற்குப், பேதமாந் தன்ஞுந் மாவைப் பிரித்துநன் றறிய வேண்டும். 254

நித்தமாய் விபுவு மாகி நிகிலபூ ரணமு மாகி, மெத்தவு நுண்மை யாகி மேவுமுள் வெளிக ளின்றிப், பித்தியக் காங்மா வாகப் பிறங்கிய பரமாங் மாவைப், புத்திர விவேகி யானேன் புல முற வறிய வேண்டும். 255

நித்தமுந் தன்ஞுங் மாவை நிலைமையா யறிந்த சிவன், சுத்திய பாவ மற்றேன் சுழலறு விகாரம் விட்டோன், மெத்திய துயர மற்றேன் மிகவுமா நந்தம் பெற்றே, னெத்திலும் பயமி றந்தோ னேகமாம் பதம டைந்தோன். 256

நல்லன முமுட்சு வுக்கு நவின்றவிவ் வாங்ம ஞாந, மல்லது பவபந் தத்தை யகற்றியா நந்த

முத்தி, செல்லவோர் நெறியு மில்லைச் செப்பின
முண்மை யாக, வல்லறி ராங்ம ஞாந மாதலா
லடைதி மைந்தா 257

பிரமமே நானென் றிந்தப் பேதமின் ஞாநந்
தானே, பரவிய மோட்சத் திற்குப் பரமகா
ரணமே தென்னிற், பிரமமே யறிந்த ஞாநி
பேதமெல் லாம்வி டுத்துப், பிரிவிலா நந்த
வந்தப் பிரமமே யாவ தாலே, 258

பிரமமே யான ஞாநி பின்னரிச் சம்சா
ரத்தை, மருவிடா ளுத லாலே மாசற முமுட்சு
வானேன், பிரமநான் பிரம மேநான் பிரமமே
நானென் றிங்ஙன், றிரமதாய்ப் பிரமந் தன்னைத்
திருமே யறிய வேண்டும், 259

சத்திய ஞாநா நந்தச் சந்ததா நந்த மாகி,
நித்திய சுத்த மாகி நிகழ்சொத சித்த மாகிப்,
பித்தியக் கபிஂங மாகிப் பிரிவற நிறைந்து நின்ற,
வத்துவே ததுவே மைந்தா வரமான பிரம
மாகும். 260

பன்னிய பிரம மீது பரமவத் துவித மாகுந், தன்னினில் வேரு யொன்றுந் தானிலாத் தன்மை யாலே, பிங்கமில் பரமார்த் தத்தைப் பேணிநன் றறியுங் காலே, யங்கிய மெனும மனைத்து மணுவுமில் லாத தாமே. 261

யாதிது சகல ஞால மென்பதாய் நாநா வாகத், தீதுசெய் யஞ்ஞா நத்தாற் றிருசியம் போலத் தோன்றுஞ், சாதுவே யவைப னைத் துஞ் சகலகற் பனையு மற்ற, போதவா நந்த வுண்மைப் பூரணப் பிரம மேயாம். 262

கமுடைத் தான மண்ணின் காரிய மான கும்ப. மகனே மண்ணே யன்றி யற்பமும் பிங்க மல்ல, வினவிடிற் கும்ப ரூபம் வீங்கிய மண்ணின் ரூபந், தனையலால் வேற தாகத் தானிலாத் தன்மை யாலே 263

விரிவுறு மண்ணை யன்றி வேறதாய்க் கடத் தைக் காட்ட, வொருவனுஞ் சமர்த்த னில்லை யுலகினி லதனுற் கும்பங், கருதொணு மோகத்

தாலே கற்பிதம் பொய்யே மற்று. மருவிய வதுதா னும மாத்திர மண்ணே யுண்மை. 264

சாற்றிய நீதி யேபோற் சத்தியப் பிரமத் தின்கண், டோற்றுகா ரியம னைத்துந் துகளி லாப் பிரம மேயா, மேற்றிய பிரம மல்லா லெவளவும் வேறே யில்லை, தேற்றமா யுசாவி லெங்குந் திகழ்வது பிரமந் தானே. 265

கநபரப் பிரம மல்லாற் கற்பித மான ஞாலந், தினையள வேனும் வேருய்த் திகழுமென் றுரைப் போர்க் கெல்லா, மநகமோ காந்த கார மற்பமு மகல வில்லை, யனையவர் சொல்வ தெல்லா மசத் தியந் துயில்வோர் சொற்போல். 266

இதுவெனுஞ் சகம னைத்து மேகமாம் பிரம மேயென், றதர்வண வுபநி டத்தி னதிசய மான வாக்குந் திதமதாய்ச் சொல்வ தாலே திருசியச் சகம னைத்து, முதயமத் தமந மின்றி யொளிர்ந் திடும் பிரம மேயாம். 267

கநமதா மதிட்டா நத்திற் கற்பித மான யாவும், வினவிலவ் வதிட்டா நத்தை விட்டுவே

றுருவ மாகா. தநகவா தலினுன் ஞால மகிலமும்
பிரம மென்று, சொனவதிட் டாந மேயாஞ்
சொற்பமும் வேறு காதே. 268

சகமிது மெய்யா மாகிற் சத்தியப் பிரமத்
திற்குப், புகல்பரி பூர ணத்வம் போயிடும்
வேதத்திற்கு மிகவுமப் பிரமா ணத்வ மேவிடும்
பரசி வற்கு. மிகலசத் தியவா தித்வ மெய்திடு
மிதுநன் றன்றே. 269

சாதுவே குற்ற மூன்றுஞ் சகித்திடார்
மேலோ ரியாரு, மீதுவீ சன்ம நத்து மிசைந்த
தன் றெதனு லென்னி, லேதுமே யறிந்த வீச
னெவையுமே யென்னி லில்லை, யாதிலு நானு
மில்லை யேகனு னென்ப தாலே. 270

பின்னருஞ் சகமெய் யானுற் பிரிவிலாச்
சுழுத்தி யின்க. ணன்னது தோன்ற வேண்டு
மணுவுமே தோன்று தத்தாற், பன்னிய சகம
னைத்தும் பார்க்கும்போ திலவே யில்லை, பின்னி
லாச் சொப்ப நத்திற் பிறங்கிய சகத்தி ரட்போல்.

ஆதலாற் பிரமத் தின்க ணங்கிய சகமே யில்லை. பேதமாய்த் தோன்றல் பொய்யே பெருங் கயிற் றரவ தேபோ, லோதொணு வாரோ பத்திற் குண்மையு முண்டோ மாலா, லாதியா மதிட்டா நந்தா னுரோப மெனவே தோன்றும்.

பித்தனு மூட னுக்கு பிரமத்தாற் காண்ப தெல்லாம், வித்தரப் பிரம மேயாம் வெள்ளிசுத் திகையே யன்றோ. சத்தியப் பிரமந் தானே சக மெனக் காண்ப தாலே, வத்துவாய்ச் சகமுண் டென்னல் வாக்குமாத் திரமே யாகும். 273

சாற்றிய வேது வாலே சத்தியம் பிரம மேலாய்த். தோற்றுமத் துவித மாகுந் தூயசிற் கநமு மாகு. மாற்றுமோர் மலமி லாதா மாதியந் தம்பெ ருதா, மேற்றுமோர் செயலி லாதா மென்றுமே சாந்த மாகும், 274

பரமவா நந்த மாகும் பங்கமார் மாயை செய்த, பிரிவியா தும்பெ ருதாம் பேதியா நித்த மாகு, மருவுமவ் வியத்த மாகு மப்பிர மேய

மாகுங், கருதுமோர் கலையி லாதாங் காட்டு
மோர் பெயரி லாதாம். 875

ஒருமையா யொருவி கார மொன்றிடாப் பிரம சோதி, சருவதா விளங்கா நிற்குஞ் சஞ்சல ஞாதி ராதித், திரிபுடி யாது மின்றித் திருசிய விகற்ப மற்ற, பிரிவிலா வகண்ட சித்தே பிரம
மென் றறிவர் மேலோர். 276

உரியனே தள்ளக் கூட்ட வொணுததாய் மநது வாக்காற். பரவியே கோச ரிக்கப் படா ததா யறிவ தற்கிங், கருமையா யாதி யந்த மற்றவவ் வகண்ட மான, பிரமமே நாமு நீயும்
பிறிதுள சீவ ருங்காண். 277

இத்திறஞ் சோதிப் புற்ற விப்பரப் பிரம சீவர், தத்துவம் பதங்க ளுக்குத் தகைமையாம் பொருள்க ளாகு, நித்தமு மவர்க ளுக்கு நிலை மையா மைக்கி யத்தைத், தத்துவ மசியாம்
வாக்குத் தடையறச் சாற்று நன்ருய். 278

சாதுவே சாம வேதஞ் சார்மகா வாக்கி யத் தாற், பேதமை யாவும் போக்கப் பிரிவறப்

பேசப் பட்ட. வேதமி லக்கி யந்தா னிலக்கியப் பொருள்கட் காகும், வாதக மிருப்ப தாலே வாச்சியப் பொருள்கட் கில்லை. 279

பருவத வணுக்கள் போலும் பாநுமின் மினிகள் போலு, மரசுசே வகர்கள் போலு மாழிகூ பங்கள் போலும், விரிவுறு வாச்சி யங்கள் விரோதமே மேவ லாலே, பிரிவிலா வயிக்கி யத்தைப் பெற்றிடா வவைக ளென்றும் 2 0

அரியனே வாச்சி யார்த்த மாயின பரசீ வர்க்குக், கருதிய விவ்வி ரோதங் கற்பித வுபாதி யாலே, யுரைசெயு மிவ்வு பாதி யொன்றுமே யுண்மை யாகா, திருமைசெய் யிவ்வு பாதி யேதெனி லியம்பக் கேளாய், 281

காரண மாயை யாதி கருதிய வீசோ பாதி, காரிய பஞ்ச கோசங் கருதிய சீவோ பாதி தூரவே யிவ்வு பாதித் துவந்துவந் தள்ளும் போது,தீரனே யீச னில்லை தியங்கிய சீவ னில்லை.

தரணியை யாளுந் தன்மை தரணிபன் றன்னு பாதி, மருவிய கேட யாதி மற்றைச்சே வகனு பாதி, பரவிய விவ்வு பாதிப் பகுப்பினைத் தள்ளும் போது, தரணிபன் ருனு மில்லை தங்குசே வகனு மில்லை, 283

நிருமலச் சுருதி தானே நேதிநே தியெனும் வாக்காற், கருதொணுப் பிரமத் தின்கட் கற்பி தத் துவிதந் தன்னைத், திரமதா யபவா திக்குந் திறமையை கண்டோ மன்றோ, வுரியனே யாத லாலே யுபாதியைத் தள்ளல் வேண்டும். 284

வேதமாம் மாநத் தாலும் விளங்கிய போதத் தாலு, மோதிய சொப்ப நாதி யுத்தம வுத்தியாலு, மீதிலே யீதி லேமற் றீதிலே யென்ப தாகப், பேதமா முபாதி யெல்லாம் பெயர்ந் திடத் தள்ளல் வேண்டும். 285

இவ்விதந் திருசி யத்தை யேகமாய்த் தள் ளிப் பின்ன, ரவ்விதப் பரசீ வைக்கிய மறிந் திடத் தக்க தாலே செவ்விலக் கணையி னலே

செப்பிய வவர்க டம்மை, யெவ்வமற் றுணர வேண்டு மேகமாய் நிற்ப தற்கே. 286

விட்டலக் கணையும் வேண்டாம் விடாதலக் கணையும் வேண்டா, மிட்டனே யுபய மான விலக்கணை வேண்டு மீது, திட்டமாஞ் சோயந் தேவ தத்தனென் கின்ற வாக்கிற், றட்டிடா ததுபோ லிதாந் தத்துவ மசியாம் வாக்கில். 287

திருத்தமாஞ் சோயந் தேவ தத்தனென் கின்ற வாக்கு, விருத்தமாந் தரும மெல்லாம் விட்டவ னைக்கி யத்தைத், தரித்திடச் சொல்வ தேபோற் றத்துவ மசியாம் வாக்கும், விருத்த மாந் தரும மெல்லாம் விடுத்தயிக் கியமே சொல்லும். 288

இத்திறம் விரோதந் தள்ளி யிலக்கியச் சித்தே யான, சுத்தமாம் பரசி வர்க்குச் சொல் லிய வைக்கி யத்தை, நித்தமு மறிஞ ரெல்லா நிலைமையாய்ப் பரிச யிப்பர், புத்திர நீயு மங்ஙன் புகன்றதைப் பரிச யிப்பாய். 289

இத்திறம் வேதந் தோறு மிசைமகா வாக்க னேக, மத்திர தூல மாதி யசத்தினை யபவா

தித்துச், சுத்தமாய் வானம் போலச் சூக்கமாய்த் தானே நின்ற, வத்தமி லிந்தச் சீவர்க் ககண்ட வைக் கியமே சொல்லும். 290

ஆதலாற் பொய்யே யாகி யகமென வறியப் பட்டிங், கேதேது தோன்று நிற்கு மிவை யெலா நன்றாய் விட்டுப், போதவா நந்த வுண் மைப் பூரணப் பிரம நானென். றேதமில் புந்தி யாலே யின்றனே யுணர்தி மைந்தா. 291

கருதுமண் செய்கை யான கடமுத லியாவு மென்றும்,பரவுமம் மண்ணே யாகும் பான்மை போற் பிரமத் தின்கண், மருவிய காரி யம்போன் மயங்கிய சகம னைத்தும். பிரமமாத் திரமே யாகும் பிறிதிதி லெதுவு மில்லை. 292

யாதிறைற் பிரம மன்றி யாதுமே வேறிங் கில்லை, யாதலா லதுவே யுண்மை யாதுதா னெவர்க்கு மாங்மா, யாதுவத் துவிதஞ் சாந்த மமலமாம் பரமா மென்றுஞ், சாதுவே யதுநீ யாவாய் சத்திய மைய மில்லை. 293

கனவினி லாரோ பித்த காலதே சம்பு லன்க, ணிலைவுறு ஞாதி ராதி நிகிலமும் பொய்யே போல, நநவிலு மஞ்ஞா நத்தா னம் மிடை யாரோ பித்த. கநவுடன் முதலே யாகக் கண்டவிச் சகமும் பொய்யே. 294

யாதினுற் பிரம மல்லா திவ்வுடல் கரணம் பிராண, னேதமா மகங்கா ராதி யிச்சகம் யாவும் பொய்யா, மாதலாற் பிரமஞ் சாந்த மமலமத் துவித மென்றுஞ், சாதுவே யதுநீ யாவாய் சத் திய மைய மில்லை, 295

பேதமாஞ் சாதி நீதி பெருங்குல கோத்தி ரங்க, ளோதிடு நாம ரூப மொருகுணந் தோட மின்றிப். போதுதே சம்பு லன்கள் பொருந்தி டாப் பிரம மியாது, போதனே யதுநீ யாவாய் புந்தியிற் சிந்தை செய்வாய். 296

யாதெலா வாக்கு கட்கு மிங்குக்கோ சரமே யாகா, யா துநற் போதக் கண்ணி லிங்குக்கோ சரமா மியாதிங், காதியில் வத்து வாகு மமலசிற்

கமு மாகும், போதனே யதுநீ யாவாய் புந்தி யிற் சிந்தை செய்வாய். 297

மருவிய சடூர்மி யின்றி மாசில்யோ கியர்ம நத்தாற், கருதிடப் பட்டு மற்றோர் கரணமுங் கருதொ ணுத, வுருவமாய் மநத்திற் கெட்டா வுண்மையாய் நிறைந்து நின்ற, பிரமமே ததுநீ யாவாய் பிரிவறச் சிந்தை செய்வாய், 298

மித்தியா சகம னைத்து மேவதிட் டாந மாகிச், சத்தசத் திற்கு வேருய்ச் சலமறத் தன் னிற் ருனுய், நித்தநிட் களமா யாது நிகரற நிறைந்து நின்ற, வத்துவே ததுநீ யாவாய் வழுவறச் சிந்தை செய்வாய். 299

ஆதிவியா திகளி லாதா யறுவிகா ரம்பெ ருதாய்ப், பேதமா மீச்ச கத்தின் பிறப்பிருப் பிறப்பைச் செய்யு, மாதிகா ரணமா னுலு மமல மாம் பிரமம் யாது, போதனே யதுநீ யாவாய் புந்தியிற் சிந்தை செய்வாய், 300

தொத்துபே தம்பெ ருதாய்த் தொடரு மோர் குறியி லாதாய், நித்தரங் காழி போல

நிச்சலமாகி நித்த, முத்தமா யகண்ட மான
மூர்த்தியாம் பிரமம் யாது, புத்திர வதுநீ
யாவாய் புந்தியிற் சிந்தை செய்வாய் 301

காரண மெவற்றி னுக்குங் காரண மாகி
யொன்றுய்ப், பாரினை முதல நேகம் படைத்தகா
ரணமாய் நின்றுங், காரிய கார ணங்கள் கலந்தி
டாப் பிரமம் யாது. தீரனே யதுநீ யாவாய்
திரமுறச் சிந்தை செய்வாய். 302

கருதிய வெண்மை வெண்மை காரியங்
கட்கு வேருய்ப், பரமவக் கரமா யென்றும்
பழுதிலா நந்த மாகி, நிருமல நிருவி கற்ப நிலை
மையாய் நிறைந்து நின்ற, பிரமமே ததுநீ
யாவாய் பிரிவறச் சிந்தை செய்வாய். 303

ஏதமில் கநக மேபோ லியாதொரு பிரமம்
மாலாற், கோதுறு நாம ரூபங் குணமுதல்
விகார மான, பேதமாய்த் தோன்றி னும்
பேதியா விகாரி யாகா, சாதுவே யதுநீ யாவாய்
சந்ததஞ் சிந்தை செய்வாய் 304

யாதினில் வேறே யில்லை யாதுமே லுக்கு மேலாம், பேதமில் லாம லென்றும் பிரத்தியக் கபின்னம் யாது, போதவா நந்த வுண்மைப் பூரண மேகம் யாது, போதனே யதுநீ யாவாய் புந்தியிற் சிந்தை செய்வாய், 305

ஓதிய விவ்வர்த் தத்தை யுத்தம வுத்தி யோடே, கோதிலாப் புந்தி யாலே குறித்துளந் தன்னிற் சிந்தி, யீதினு லைய மாதி யின்றியே வுளங்கை நீர்போற், சாதுவே யுண்மை ஞானஞ் சநித்திடுஞ் சங்கை யில்லை, 306

அடர்வுறு சைநி யத்து ளரசனைக் காண்ப தேபோ, லுடன்முதற் றிரளி னுக்கு ளுணர்வு மாத் திரமே யாகித், திடபரி சுத்த மாகத் திகழ்ந்திடு நின்னைக் கண்டவ், விடரிலாப் பிரம நானென் றெண்ணியவ் வடிவாய் நிற்பாய், 307

நிருமலப் பிரம மாக நின்னினி யென்று நின்று பிரமமா மந்த வுன்னிற் பிரிவுபோற் றேன்று நின்ற, திருசியத் திரளை யெல்லாந்

திரவே ப்ரவிலா பித்துப், பாமவா நந்தம் பெற்றுப் பகுப்பிலாச் சாந்தி சார்வாய். 308

சத்தசத் திற்கு வேருஞ் சத்திய வேக வத்துப், புத்தியாங் குகையின் கண்ணே பொருந்துமவ் வத்து வாக, நித்தமிக் குகையின் கண்ணே நிலைமையா யாவ னிற்பன், புத்திர வன்றேன் மீண்டிப் புரையுடற் குகையிற் சேரான். 309

வத்துவை யறிந்த போதும் வாதனை வலியே யாகு, மித்துனிச் சம்சா ரத்திற் கேதுவா யநாதியாகி, யத்திரக் கர்த்தா போக்தா வகமென வுறுதிப் பட்ட, தொத்துவா தனைய னைத்துந் துடைத்திட வேண்டுங் தூயோய். 310

மைந்தனே யாந்ம நோக்கான் மாசிலா நின்ஞங் மாவிற் சந்தத நீயி ருந்து சலித்திடா முயற்சி யாலே, வந்தவா தனைய டக்கு வாதனை யடக்கத் தைத்தான், முந்திய சநத்கு மார முநிவரர் முத்தி யென்றூர். 311

ஈநதே கேந்தி யாதி யெனுமநாங் மாவிடத்தில்,யானென தென்னு மெண்ண மியாததே

யத்தி யாசம், ஞாநியா னவனி வற்றை ஞாந மாந் தன்னுந் மாவி, லானநன் னிட்டை யாலே யழித்திட வேண்டு மென்றும். 312

புத்தியின் விர்த்தி கட்குப் பொலிவுசெய் சாட்சி யாகிப், பித்தியக் காந்மா வாகப் பிறங் கிய நினைய றிந்து, புத்திர வந்த நானே பூரணப் பிரம மென்னும், விர்த்தியா லத்தி யாசம் விடுத்துநீ விமல மாவாய். 313

ஒருவித மிலாத தான வுலகுடைச் சார்பை விட்டுப், பொருள்களை நாநா வாகப் புகலுநூற் சார்பும் விட்டுப், பரவிய வநர்த்த மெல்லாம் பற் றுடற் சார்பும் விட்டிங், கரியனே யாந்ம நோக்கா லத்தியா சந்த விர்ப்பாய். 314

ஊக்கமாய்ப் பொருந்தா நின்ற வுலகவா சனையி னுலு, நோக்கிடப் பட்ட நாநா நூலின்வா சனையி னுலுந், தேக்கமாய் வாரா நின்ற தேகவா சனையி னுலுஞ், சூக்கமா மாந்ம ஞாநஞ் சொன்னவா றுதியா தியார்க்கும் 315

இப்பவச் சிறையை நீக்கி யேகவிச் சிப்ப வர்க்குச், செப்புவா சனைகண் மூன்றுஞ் செறி யயோ மயவி லங்கென், றப்புறப் பட்ட மேலோ ரறைவரா தலினுன் மைந்தா. துப்புற விவற்றை விட்டோன் றுகளிலா முத்தி சேர்வான். 316

சலமுதற் சம்பந் தத்தாற் சநித்ததுர்க் கந்த முற்று, வலியுறு மகிலின் கட்டை வாசனை மறைந்த போது, மலமற வறைத்த லாலே மருவு துர்க் கந்த நீங்கி, னிலைமையா யதனி டத்தி னின்றவா சனையே தோன்றும். 317

ஈதுபோ லிதயத் துள்ளே யிருப்பதாய் வெகுவாய்க் காம, மாதிவா சனையி னுலே யாந் மவா சனைம றைந்தும், போதநற் பழக்க மென் னும் புரையிலா தறைத்த லாலே, யாதுதா னீங்கிலீதே யமலமாய்த் தோன்று நிற்கும். 318

வத்துவில் லாவ நாந்ம வாசனைத் திரளி னுலே, வத்துவே யான வாந்ம வாச்னை மறை பட் டாலும், நித்தமு மாந்ம நிட்டை

நிலைமையா லதனை நீக்கிற், சுத்தமா யிதே
தோன்றுஞ் சொப்பிர காச மாக, 319

அரிமந மாந்மா வின்க ணடங்கிடு மெம்மட்
டெம்மட், டுரியனே யம்மட் டம்மட் டுநவா
சனையு நீங்குஞ், சருவ வாசனையு நீங்கிற் சாற்றிய
வாந்ம ஞாநம், பிரதிபந் தங்க ளின்றிப் பிறங்கிடு
முள்ள வாறே. 320

சந்தத மாந்ம நிட்டை சார்ந்ததா லியோகி
யர்க்குத், தொந்தமா மநமி றக்குந் துட்டவா
தனைய டங்கு. மைந்தனே யதனி ஞலே மயங்கிய
வத்தி யாசப், பந்தனை யாவுந் தீர்த்துப் பரமமாம்
பதமாய் நிற்பாய். 321

போதனே யிருகு ணத்தாற் போயிடுந் தமசு
முன்ன மீதியி லிராச தம்போ மிசிரமாஞ் சத்து
வத்தாற், சோதியா வதுதான் போகுஞ் சுத்த
மாஞ் சத்து வத்தா, லாதலாற் சுத்தங்
கொண்டே, யத்தியா சந்த விர்ப்பாய், 322

மித்தையா மிவ்வு டம்பை மீந்தபிரா ரத்த
கன்மஞ், சித்தமாய்க் காக்கு மென்றே சிந்தையித

ணிச்ச யித்து, மெத்தவுந் தைரி யத்தை மேவிநிச் சலலே யாகி, யத்தியா சந்த விர்ப்பா யநகவெம் முயற்சி யாலும். 323

நானொரு சீவ னன்று நற்பரப் பிரம மேநான், ருனெனு நிச்ச யத்தாற் றள்ளியே யகத்தை யெல்லா, மூநவா சனேவே கத்தா லுன் னிடை யுதியா நின்ற, வீநமா மத்தி யாச மிபா வையு நீயொ ழிப்பாய். 324

சுருதியா லாகந் தன்னுற் சூக்கும வநுப வத்தாற். பொருவிலா நானே யெங்கும் பூரண னென்ற றிந்திங், கொருவொரு விடத்தி லோர்கா லுண்மைபோ லுதியா நின்ற, சருவமா மத்தியாசச் சார்பையுந் தவிர்தி மைந்தா, 325

சாதுவே பிச்சை வாங்கல் சலமலம் விடுத லன்றி யாதுமே தியாநி யர்க்கிங் கியற்றிடுஞ் செய்கை யில்லை, யாதலா லாந்ம நிட்டை யநிசமு மடைந்த தாலே, மோதிய வத்தி யாச முழுவது நீயொ ழிப்பாய். 326

தத்துவ மசியே யாதி தகுமகா வாக்கி யத்தா, னித்தமும் பரசீ வைக்கிய நிகழ்த்திய போதங் கொண்டு, வத்துவி லாந்ம புந்தி வலி யுறக் கிடைப்ப தற்கே, யத்தியா சத்தை யெல்லா மநகனே யறவொ ழிப்பாய். 327

மூடமா மித்தே கத்தின் முளைத்திடு மகங்கா ரந்தான், சேடமில் லாது நன்றாய்ச் சிதைவுறுங் கால மட்டுஞ், சீடனே சாவ தாநஞ் சேர்ந்துநற் றியாநி யாகித், தோடமா மத்தி யாசத் தொடர்பினைப் பரிக ரிப்பாய் 328

விவிதமாஞ் சகமி தென்றும் விரிவுறுஞ் சீவ ரென்று, மிவிதமாந் தோற்ற மெல்லா மிசைந்த நின் சொப்ப நம்போ, லெவ்வளவு கால மட்டு மிலங்குமோ வித்து வானே, யவ்வளவு மிடைவி டாம லத்தியா சந்த விர்ப்பாய், 329

நித்திரை யுலக வார்த்தை நீண்டசத் தாதி கட்கு, நித்தமா மாந்ம ரூப நினைந்திடா மறதிக் கும்நீ, யித்தனை யேனு மெங்கு மிடைவெளி

கொடாம லென்றும், புத்திர நின்னுங் மாவைப் புந்தியிற் சிந்தை செய்வாய். 330

மாதிரு பிதிரு தங்கள் மலத்தினு லுண்டாய் மற்று, மேதைதோன் மலமே யாதி மேனியா மித்தூ லத்தைச், சாதுவே வெகுதூ ரத்திற் சண்டாள னிகராய்த் தள்ளிப், பேதமில் பிரம மாகிப் பேறுபெற் றவனாய் நிற்பாய். 331

குறுகிய கடாகா சத்தைக் கூர்மகா காசத் திற்போற், சிறுகிய சீவாங் மாவைச் சிற்கநப் பர மாங் மாவி, லறிவினுற் ப்ரவிலா பித்தவ் வகண்ட மாம் வத்து வாகி, வெறிதிருங் திடுவா யென் றும் விமலமா மியோகத் தோனுய். 332

பரவதிட் டாந மாகிப் படர்சுயஞ் சோதி யான, பிரமமே நீயாய் நின்ற பிரிவிலா நிட்டை யாலே, யுருவமாம் பிரமாண் டத்தோ டொன் றிய பிண்டாண் டத்தை, யரியனே மலபாண் டம்போ லகத்தினி லகற்றி நிற்பாய். 333

ஏதமா மிலிங்க தேகத் திசையகம் புந்தி தன்னைச், சோதியா நந்த சத்தாய்ச் சொல்லிய நின்னுங் மாவிற். றீதற வைத்தி லிங்க தேகமீ

திரைவி டுத்துக், கேதமில் லாம லென்றுங்
கேவல ஞகி நிற்பாய். 334

திதிலாக் கண்ணு டிக்குட் டிகழ்ந்திடும்
புரமே போல, யாதொரு பிரமத் தின்க ணிச்சக
மியாவுந் தோன்றுஞ், சாதுவே யதுநா னென்
றே சலமற வறிந்த தாலே, சீதனுய்ச் செய்வ
தெல்லாஞ் செய்துநீ முடிந்தோ னுவாய். 335

அருவவக் கிரிய மாகி யறிவுமெய் யின்ப
மாகி, யொருமையா முன்ரூ பத்தை யொன்றி
யிப் பொய்யு டம்பை, யரியனே விடுதி கூத்த
னடைந்துதன் னிசரூ பத்தை, விரிவுறு வேட
ரூபம் விடுத்திடு நீதி யேபோல். 336

சருவமாம் விதத்தி னுலுஞ் சத்திலா வகங்கா
ராதி, சருவமு மறியா தாலுஞ் க்ஷணிகமாய்க்
காண்ப தாலுஞ், சருவமு மறியா நின்ற சத்திய
வாந்மா வாகா, சருவமு மறியுந் தன்மை
க்ஷணிகமா மதனுக் குண்டோ. 337

ஆதலா லகங்கா ராதி யறிந்திடுங் கரியே யாங்மா, பேதமி றுயிலின் கண்ணும் பேதியா திருப்ப தாலே, சோதியா மாங்மா நித்தன் சுருதியு மாங்கே சொல்லுஞ், சாதுவே யதனு லாங்மா சத்தசத் திற்கு வேறே. 338

சாதுவே விகாரி யின்கண் சார்ந்துள விகார மியாவு, நீதியா யறியு மாங்மா நித்தனும் விகாரி யாகான், தோதக விவ்வி ரண்டுந் துயில்கநா மனோர தங்கண், மீதடிக் கடியி லாதாய் மீள்வ தைக் காண்ப தாலே, 339

ஆதலான் மாம்ச பிண்ட மாகிய வாக்கை மீதுங், தீதுறு புந்தி செய்த தேகாபி மாந மீதுஞ், சாதமா மகந்தை விட்டுச் சச்சிதா நந்த மாக, வோதிய வாங்மா நானென் றுணர்ந்துநீ சாந்தி சார்வாய். 340

ஓதிய சவதே கத்தி லொன்றிய நாம ரூபஞ், சாதியாச் சிரம மாதிச் சார்பும்விட் டிலிங்க தேக, சாதமாங் கர்த்தி ராதிச் சார்பையும்

விட்ட கண்ட, போதவா நந்த வுண்மைப் பொருள்வடி வாகி நிற்பாய். 341

தொந்தமாம் பவத்தைச் செய்யுந் துட்டமாம் பிரதி பந்த, மைந்தனே யநேக மேனு மருவிய வவற்றிற் கெல்லா, முந்திய விகார மாக முளைத்திடு மகங்கா ரந்தான், சந்தத மூல மத்தைச் சருவதா வொழிக்க வேண்டும். 342

எவளவி லாங்மா விற்கிவ் வீநமா மகங்கா ரத்தோ, டெவமுறும் புணர்ச்சி யேது மிருப்ப தாய்க் காண லாகு, மவளவும் புருட னுக்கிங் கணுவின்மாத் திரமா ஞலும், பவமறு முத்தி யென்று பகர்தலு மில்லை மைந்தா, 343

இருளகங் கார மென்னு மீநமா மிராகு வாலே, புரையற விடுபட் டோனே பூரண விமல மாகி, யொருசுயஞ் சோதி யாகி யுண் மையா நந்த மான, சொரூபமாய் விளங்கா நிற்பன் சுத்தமா மிந்து வேபோல், 344

இருளினுன் மூடப் பட்ட வீநமாம் புந்தி செய்த, புரையகங் கார மியாது பூருவந் தோன்

றிற் றந்தப், பரவிய வகங்கா ரந்தான் பற்றற நசித்துப் போனால் விரிவுறு பரசீ வைக்கியம் விக்கிந மின்றித் தோன்றும், 345

நிருமலப் பிரமா நந்த நிதிமகா வலியைச் பெற்ற, திரிகுணச் சிரங்க ளுற்ற தியகங் காரப் பாம்பா, லிருதயப் பூமிக் குள்ளே யிருளுறச் சூழப் பட்டிங், கொருவரும் பெறாத வண்ண மொளித்திடப் பட்ட தாகும், 346

தீரனு மொருவன் ஞானத் திறமையாந் திகழ்வா ளாலே, கோரமாஞ் சிரங்கண் மூன்றுங் கொய்தகங் கார மான, சாரமில் சர்ப்பந் தன்னைச் சற்றுமில் லாத றுத்துப் பூரணச் சுகஞ் செய் விக்கும் புகழ்நிதி புசிக்க வல்லோன், 347

வெப்பமாம் விடதோ டந்தான் வீங்குதே கத்தி லெம்மட், டற்பமு மிருக்கு மம்மட் டரோகமில் லாது கண்டோ, மப்படி யோகி யர்க்கு மகங்கர மெம்மட் டம்மட், டொப்பிலா முத்தி சித்தி யுள்ளவா றுதிப்ப தில்லை, 348

பகையகங் கார மியாதும் பற்றற நசித்த தாலு. மதுநின்று செய்வி கற்ப மறவுமே யடங்க லாலுஞ், சுககநப் பிரத்திய காங்ம சொரூபநல் விவேகத் தாலு, மகமது வானே னென்றே யடையலாங் தத்து வத்தை. 349

சொருபநற் சத்தை யாலே சுயமுமே சத்துப் போலாய், வெருளுறுங் கர்த்தா வாகி விகாரி யாய்ச் சொரூபந் தன்னின், பிரதிபிம் பத்தை மேவிப் பிறங்கிய வகங்கா ரத்தின், மருவிய வாங்ம புந்தி மாற்றுவாய் விரைவில் மைந்தா,

சுககநச் சொரூப மாகிச் சுத்தசிங் மூர்த்தி யாகுங், தகவுள பிரத்திய காங்ம தத்துவ மாமு னக்கிவ், வகமுட னத்தி யாச மடைந்ததாற் சநந மாதிச், சகலமாங் துயர்மி குந்த சம்சார முற்ற தன்றே. 351

புமழ்சதா நந்த சித்தாய்ப் பூரண வேக ரூபத், தகவுள நிருவி கார தத்துவ மாமுனக் கிவ், வகமுட னத்தி யாச மன்றியிற் சுபாவ

மாக, விகழுமிச் சம்சா ரந்தா னேதுமே யெங்கு
மில்லை, 352

ஆதலாற் றுய்ப்போன் கண்டத் தடைத்த
கண் டகமே போல, வாதக முனக்குச் செய்து
வந்தவிவ் வகங்கா ரத்தைக், கோதிலா ஞாந
வாளாற் கொய்துநன் றுன்சொ ரூப, பூதசாம்
பிராச்ய வின்பம் புசித்திடு நினைத்த வாறே. 353

பிந்தியும் பரமார்த் தத்தைப் பெற்றதாற்
காத னீக்கி, நிந்தைசே ரகங்கா ராதி நின்றவிர்த்
தியினை மீட்டிங், கந்தவுன் சொரூபா நந்த மநு
பவித் தகண்ட மாகிப், பந்தமி னிருவி கற்ப
பதத்தினில் வெறிதி ருப்பாய், 354

பெருகிய வகந்தை மெத்தப் பெயர்த்திடப்
பட்ட போது, வொருகண மேனு மற்று
முளத்திற் னினைக்கப் பட்டால். விரிவுறப்
பின்னு முண்டாய் விட்சேபம் வெகுவாய்ச்
செய்யும், மருவுகாற் றுல லைந்த மழைக்கால
மேக மேபோல். 355

பலபுலச் சிந்தை யாலிப் பகையகங் காரத் திற்கிங், கலைவுற வவகா சத்தை யற்பமு மளிக்க வொண்ணு, துலரெலு மிச்சை யுய்ய வூற்றிய நீரே போலிச், சலவகங் கார முய்யச் சலசிந்தை யேது வன்றே. 356

தேகாதி சிந்தை யுற்றேன் றிருசியப் பாசம் பெற்றேன், றேகாதி சிந்தை யற்றேன் றிருசியப் பாசம் விட்டோ, ஞகாத சிந்தை தானே யாதலாற் பேதங் கொண்டிவ், வேகாத பவபந் தத்திற் கேதுவா யிசையு மைந்தா. 357

காரியம் வளரு மாகிற் காரண மான வித்தும், பாரினில் வளர்ந்த தாகப் பார்க்கலா மதுதா னிங்கிற், காரண மான வித்துங் கடிதினி னிங்க லாலே தீரனே காரி யத்தைத் தீர்த்திட வேண்டு முன்னம், 358

காரிய மான சிந்தை கருத்தினில் வளரும் போது, காரண வாத னைக்கோள் கருத்தினில் வளரா நிற்கும் காரண வாத னைக்கோள்

கருத்தினில் வளரும் போது, காரிய சிந்தை
யுந்தன் கருத்தினில் வளரு மைந்தா. 359

வந்தவச் சிந்தை யாலே வாகியச் செய்கை
யுண்டாம், தொந்தமாஞ் சிந்தை செய்கைத்
தொடர்பினுன் முன்னு ரைத்த, வந்தவா
தனைவ ளர்ந்திங் ககிலமாஞ் சீவ ருக்கும், பந்த
மாஞ் சம்சா ரத்தைப் பலவிதம் படைக்கு
மன்றே. 360

ஓதிய வேது வாலே யொழிவிலா துதித்த
விந்தப், பேதமாம் பவபந் தத்தைப் பெயர்த்திட
வேண்டி முன்ன, ரோதிய மூன்றை யுந்தா
னொழித்திட வேண்டு மத்தி, லேதுநல் லுபாய
மென்னி லிதனைநீ யியம்பக் கேளாய். 361

எவ்வவத் தையிலு மெந்த விடத்திலு
மெக்கா லத்தும், விவ்விதத் தோற்றம் பெற்று
வேறெனக் காண்ப வெல்லாஞ், செவ்விய பிரம
மேயாஞ் சிறிதும்வே றில்லை யென்னு, மிவ்வி
தப் பார்வை தானிங் கியம்பிய நல்லு பாயம். 362

ஓதிய பார்வை யாகு முண்மைவா தனையு ரத்தாற், கோதுறு செய்கை முன்னர்க் குவிந் திடும் பின்பு சிந்தை, யாதுமே யிறக்கும் பின்ன ரேதுவா தனைய டங்கும், வாதனை யடக்கந் தானே வழுவிலாச் சீவந் முத்தி. 363

சருவமும் பிரம மென்னுஞ் சத்துவா தனைவ ளர்ந்தால், மருளகங் கார மாதி மலினவா தனைய டங்குங், கருமையா மெவ்வி டத்துங் கலந்துள வந்த கார மருணனின் காந்தி தோன்று மளவிலே யழியு மாபோல். 364

இருளிருட் செய்கை யாக விசைந்துள வநர்த்த மெல்லா, மிரவிநின் றுதிக்கும் போதிங் கிறந்திடு நீதி யேபோ, லருவவத் துவிதா நந்த வநுபவ முதிக்கும் போது, பெருகிய பந்த மத்தாற் பெற்றதுன் பமுமி லாவாம். 365

திருசியத் தோற்றந் தன்னைத் திருக்குமாத் திரமே யாகப், பிரவிலா பித்து நின்னைப் பிரம

வாகிய வநுசந் தாந மலிநவா சனையைத் தானே, பாகனே மேலு மேலும் பயனதாய் வளரப் பண்ணு, மாகையால் விவேகி யத்தை யறிந்துடன் பாகி யம்விட், டேகமா மாந்ம ரூப மென்றுமே யநுசந் திப்பான். 381

வாகியம் விட்ட போதே மநதுநின் மலமா மைந்தா, வாகிய வம்ம நத்தா லடையலா மாந்ம ஞாந, மேகமா மந்த ஞாந மிசைந்ததாற் பவபந் தம்போ, மாகையாற் பாகி யத்தை யடக்கலே முத்தி மார்க்கம். 382

சாதுவே முமுட்ச வாகிச் சதுரனுய்ச் சதசத் தோர்ந்து, வேதமே நம்பி யாந்ம விபுத்துவ மறிந்தோ னுர்தான், கேதமா ரசத்துத் தன்னைக் கெடுத்திடு மென்ற றிந்தும், பேதமா மவ்வ சத்தைப் பேணுவன் பால னேபோல். 383

உடன்முத லபிமா நத்தை யுடையவன் முத்தி சாரான், றிடமுற முத்தி சார்ந்தோன் றேகாதி யபிமா நிக்கான். சடமுறு துயிலு டைத்

தோன் சாக்கிரஞ் சாரா னத்தை, யுடையவன் றுயிலைச் சாரா னுபயமும் வெவ்வே றன்றோ.

தன்னையே சராச ரங்கள் சகலத்தி னுட்பு றத்துந், துன்னிய சாட்சி யாயுந் தொடரதிட் டாந மாயு, முன்னியிவ் வுபாதி யெல்லா மொழித்தெவ னகண்ட மாகி, மன்னுபூ ரண மாய் நிற்பன் மாசிலா தவனே முத்தன். 385

சகலமாம் விதத்தி னுலுஞ் சம்சாரம் விடு தற் கேது, வகமிலா வகண்ட பாவ மன்றிமற் றேது மில்லை, துகளிலா வாந்ம நிட்டைத் தொடர்பினுற் றிருசி யத்தை, யிகழிலவ் வகண்ட பாவ மிசைந்திடு மதிகா ரிக்கே. 386

மருவுதே காந்ம புந்தி மன்னிப்பா கியமே யான, பொருளுடை யநுப வத்திற் போகிய மநத்த னுகி, யொருவித மிலாத செய்கை யொழி விலா துற்றே னுக்குத், திருசியந் தன்னை நீக்குந் திறமையெவ் விதத்தி லுண்டாம். 387

அகிலமாந் தர்மங் கர்ம மசத்தியப் புலனை னைத்து, மிகவுமே துறந்து நித்தம் மெய்யான

னிங்ஙன் சொன்னவிவ் வநர்த்த மெல்லாந், தருவதாஞ் சங்கற் பத்தைத் தள்ளுவான் விவேகி யாஞேன். 373

ஆதலா லாந்ம நிட்டை யன்றியுந் தவிர்த ருனே, சாதுவே விவேகி யர்க்குச் சாற்றிய கால ஞருங், கோதிலா வாந்ம நிட்டை கூடிஞேன் பேற்றைச் சார்வ, ஞதலாற் சாவதாந மாகவந் நிட்டை சார்வாய். 374

கேதமா ருடலி ருந்துங் கேவல ஞன வன்ருன் பேதமா ருடலி லாத பேற்றிலுங் கேவ லன்காண், சாதுவே பேதந் தன்னைச் சற்றுமே காண்ப வர்க்கு, மேதக யசுரு வேத மிகவுமே பயத்தைச் சாற்றும் 375

போதவா னெப்போ தேனும் பூரணப் பிரமத் தின்க, ணேதமாம் பேதந் தன்னை யெவ ளவுங் காண்ப னேலப், பேதமே யன்னே னுக்குப் பீதியா மாத லாலே, சா துவே மறந்தும் பேதஞ் சற்றுமே காண வொண்ணு, 376

சுருதிகண் மிருதி நீதி சுத்தமாய் நிடேதஞ் செய்த, திருசியத் தாந்ம புந்தி செய்பவன்

விவேகி யேனும், விரிவுற மேலு மேலும் விவித மாரந் துன்பஞ் சார்வ, னரியனே நிடேத கர்த்தா வாகிய பாவி யேபோல். 377

சத்திய வநுசந் தானஞ் சார்ந்தவன் முத்த ஞகி, மெத்தவு மகத்து வத்தை மேவுவ னித்த மாக, மித்தையி னதுசந் தாந மேவிஞேன் மிகந சிப்பன், பத்தனே யசோர சோரர் பாலிதைப் பார்க்க லாஞேம். 378

ஆதலாற் சந்நி யாசி யசத்தநு சந்தா நந்தா, னேதமாம் பந்த வேது வென்றிதை யிகழ்ந்து நன்ருய்ச், சோதியா நந்த சத்தாய்ச் சொல்லிய பிரம நானெனன், ருேதிய பிரம நிட்டை யொழி வற வொன்ற வேண்டும். 379

நீதிலாந் மாநு பூதித் திகழ்விஞற் றிடமாய்ப் பெற்ற, பேதமில் பிரம நிட்டை பெருகிய சுகஞ்செய் விக்கு, மேதமா மஞ்ஞா நத்தா லெய்திய துயரை யெல்லாஞ், சாதுவே யந்த நிட்டை சற்றுமில் லாது செய்யும். 380

மாத் திரமாய்ப் பார்த்திங், கரியனே வெளியி
லுள்ளி லாவது சமாதி பெற்றுக், கருமபந்
தம்வ ரைக்குங் காலநீ தள்ளு வாயே, 366

சொருபநிட் டையையோர் கா லுஞ் சொற்
பமுந் தவிர வொண்ணு, தரணியி லந்த நிட்டை
தவிர்தலே கால னென்று, பிரியனே பகவா
னுன பிரமபுத் திரரே யாதி பரசநச் சுஜாதீ
யத்திற் பலவிதம் பகர்ந்தா ரன்றோ. 367

ஆதலாற் சொரூப நிட்டை யன்றியுந் தவிர்
தன் ஞாநிக், கேதமா மநர்த்த மாகு மேதெனிற்
றவிர்த லாலே, சாதமா மோக மத்தாற் சநித்திடு
மகந்தை யத்தாற், கோததாம் பந்த முண்டாங்
கூடிடு மவற்றுற் றுன்பம். 368

பொருவிலா ஞாநி யேனும் புலத்தினேர்
சென்றேன் றன்னைத், தரணியிற் சொரூப
நிட்டை தவிர்தலா மறதி புந்திப், புரைகளா
லலைக்குஞ் சோர புருடனைச் சோர மாதிங். கரி
யனே விவித மாக வலைத்திடு நீதி யேபோல்,

தீரனு ஞானி யேனுந் திருசியஞ் சென்றேன் றன்னைக், கோரவா வரண சத்தி குறைவுற மறைக்கு மன்றே, நீரினுட் பாசிக் கொத்தை நீக்கினுங் கணத்தி லந்த, வாரியை யதுதான் மற்றும் வழுவுற மறைப்ப தேபோல். 370

சலித்தடிக் கின்ற பந்து சற்றுமே தவறி மாடித், தலத்துள படியில் வீழ்ந்த தன்மை போற் சொரூப மென்னு. மிலக்கிய நின்று சித்த மெவளவுந் தவறு மாகிற், புலத்தினோர் முகமே யாகிப் போய்விழு மங்கங் கேகாண். 371

புலனிடைச் சென்ற சித்தம் புலத்தையே நன்றி தென்று, பலவிதஞ் சங்கற் பிக்கும் படர்ந் தவச் சங்கற் பத்தாற், றொலைவிலாக் காம முண் டாந் தொடர்ந்தவக் காமந் தன்னுற், சலமுறு ப்ர விர்த்தி யுண்டாஞ் சார்ந்தவப் ப்ரவிர்த்தி யாலே,

அருமையா மாந்ம நிட்டை யகன்றுபோ மற்ற வற்றுற், புருடனுந் தீங்கில் வீழ்ந்து போகுவ தன்றி மற்றுஞ், சொருபமே சாரா

நிட்டை சார்ந்து, சுககந சொரூப மோர்ந்தச் சுகத்தையே யிச்சிப் போர்க்கே, திகழ்வுறு முயற்சி யாலே திருசிய நீக்க முண்டாம். 383

திருசிய மியாவு நீக்கித் திடமுற வகண்ட பாவஞ், சருவதா வடைவ தற்கே சாதுவா மெதிக ளுக்குச், சிரவண மாதி கன்மஞ் செய்த பின் சுருதி தானே, சருவதா நிருவி கற்ப சமா தியை விதிக்கு மன்றோ. 389

ஆதலா லச்ச மாதி யடைந்ததா லசல ரான, சாதுவா மெதிக ளன்றிச் சதகோடி சங்மத் துற்ற, வேதவா தனையி சைந்தோ ரெவ்விதச் சதுர ரேனுந், தீதகங் கார மாதித் திருசியம் விரைவிற் றீர்க்கார். 390

ஓதுமா வரணந் தன்னி னுரத்தினால் விட்சே பந்தான், போதமில் புருடன் றன்னைப் பொய்ம் மயக் கத்தி னுக்கோ, ரேதுவா மகங்கா ரத்தோ டேகமா யிசைத்து வைத்துப், பேதமா மதின்கு ணத்தாற் பேயென வலைத்து வைக்கும். 391

இருளுமா வரண சத்தி யாவுமே நசியா தாகின், மருளும்விட் சேப சத்தி மாசற நசிக்க மாட்டா, பரவுமா வரண நாசம் பாலினீர் பகுப்ப தைப்போற், றிருசியந் திருக்கி ரண் டைத் திகழ்வுறப் பகுத்தா லுண்டாம். 392

சாற்றுமா வரண நாசஞ் சாரவே யாந்ம ரூபந். தோற்றிய சம்ச யாதித் துகளறத் தானே தோன்று, மூற்றவிட் சேப முந்தா னொழிந்திடு மதுதான் மற்றுந், தோற்றுமே யாகிற் பொய்யே தோன்றிடு மென்று கொள்வாய். 393

நல்லபோ தத்து தித்த நல்லதாம் விவேகந் தானே, சொல்லிய வாந்மா நாந்ம சொரூபநன் ருய்ப்ப குத்துத், தொல்லையா மஞ்ஞா நத்தாற் றொடர்ந்தபந் தஞ்சி தைக்கு, மல்லல்செய் பந்த மற்றோர்க் கற்பமும் பவமீண் டில்லை. 394

புத்திர பரசீ வைக்கிய போதமாம் பெரிய வந்நி, மெத்தவு மவித்தைக் காட்டை மீதியன் றித்த கிக்கி, லத்துவி தாந்ம ரூப மடைந்துள

முத்த னுக்கிங், கித்துனீப் பவத்தை மீண்டு
மீன்றிடும் வித்தே தாகும். 395

செவ்விதா யாந்ம ரூப தெரிசநஞ் செய்வ
தாலே, யெவ்வவா வரண நீங்கு மிறந்திடு
மித்தை ஞாநம், விவ்வித விட்சே பத்தால்
விளைந்துள துன்ப நீங்கு, மிவ்விதஞ் சொன்ன
மூன்று மிசைந்தவோர் திருட்டாந் தங்கேள்.

நீதற விரச்சு ரூப தரிசநஞ் செய்வ தாலே.
மோதுமா வரண மாதி மூன்றுமே முடிந்த
வன்றோ, வாதலாற் பந்த நீக்க மடைந்திட
விவேகி யானே. ஞதியா மாந்ம ரூப மவசிய
மறிய வேண்டும், 397

ஏதமாம் புந்தி யொன்றே யெரியயப் பிண்
டம் போலப்,போதசற் பிரமத் தோடே பொய்ய
தாம் புணர்ப்ப டைந்து, ஞாதிரு ஞாந ஞேய
ஞாலமாய்ப் பரிஞ மிக்கு, மாதலா லிவைய
னைத்து மசத்திய மாகு மென்றும். 398

புந்திகற் பிதமே யாகப் பொருந்திய ஞாதி
ராதி, மைந்தனே மநம யக்கம் மனோரதங் கநவி

வற்றிற், சந்ததம் பொய்யே யாகச் சகலரும் காண்ப தாலே, யந்தமி லாத்ம ரூப மநிசமு நிருவி காரம். 399

பகுதியின் விகார மாகப் பரவிய வகங்கா ராதி, புகலுட லீரு மியாவும் புலனனைத் துங்க ணத்தில், வெகுவித விகார மேவும் விமலமா மாத்மா வென்று, மிகழ்வுறு விகார மேவா தேகசித் துருவ மேயாம். 400

சத்தசத் திற்கு வேருய்ச் சாட்சியாய்ப் புந்தி யாதிக், கித்திற மகம்ப தத்தி னிலக்கியப் பொருளு மாகி, நித்தவத் துவிதா கண்ட நிமல சித் துருவே யான, சுத்தமாம் பிரத்ய காத்மா சுககநப் பரமாத் மாவே. 401

இத்திற நித்தா நித்த வியல்பினைப் பகுத்த வற்றி, னித்தமாந் தன்னுந் மாவை நிச்சயித் தறி வாங் கண்ணு, லத்திற மான நானே யகண்டசிற் பிரம மென்று, தத்துவ மறிந்தோ னியாவுந் தவிர்ந்துதான் சாந்த னுவன், 402

நிருவிகற் பகமே யாக நிகழ்ந்திடுஞ் சமாதி யாலே, யொருமையாந் தன்னுந் மாவி னுண் மையை யெந்தப் போது, புருடனிங் கறிவ னந் தப் போதுதா னஞ்ஞா நத்தான், மருவிய சகல மான மநமுடிச் சிறந்து போகும். 403

பத்தனே நிருவி கற்பப் பரமவத் துவிதாந் மாவிற், புத்தியின் ருேடத் தாலே பொருந்திநீ நானி தென் று, நித்தமும் விகற்ப முண்டா நிமலமாஞ் சமாதி தோன்றி, றத்துவ வநுப வத்தாற் றவிருமவ் விகற்ப மெல்லாம். 404

சமதமா தியைய டைந்த சதுரனுஞ் சந்நி யாசி. யமலமாஞ் சமாதி யாற்ற னகண்டபா வம்பொ ருந்தித், தமசினுல் வருவி கற்பந் தள்ளிநிர் விகற்ப னேயா, யகலமாம் பிரமா கார மாகவே சுகித்து நிற்பன். 405

எவர்கடஞ் சுரோத்தி ராதி யிந்திய மிதய மியாவுஞ், சுவமதா ஞாநாந் மாவிற் சுத்தமாய்ப் ப்பிரவிலா பித்தங், கவமிலாச் சமாதி பெற்ருே

ரவர்களே முத்த ராஞேர், விவிதமாம் பரோட்ச வார்த்தை விளம்புவோர் முத்த ரன்ருல். 406

பேதமா முபாதி யாலே பிங்நனு மொரு வன் ருனே, யேதமா முபாதி தீர்த்தா லேகனு மவனே மற்று, மாதலா லுபாதி தீர்க்க வநிசமும் விவேகி யாஞேன், சாதக நிருவி கற்ப சமாதியே செய்ய வேண்டும், 407

ஏகமா நிட்டை யாலே யென்றுமே பிரமத் தின்க, ணுகுமா சக்தி யுள்ளோ னகண்டசற் பிரம மாவான், சோகமே யுற்ற கீடஞ் சுற்றிய பிரம ரத்தை, யேகமாய்ப் பாவித் துத்தா னென் றுமே யஃதா யிற்றே, 408

கிரியைக ளியாவும் விட்டுக் கீடகம் பிரம ரத்தை, மருவியே தியாநஞ் செய்து மற்றதே யாகு மாபோ, லொருமையா நிட்டை யாலே யுண்மையாம் பிரமங் தன்னேச், சருவதாத் தியா நிப் போனுஞ் சத்தியம் பிரம மாவன், 409

மிகவுமே நுண்மை யான மெய்ப்பரப் பிரமங் தன்னேத், தகவிலாத் தூல திட்டி தன்னிஞ

லெவருங் காணார். நிகழ்மதி நுண்மை யுள்ள
நிமலரே சமாதி யாலே, மிகவுமே சூக்க மான
விருத்தியாங் கண்ணுற் காண்பர். 410

மெத்தவும் புடபா கத்தான் மேவிய மலத்தை
விட்டுச், சுத்தமாந் தன்கு ணத்தைச் சொன்
னமே வுவதே போலச், சித்தமுந் தியாநத் தாலே
சேர்ந்தமுக் குணம லத்தைச், சுத்தமாய் விட்டுத்
தன்னின் சுபாவமாஞ் சொருப மேவும், 411

இடைவிடாத் தியாநத் தாலே யிருதயஞ்
சுத்த மாகித், திடமுறப் பிரமத் தின்கண் டியங்
கிடா தடங்கு மெப்போ, தடர்மிகு மகண்டா
நந்த வநுபவ வேது வான, சடமிலா நிருவி
கற்ப சமாதியப் பொழுதே யுண்டாம், 412

ஆனவச் சமாதி யாலே யகிலவா சனைமு
டிச்சும், போனதாம் விவித மாகப் பொருந்திய
கன்மம் பொன்று, மேனையுள் வெளியி லெங்கு
மென்றுமோர் முயற்சி யின்றி, யூநமில் சொரு
பத் தோற்ற மொருமையா யொளிரா நிற்கும்.

பலிப்பினுற் பார்க்கும் போது பாங்கான சிரவ ணத்தின், சலிப்பிலா மநநந் தானே சத குண மேலா மத்தி, னிலேப்பிலா நிதித்தி யாச மிலக்கமாங் குணமே லாகு, மலுப்பிலா நிருவி கற்ப மளவிலாப் பலனு டைத்தாம், 414

பிரிவிலாச் சமாதி யாலே பிரதிபந் தங்க ளின்றி, யொருமையாப் பிரம ரூப முணரலா மஃதி லாதேற், சருவதா மநவி ருத்தி சஞ்சல மாத லாலே, விரிவுற விரோத மான விருத்தியோ டேக லக்கும். 415

ஆதலாற் பொறிகள் புந்தி யடக்கிநீ நின்னுங் மாவிற், சாதுவே சமாதி பெற்றுச் சந்ததம் பிரம ஞாநச், சோதிகொண் டவிசா ரத்தாற் சுழல்வுறு மிருளை யெல்லா, மீதியில் லாது நீக்கி மிஞ்சிய வடிவாய் நிற்பாய், 416

ஏதுமே பேசாத் தன்மை யெவளவும் வாங்காத் தன்மை, கோதுறு மாசை யின்மை குறைவுசெய் கிரியை யின்மை,சா துவே யேகாந்

தத்திற் சந்ததம் வாசஞ் செய்கை, யீதெலாஞ் சமாதி தன்னை யிசைந்திட முந்து மார்க்கம்.

ஏகாந்த தேச வாச மிந்திய மடங்க வேது, போகாத வவ்வ டக்கம் புரைமந மடங்க வேது, வேகாத வவ்வ டக்க மிவ்வுட லாதி நானென், ருகாத வாத னைக்கோ ளடங்குதற் கேது வாமே. 418

வாதனை யடக்கத் தாலே வரையிலாப் பிரமா நந்தத், தேதமி லநுப வந்தா னென்றுமே தியாநிக் கெய்து, மாதலால் விவேகி யானோ னலேமந வடக்கந் தன்னைச், சாதுவே முயற் சியாலே சாதிக்க வேண்டு மென்றும். 419

அரியனே மநதில் வாக்கை யடக்கதைப் புத்தி யின்கண், பிரிவற வடக்கி யத்தைப் பிறங்குசாட் சியில டக்கு, புரையிலாச் சாட்சி தன்னைப் பூரண நிருவி கற்பப். பிரமமாய்த் தானே பார்த்துப் பெருகிய சாந்தி சார்வாய். 420

ஏதமாந் தேகம் பிராண னிந்திய மநது புந்தி, யாதியா முபாதி கட்கு ளலேமந மெந்த

வெந்தக், கோததா முபாதி யோடே கூடுமம்
மயமே யாக, வோதிய தியாகி யாவ னெழிவிலா
நந்த மொன்ருன். 421

ஆதலா லந்த வந்த வநர்த்தமா முபாதி
சேர்ந்த,வேதமாந் தன்ம நத்தை யேகாது மீட்க
வேண்டிச், சாதுவே தியாகி யானேன் சகலமு
நன்ருய்த் தள்ளி, யோதிய பிரமத் தின்க
ணேய்வதே யொழியா வின்பம். 422

பாகனே விரக்தன் ருனே பரமோட்ச
விச்சை யாலே, வாகியாந் தரத்தி னுலே
வருவதாம் பற்றி ரண்டு,மேகமாய் விடுவ தாலே
விபம்பிய விரக்த னுக்கே, வாகியாந் தரமி
ரண்டாய் வகுத்தநற் றுறவு கூடும். 423

பரவிய புலன்க ளோடே பற்றுதல்
வெளிப்பற் ருகு,முரவகங் கார மாதி யோடுபற்
றுட்பற் ருகும், பெருகிய விரதி பெற்ருேன்
பிரமநிட் டையைய டைந்திவ், விருவிதப்
பற்றை யுந்தா னேகமாய் விடுக்க வல்லோன்.

பரவிடு மோர்பட் சிக்குப் பறந்திட விருபட் சம்போன், மருவிடு மோட்ச மாகு மாடிமேற் சீவ னேற விரதிநல் விவேக மென்ன வேண் டிய திரண்டு பட்ச, மிருமையி லொன்றி லாதே வீதின்மீ தேற வொண்ணு. 425

மிகவுமே விரக்த ஞானேன் மேவுவன் சமாதி தன்னைப், புகழ்சமா தியைய டைந்தோன் பொருந்துவன் றிடபோ தத்தை, யிகழ்விலாப் போத முற்ருே னெய்துவன் முத்தி தன்னைத், தகைமைசேர் முத்த னென்றுந் தடையிலா நந்த முண்பன். 426

விரதியை விடவே ருென்றும் விமலமாஞ் சுகமளிக்கக், கருதிய வேது வாகக் காண்கி லேன் றியாங்க் கெங்கு, மரியனே யவ்வி ரக்தி யமலமா ஞாநத் தோடே, மருவுமேற் பேரா நந்த மாரும லளிக்கு மென்றும். 427

யாதினுன் முத்தி யென்னு மிலங்கிய மாதைச் சேர, வோதிய விரக்தி தானே யுத்தம மார்க்க மாகு, மாதலா லகில மான வாசையு

மறவே விட்டுச், சாதுவே நின்னுந் மாவிற் சந்ததங் கருத்தை வைப்பாய். 428

விடசம விடயத் தின்கண் விடுதிநீ யாசை யெல்லா. மடமைசெய் யாசை தானே மரணுதி மார்க்க மன்ருே, படர்குலஞ் சாதி யாதி பற்றிய வபிமா நத்தோ. டிடர்தருங் கன்ம மெல்லா மெவளவு மிலாது தீர்வாய், 429

மித்தையாந் தேக மாதி மிசையக மதியைத் தள்ளிச், சத்திய வாங்மா வின்கண் சாலவம் மதியைச் செய்வாய், நித்தமும் சாட்சி நீயே நிமலநிர்ப் பயமாய் நின்ற, வுத்தமப் பிரம நீயே யுள்ளவா ரூருங் காலே, 430

இலக்கியப் பிரமத் தின்க ணிதயத்தை யூன்ற வைத்துச், சலித்திடு மிந்தி யத்தைத் தனதுகோ ளகத்தி ருத்தி, யலைந்திடா வாக்கை யோனு யதனிலே யுபேட்சை செய்து, நிலைத் துள பரசீ வைக்கிய நித்தநீ யடைதி மைந்தா.

அந்தவைக் கியம டைந்த வகண்டமாம் விருத்தி யாலே, சுந்தரப் பிரமா நந்தச் சுதையினை

மகிழ்ச்சி யோடே, சந்ததம் பாநஞ் செய்வாய்
சாரமில் சகத்தைப் பற்றிச், சிந்தைசெய் மயல்க
ளாலே சேர்பய னுண்டோ சொல்வாய். 432

கருதொணுத் துயருக் கெல்லாங் காரண
மாகா நின்ற, மருளுறு மநாந்ம சிந்தை மாசற
விடுத்து நித்த, மரியனே யின்ப முத்தி யடைவ
தற் கேது வான, பிரியமா மாந்ம சிந்தை பிறிவ
றச் செய்தி யென்றும். 433

நிகழ்சுயஞ் சோதி யாகி நிகிலசாட் சியுமா
மாந்மா, புகலும்விஞ் ஞாந கோசம் பொருந்
தியே விளங்கு மென்று, மிகழ்விழா விவ்வாந்
மாவை யிலக்கிய மாகப் பற்றி, யகமென வநுப
விப்பா யகண்டமாம் விருத்தி யாலே. 434

இகழ்விசா திகவி ருத்தி யாதுமே யில்லா
தென் றுந், தகமையாய்ப் பழகா நின்ற சந்தத
விருத்தி யாலே, சுககந மான வாந்ம சோதி
யைச் செவ்வி தாக, வகமெனக் கோச ரித்திங்
கநிசமு மறிய வேண்டும். 435

பகருமிப் பரமாந் மாவிற் பாங்குற வாத்ம
புந்தி, மிகவுமே திடமாய்ச் செய்து மித்தையா
மகங்கா ராதிப், பகையிலாப் புந்தி விட்டுப் பல
வுமா மவற்றி லென்றும் புகல்கட படாதி யிற்
போற் புத்திர வுபேட்சை செய்வாய். 436

போதமாத் திரமே யாகப் பொருந்திய
சாட்சி யின்க, ணேதமின் மநத்தை நன்ரு
யிருத்திநற் பழக்கத் தாலே, சாதுவே மெள்ள
மெள்ளச் சலநமில் லாது செய்து, தீதிலாப் பூர
ணத்தைத் திகழவே நோக்க வேண்டும். 437

ஏதமாந் தேகம் பிராண னிந்திய மநத
கந்தை, யாதியஞ் ஞாநத் தாலே யாக்கிய
வுபாதிக் கூட்ட, மேதுவி லகண்ட போத
வின்பமாந் தன்னுந் மாவை, யோதிய மகாகா
சம்போ லொன்றெென வுணர வேண்டும். 438

ஓதிய கடங்கு சூல மூசியே முதலாய் வந்த,
பேதமா முபாதி போனுற் பெரியவா காச
மொன்றே, யீதுபோ லகங்கா ராதி யீநமா

முபாதி போனுற், போதவா நந்த சுத்த பூரண வாங்மா வொன்றே. 439

யாதினு லயனே யாதி யீநமாங் தம்ப மீரு, யோதிய வுபாதி யெல்லா முண்மையில் லாத தாகு, மாதலா. லேக ரூப மாகிய தன்னுங் மாவைப், பேதமில் புரண மாகப் பேணியே பார்க்க வேண்டும். 440

எதிலெது மயக்கத் தாலே யிங்குக்கற் பிதமா யிற்ரே,வதுவது வாகு மன்றி யறிந்திடி லதில்வே ருகா, திதமுறு ஞாநத் தாலே திகழ்மய னசிக்கும் போதிங். கெதிரிலே கண்ட சர்ப்ப மிரச்சுவே யன்றி வேருே. 441

ஈதுபோ லாங்மா வின்க ணிலங்கிய யாவு மாங்மா, வாதலா லாங்மாத் தானே யயனரி யரனு மாகு, மோதுமிந் திரனு மாகு முயர்சுரர் நரரு. மாகு மேதுமே யாங்மா வன்றி யெவளவு மிதில்வே றில்லே. 442

பூரண வாங்மா வுள்ளிற் பூரணுங் மாப்பு றத்திற், பூரண வாங்மா மேற்கிற் பூரணுங் மாக்கி

ழக்கிற், பூரண வாங்மாத் தெற்கிற் பூரணுங்
மாவ டக்கிற், பூரண வாங்மா மேலிற் பூரண
வாங்மாக் கீழில். 443

பிரமமா நானே யுள்ளிற் பிரமமா நான்பு
றத்திற், பிரமமா நானே மேற்கிற் பிரமமா
நான்கி ழக்கிற் பிரமமா நானே தெற்கிற்
பிரமமா நான்வ டக்கிற், பிரமமா நான்மேற்
கீழிற் பிரமமா நானே யெல்லாம். 444

அலைநுரை குமிழி மற்று மாகிய சுழலே
யாதிப், பலபல வுருவ மெல்லாம் பார்க்கிலோர்
சலமே போல, வலைவுறு தேக மாதி யகங்கர
மீரு யாவு, நிலையுறு சித்தே யாகு நிமலமாஞ்
சித்த தொன்றே. 445

அகிலமா மநது வாக்கா லறியுமிச் சகம
னைத்தும், பகுதியின் மேலாய் நின்ற பரமமாஞ்
சத்தே யாகும், பகருமச் சத்தை யன்றிப் பார்க்
கில்வே ருக வில்லைத்,.திகழ்கடங் கலச மாதி
தெரிந்திடின் மண்ணின் வேறே. 446

பகுதியா மதுவி னாலே பலவித மயக்கப் பட்டோ, னகுதுநீ நானி தென்றே யறைவதா லாவ தென்னே, மிகவுமே சுருதி தானே மித்தியா வத்தி யாச மிகழவே துவித மில்லை யென்னவே யிசைக்கு மன்றே. 447

வானிகர் மலமி லாதாய் வருவிகற் பமுமி லாதா, யூனமா மளவி யங்க ளோர்விகா ரமுமி லாதா, யானவுள் வெளியி லாதா யபிந்நவத் துவித மான, வீநமில் பிரம மேநா மினியெதை யுணர வேண்டும். 448

விரிவதா யிங்கு ரைக்க வேண்டிய தொன்று மில்லை, பிரமமே சீவ ரியாவும் பிரமமே பரவு மீசன், பிரமமே யணுவீ ருகப் பிறங்கிய சகம னைத்தும், பிரமமே யேக மென்று பேசலாற் சுருதி யெல்லாம். 449

பிரமமே நாமென் றிந்தப் பெரிதான ஞாநம் பெற்றோர், பரவிய பாகி யத்தைப் பற்று துநன் றுய் விட்டே, யொருமையா நந்த சித்தா யுண்

மையா யுள்ள வந்தப், பிரமமே யாகி யென்றும்
பிறங்குவ ருறுதி யீதே. 450

மலமய தூல மீது மற்றுமே வாயு
வைப்போ, லலைவுறு சூக்க மீது மகமபி மாநம்
விட்டுப், பலமறை புகழா நந்தப் படிவமாம்
பரநா னென்றே. சலநமிற் பழக்கத் தாலே
தற்பர வடிவாய் நிற்பாய், 451

அரியனே சவதே கத்தி லபிமாந முள்ள
மட்டும், புருடனெவ் விதத்தி னலும் புநிதனே
யாகான் மற்றுஞ், சருவதா சநநந் துஞ்சல் சஞ்
சல மாதி வியாதி, நரகமே முதலாந் துன்ப நண்
ணுவ னநா வாக, 452

நிருமலச் சிவமாய்த் தூய்தாய் நித்தநிச் சல
மாய் நின்ற, பிரமமாந் தன்னுந் மாவைப் பிரிவற
வுணர்ந்த போதே, புருடனற் சுத்த னகிப்
புகறுய ரியாவும் விட்டுப், பிரமமே யாவ
னிவ்வா பேசிடும் சுருதி யெல்லாம், 453

கருதிய தன்னுந் மாவிற் கற்பித மான மித்
தைப், பொருளினை யெல்லாந் தள்ளும் போது

நிட் கிரிய மாகிச், சருவபூ ரணமா யொன்ருய்ச் சச்சிதா நந்த மான, பரமமாம் பிரம நாமே பரமார்த்த மீதே மைந்தா. 454

தன்னுடை மநவி ருத்தி தன்னுடைச் சொருப மாகப்,பன்னிய நிருவி கற்பப் பரமமாம் பூர ணத்தின், மன்னியே சமாதி பெற்ருன் மற்றெரு விகற்ப முந்தான், றன்னெதிர் காணு தத்தாற் றத்வமாய் விகற்ப மில்லை, 455

சோகமா ஞால மென்னுஞ் சொல்லிய விகற்ப மெல்லா, மோகமா ரசத்தே யாகு மொழியுமோர் விகார மின்றி, யாகுமோர் வடிவு மின்றி யகிலமாம் விசேட மின்றி, யேகமாம் வத்து வின்க ணேதுதான் பேதஞ் சொல்லாய்

ஞாதிரு ஞாந ஞேய ஞாலமாய் நவிலு கின்ற, 'பாதொரு பொருளு மின்றி யெவ்விகா ரமுமே யின்றி, யோதுமோர் வடிவு மின்றி யோர்விசே டமுமே யின்றி, மீதியாம் வத்து வின்கண் மேவிய பேத மேதாம், 457

அற்பமும் விகார மின்றி யகிலமாம் வடிவு மின்றிச், செப்பிய விசேட மின்றிச் செய்கையு மிபாது மின்றி, யற்பமில் கற்ப காலத் தாழிபோ னிறைந்து நின்ற, வொப்பிலாப் பூர ணத்தி லொன்றிய பேத மேதாம். 458

பரவிய தேசு தன்னிற் பரம்பிய விருளே போலப், பிரமையி னேது வாகப் பேசிய தமசு யாதில், விரிவற லயிச்சு மந்த விமலமாம் வத்து வான, வொருமையாம் பிரமத் தின்க ணொன்றிய பேத மேதாம். 459

ஒருவடி வாக வெங்கு மோங்கிய வத்து வின்கண், மருவிய பேத மென்னு மாற்றமு முண்டோ சொல்லா, யொருசுக வடிவாய்த் தானே யொன்றிய சுழுத்தி யின்கண், கருதிய பேத மேதுங் கண்டவ ரொருவ ருண்டோ. 460

நிருவிகற் பகமே யாக நிகழ்ந்துள பிரமந் தன்னை, யொருமையா யறிந்த போதங் கொன் றிய சகமே யில்லை, யிருளுறு மிரச்சுக் கண்டா

லென்றுமே சர்ப்ப முண்டோ, மருபுவி யதனைக் கண்டான் மற்றதிற் சலமு முண்டோ. 461

இகழுமித் துவித மியாவு மென்றுமே மித்தை யாகும், புகழுமத் துவித மென்றும் போற்றிய பரமார்த் தந்தான், மகனேயிப் படியே நேராய் மறைமுடி வுரைக்கக் கண் டோஞ், சுகசுழுத் தியிலு நித்தஞ் சுத்தவத் துவிதங் கண்டோம். 462

கற்பித வத்து விற்குக் கருதிய வதிட்டா னத்தோ, டொப்பிய வபேதந் தன்னை யுள்ளவா றறிஞ ரெல்லாங், கற்பித விரச்சு சர்ப்பங் கானனீர் முதலிற் கண்டா, ரிப்படி யிருக்கப் பேத மிசைத்திடல் பிராந்த ரன்றே. 463

சித்தமே மூல மாகச் செறிந்துள விகற்ப மெல்லாஞ், சித்தமில் லாத போது சிறிதுமே விகற்ப மில்லைப், புத்திர வாத லாலே புகன்றசித் தமுந சிக்க நித்தமும் பூர ணத்தி னிலைமையாய்ச் சமாதி செய்வாய் 464

சந்ததம் போத மாகிச் சார்ந்தவா நந்த மாகித், தொந்தமா முவமை யின்றித் தொடருமோ ரளவு மின்றிப், பந்தமில் புரண மான பரமத்தை வித்து, வான்றன் சிந்தையிற் சமாதி யாலே செவ்விதா யநுப விப்பன். 465

ஈநமாஞ் செய்கை யின்றி யெய்திய முடிவு மின்றி, யூநமாம் டங்க மின்றி யோர்விகற் பமுமே யின்றி, வானெனப் புரண மான வத்துவை வித்து வான்றன், ஞாநநற் சமாதி யாலே நானென வநுப விப்பன். 466

பகுதியின் விகார மின்றிப் பாவநா தீத மாகித், திகழுமோ ருவமை யின்றித் திரசம ரசமே யாகிப், புகழ்பரி புரண மான பொருளினை வித்து வான்ற. னிகழ்வுறு சமாதி யாலே நித்தமு மநுப விப்பன். 467

அகிலமாம் பிரமா ணத்தா லணுகவொண் ணுத தாகி, நிகழ்மறைப் பிரமா ணத்தா னித்தமுஞ் சித்தி பெற்றே, யகமென விளங்கு

கின்ற வகண்டத்தை வித்து வான்றன், றிகழ் வுறு சமாதி யாலே திடமாக வநுப விப்பன்.

நிலையிலாச் சநந மாதி நிகிலமாம் விகார மின்றி, யலையிலா வாரி போல வசைவற நிறைந்து நின்ற, பவவுரு நாம மில்லாப் பரமத் தை வித்து வான்றன், சலநமில் சமாதி யாலே சந்தத மநுப விப்பன். 469

உதயமத் தமந மின்றி போர்குண விகார மின்றிச். சததமு முண்மை யாகிச் சாந்தமா யேக மாகி, மிதமிலாப் புரண மான மேனியை வித்து வான்றன், றிதமுறு சமாதி யாலே திகழவே யநுப விப்பன். 470

வளமுறு சமாதி பெற்று வழுவிலா மநத்த னுகி, யளவிலா மகிமை யுள்ள வகண்டமே யநுப வித்துத். தளிர்விலா முயற்சி யாலே ச்ம்சார பந்தந் தள்ளி, யெளிதிலா வாண்மை தன்னை யின்றுநீ சபலஞ் செய்வாய். 471

சருவமா முபாதி யின்றிச் சச்சிதா நந்த மாகி, யொருமையா யுள்ளந் தன்னி லுன்வடி

வாக நின்ற, பொருவிலாப் பிரமந் தன்னைப் பொருந்திநீ பாவிப் பாயேன். மருவிய சம்சா ரத்தின் மார்க்கமே மற்றுஞ் செல்லாய். 472

விரிசிதா பாச னுலே விருத்தியின் மார்க்க மாகப், புருடனின் சாயை போலய் பொய்ய தாய்க் காணப் பட்ட, வுருவினைச் சவமே போல வுணர்விஞற் றூரத் தள்ளிப், பெருமைசேர் மநத்த னுஞேன் பின்பிதைச் சிந்தை செய்பான்,

ஆதலா லமல போதா நந்தமா முன்னே நீயே, சாதுவே பற்றி யிந்தச் சடமல வுபாதி தன்னைத், தீதறத் தூரத் தள்ளித் திரும்பவு நினைத்தி டாதே, கோததாம் வாந்தி யந்நங் குறிப்பது மசூயை யன்றே. 474

சச்சிதா நந்த மான சாந்தமாம் பிரமத் தியி, லிச்சட வுபாதிப் பஞ்சு யாவையு மெரித்துப் பின்பிவ், வுச்சமாய்ப் போதா நந்த வுண்மையாய்த் தூய்தாய் நின்ற, துச்சமில் பிரம மாகத் துலங்குவன் ஞானி யென்றும். 475

பலபிரா ரத்த கன்ம பாசத்தி னாலே கட்டுண், டலையினு மிருக்கி னுந்தன் னுக்கை யைப் பொருள தாக, நிலைபெறு ஞாநி பேணு னிகழ்சுகப் பிரமத் தின்க, ணலைமந விருத்தி நன்று யடங்கியே யிருப்ப தாலே. 476

அகண்டவா நந்தாந் மாவை யநிசமு நானே யென்று, நிகழ்ந்திட வறிந்து ஞாநி நித்தமு மெதையிச் சித்துச். சகந்தனி லென்னி மித்தஞ் சடமான தேகந் தன்னை, யகந்தனி லநுச ரித் திங் கநுதிநங் காப்பன் சொல்லாய். 477

தத்துவ ஞாநி யாகித் தகைமையு ளியோகி யான, சுத்தமாஞ் சீவந் முத்தன் றொடர்பயன் றனே தென்னிற், புத்திர புந்தி யாலே பூரண வாநந் தத்தை, நித்தமு முட்பு றத்து நிகழவே யநுப விப்பன். 478

மிகுந்துள விராகத் திற்கு மேவிய பயனும் போதம், பகர்ந்தவப் போதத் திற்குப் பயனுப ரதியே யாகுஞ், சுகந்தனி னநுப வத்தாற்

ருடர்வுறு சாந்தி தானே. பகர்ந்தவவ் வுபர
திக்குப் பரமான பயனு மைந்தா. 479

ஓதிய வகையாய் மேன்மே லுறுபய
னுதிக்கு மாகிற், சா துவே கீழ்க்கீ ழான சாதநஞ்
சபல மாகு, மோதிய பயன்மேன் மேலு
முதித்திடா தாகிற், கீழ்க்கீழ், நீதியாஞ் சாத
நந்தா னிட்பல மாகு மன்றே. 480

மெத்தவு நிவிர்த்தி யென்ன மேலான
திருப்தி யென்ன. நித்தமுந் தானே தோன்று
நிகரிலா நந்த மென்ன, வெத்திறத் துன்ப நேரே
யெய்தினு மபய மென்ன. வித்தனை வகையும்
வித்தை யீன்றநற் பயனே யாகும். 481

விரிவதா யசுசி யான விவிதமாங் கன்ம
மியாதைப் புருடன்முன் பிராந்தி சேர்ந்த
போதினிற் பொருந்திச் செய்தா. னருமையாம்
விவேகந் தன்னை யன்னவ னடைந்த பின்பு,
மிருளுறு மக்கன் மத்தை யெவ்விதஞ்
செய்வன் சொல்லாய். 482

நிலையிலா வசத்தி னின்று நிவிர்த்தியே
வித்தை யின்பே, றலைவுறும் பிரவிர்த்தி தானே
யவித்தையின் பேரு மிவ்வா, றலைவுசெய் கார
ணீரே யாதியி னிகழக் கண்டோ, மலதெனில்
வித்து வானுக் கானநேர் பயன்வே றேதாம்.

ஏதமா மஞ்ஞா னத்தா லெய்திய மாமு
டிச்சு, மூதுணர் ஞான வாளான் முழுவதுந்
தீர்ந்த பின்னர், யாதொரு விடய விச்சை யிலா
தநல் வித்து வானுக், கேதுதான் பிரவிர்த்திக்
கிங்ங னேதுவா மிசைப்பாய் மைந்தா. 484

வகுத்துள போக்கி யத்தின் வாதனை
யுண்டா காமை, மிகுத்துள விராகத் திற்கு
மேவிய வவதி யாகும், பகுத்துள தேக மாதி
பற்றிய வகந்தை பின்பு மகத்தினு ளுண்டா
காமை யவதியாம் போதத் திற்கே. 485

சந்தத முயற்சி யாலே சச்சிதா னந்த மான'
சுந்தரப் பிரமத் தின்கண் சூக்கமாய் லீன மான;
சிந்தையின் விருத்தி மற்றுஞ் சிறிதுமே யுண்டா

காமை, மைந்தனே யவதி யாகு மாசிலா வுபர திக்கே. 486

நித்தமும் பிரமா கார நிலைமையாய் நிற்ப தாலே, யத்திர வாகி யங்க ளறிந்திடா மநத்த ளுகி, நித்திரை யுற்ருேன் போலு நினைவிலாப் பாலன் போலு, மத்திர விடய போக மநியரா லறிந்தோ ளுகி. 487

சொப்பநங் தன்னிற் கண்ட சொருபமில் சகத்தைப் போலிக், கற்பித சகத்தை யோரோர் காலமே காண்போ ளுகி, யிப்படி யுள்ள ஞாநி யாவனே வவனே தந்நிய, னற்பமில் புண்ணி யப்பே றடைந்தவ னவனே பூச்சியன். 488

யாதொரு சந்நி யாசி யேகமாம் பிரமத் தின்கண் டைதற லீந மான சித்தனுய்ச் செய்கை யின்றி, யேதுமே விகார மின்றி யென்றுமே யின்பஞ் சார்வ, னேதிய வன்ன வன்ரு னெளிர்திடப் பிரக்ஞ னுனேன். 489

சோரநா யகனைப் பற்றுஞ் சோரநா யகியின் சித்தம், பாரமா மனையின் செய்கை பற்றினு

மவனி டத்தே, தீரமாய் நிற்ப தேபோற் றிகழ்
திட பிரஞ்ஞை யைத்தான். பூரணந் தன்னில்
வைத்தோன் புகழ்திடப் பிரஞ்ஞ ஞானேன்.

சுத்தநற் பிரம சீவர் சொரூபமா மைக்கி
யத்தை, நித்தமுங் கோச ரித்து நிருவிகற்
பகமே யான, சித்துமாத் திரவி ருத்திச் சீர்
பெறும் பிரஞ்ஞை யித்தை, நித்தமும் பற்றி
நின்றே னிமலமாஞ் சீவந் முத்தன். 491

தேகவிந் திரிய மாதித் திரளிலே யகந்தை
யும்மற், ருகிய பொருள்க டம்மி லமைவுறு
மமதை யுந்தா, னேகமா யாவ னுக்கிங் கெங்
குமே யிலாத தாகு, மோகமி லவனே சீவந்
முத்தனென் றுரைக்க லாவன், 492

நிலைபெறு ஞான முற்று நிரந்தர வின்பம்
பெற்று, வலைவுறு சகம றந்திங் கமர்ந்தவன்
சீவந் முத்தன், சலமந விருத்தி கெட்டுஞ்
சாக்கிர முற்றே ருகி, யிலகுசாக் கிரமு மின்றி
யிருப்பவன் சீவந் முத்தன், 493

எவனிகழ் வாத னேக்கோ ளிலாதநன் ஞாந முற்றே. னெவன்வெகு விகற்ப மான விப்பவ மியாவும் விட்டோ, னெவன்கலை யுற்றே றுயு மேதுமே கலையற் றேனு, மவனிடர் பந்த மற்ற வமலனுஞ் சீவங் முத்தன். 494

சித்தமோ டிருந்து மியாவன் சித்தமில் லாதி ருப்பன், மித்தையாய்ச் சாயை போலிம் மேனிதான் றொடர்ந்த போது,மத்திலே மமதை யோடே யகந்தையை விட்டோ னியாவ, னித் தமு மவனே பந்த நீங்கிய சீவங் முத்தன். 495

பூதகா லத்தி றந்த பொருளினைச் சிந்தி யாமை, யோதிய வருகா லத்தி லுறுபொரு ளோர்ந்தி டாமை, யேதுமே நிகழ்கா லத்தி லெய்தினு மதிலு பேட்சை, யிதெலாஞ் சீவங் முத்த னிலக்கண மாகு மைந்தா, 496

ஏதமுங் குணமுஞ் சேர்ந்த வியல்பினுல் வெவ்வே றுன, யாதிலுஞ் சமமாம் பார்வை யெய்திஞேன் சீவங் முத்த, ஞேதிய பார்வை

யாலே யொன்றிய விட்டா நிட்ட, மேதிலும் விகார மற்ருே னிலங்கிய சீவங் முத்தன். 497

பிரத்தியக் கபிந்ந மான பிரமவா நந்தந் தன்னைக், கருத்திலே யநுப விக்கக் காதலுண் டான சித்த, விருத்தியைப் பற்ற லாலே வெளியிலு முளிலும் வேறு, கருத்துறு ஞாந மற்ருேன் களங்கமில் சீவங் முத்தன், 498

விரித்துள சகத்தி னுக்கும் விமலமாம் பிரமத் திற்கும், பிரத்தியக் காந்மா விற்கும் பேசிய பிரமத் திற்கும், விருத்தமாம் பேதந் தன்னை விருத்தியி லோர்கா லேனுந். தரித்திடு ஞாந மற்ருேன் றகைமையுள் சீவங் முத்தன்,

சடமான வித்தே கத்தைச் சாதுக்க ளர்ச்சித் தாலுந், தொடர்வான விதனை மற்ருேர் துட்டர்கள் பீடித் தாலுந், திடமான ஞாந நிட்டை சேர்ந்துள திறமை யாலே, யிடராத சமபா வத்தை யெய்தினேன் சீவங் முத்தன்.

சுருதியின் பலத்தி ஞலே சூக்கும வாங்மா விற்குப், பிரமபா வத்தை நன்ருய்ப் பேணியிங் கறிந்த வன்ருன், மருவிய பவடாங் தத்தை மாசற விடுத்தோ ஞகி, யருமையாங் கைவல் யத்தை யடைகுவ னேய மில்லே. 501

பேதமாய் நதியில் வந்த பிரவாகம் வாரி யிற்போல், யாதொரு வெதியி டத்தி லெய்திய விடய மெல்லாங், கோதிலாச் சோரூப மாகக் கூடியே லபிக்கு மற்று, மேதுமே கலக்கஞ் செய்யா தின்னவன் சீவங் முத்தன். 502

பிரிந்திடாப் பிரம ரூபம் பிரிவறத் தெரிந்தோ னுக்குத், திரும்பவு முன்போ லிந்தத் திருசியப் பவமே யில்லே, யிருந்ததேற் பிரமங் தன்னே யிவனறிங் தவனே யன்று, விரிந்துள பாகி யத்தை வேண்டிய வெளிமு கன்ருன்.

முன்னமே தொடரா நின்ற மூலவா சனேவே கத்தாற், பின்னுமிச் சம்சா ரத்தைப் பேணுவன் பிரம ஞாநி, யென்னவொண் ணுது

வத்து வேகமென் றுணர்ந்த தாலே, சொன் னவா சலைய லைத்துந் தொடர்வறச் சிதைந்த வன்றே. 504

மெத்தவும் பெண்ம யக்க மேவிய மூடன் றன்னின், சித்தமுந் தாயி டத்திற் செல்லாது நிற்கு மாபோற், சுத்தவா நந்த மான சொருபமே யுணர்ந்தோ னுக்குஞ் சித்தமிவ் விடயா நந்தஞ் செல்லாது நிற்கு மன்றே. 505

நித்தமுஞ் சமாதி செய்யு நிமலஞ ஞாநிக் கோர்கான், மித்தையாம் பாகி யத்தின் மேவிய தோற்றங் கண்டு, சுத்தமாஞ் சுருதி யன்னேன் றெடர்பயன் கூடு மாறு, சத்திலாப் பிராரத் தத்தைச் சாற்றிடுஞ் சிலவி டத்தில். 506

தகுபய னுதிப்ப தெல்லாந் தான்செய்த கன்ம மூலம், பகருமக் கன்ம மின்றேற் பற்றிய பயனு மில்லைச் சுகமுத லநுப வந்தான் றெடரு மெம் மட்டம் மட்டு, மகமுறும் பிராரத் தத்தை யறிஞனுக் கொப்ப வேண்டும். 507

பிரமமே நாமென் றிங்ஙன் பெற்றுள ஞாநத் தாலே, சருவதாக் கற்ப கோடி சஞ்சித

வினைந சிக்கு, மருளுறு சாக்கி ரத்தான்
மயக்கமாஞ் சொப்ப நத்திற், கருதிய கன்ம
மெல்லாங் காணுது நசிக்கு மாபோல். 508

பேதமாம் சொப்ப நத்திற் பெலமதாய்ச்
செய்யப் பட்ட தீதிலாப் புண்ணி யந்தான்
றீங்குறு பாப முந்தா, னேதுமே கநவை
விட்டிங் கெய்திய நநவுற் ருேர்க்குச் சாதுவே
நரகஞ் சுவர்க்கஞ் சார்ந்திட வேது வாமோ.

சங்கமில் லாம லென்றுஞ் சாந்தமாங் தத்து
வத்தைப், பங்கமில் லாது தானுய்ப் பார்த்து
நன் ருய றிந்த, துங்கமாஞ் சந்நி யாசி தூரவா
காமி யத்தை, யெங்குமே யெவள வேனு
மென்றுமே யிசையான் விண்போல். 510

ஒருமையாம் விண்க டாதி யுபாதியின்
புணர்ப்பி னுலே, மருவிய மதுகந் தாதி மருவி
டாத் தன்மை யேபோ, லொருமையா மாங்ம
ஞாநி யுபாதியின் புணர்ப்பி னுலு, மருவிய
தன்மத் தோடு மைந்தனே மருவ மாட்டான்.

போதமுண் டாவ தற்குப் பூருவ மேயு தித்த, பேதமாம் பிராரத் தந்தான் பெறும்பய னளியா வண்ண, மோதிய ஞாநத் தாலே யொழிந்திடா திலக்கி யத்தின், சேதமே யுத்தே சித்துச் செலுத்திய பாண மேபோல். 512

புலியெனும் புத்தி யாலே போட்டவோர் பாண மற்று. முலவிய பசுவி தென்றே யுண் மையை யுணர்ந்த போது, மலைவற மத்தி யத்தி லடங்கிநிற் காம லேதான், பெலமுட னிலக்கி யத்தைப் பேதித்து நிற்கு மன்றே. 513

ஆகையா லறிஞ ருக்கு மதிபலம் பிராரத் தந்தான், போகமே புசித்த தாலே போக்கிட வேண்டு மித்தை, யேகமா ஞாந மாகு மிலங்கிய வங்கி தன்னு, லாகிய சஞ்சி தத்தோ டழியுமா காமி யந்தான். 514

பிரமசீ வைக்கி யத்தைப் பிரிவற வறிந்து பின்னு, மருவிய மயமே யாக மாரும லென்று நின்றோர், திரிவிதக் கன்ம முந்தாஞ்

சேர்ந்திடா ரவரே நித்த, நிருமல நிருவி கார
நிர்க்குணப் பிரம மாவர். 515

யாதொரு வுபாதி சங்க மின்றிக்கே வலமாய்
நின்ற, பேதமில் பிரம ரூபம் பெற்றுள வறிஞ
ருக்கிங், கோதிய பிராரத் தத்தை யுண்டெனா
வுரைக்க வொண்ணு, காதல்செய் நநவுற்
ரேற்குக் கநவுள தென்ன லாமோ. 516

நனவுளோன் சொப்ப நத்தி னண்ணிய
பொய்த்தே கத்து, மனையதே கோப யோக
மாகிய பொய்ஞ்ஞா லத்து, நனவில்யா னெனதி
தென்று நாடிடான் பின்னே வென்ரு, லநகனே
நனவிற் ருனே யன்னவ னமைந்து நிற்பன். 517

அன்னவன் மித்தை யான வச்சக மடையப்
போனுல், பன்னுமச் சகமுஞ் சேரப் பட்ட
தாய்க் காணுன் மற்றுங், துன்னிய வச்ச கத்தின்
ருெடர்பிருந் திடுமே யாகி, லன்னவன் துயிலை
விட்டோ னன்றெென வறிய லாமே. 518

இந்தவா பிரமந் தன்னை யெய்திய பிரம
ஞாநி, யந்தநற் பிரம மாக வடங்குவன்

பிறிதைப் பாரான், மைந்தனே யவன்புசித்தன்
மலசலம் விடுத்த லாதி சிந்தைசெய் வதுக
நாவிற் சேர்பொருட் சிந்தை போலாம், 519

கருமமே மூல மாகக் கற்பித தேகத்
திற்கிங், கொருமையில் பிராரத் தத்தை யொப்
பலா மற்ற நாதி, சொரூபமாய்க் கருமத் தலே
தோன்றிட வாங்மா விற்கிங் கொருவிதக் கன்ம
மேனு முண்டென வொப்ப லாமோ, 520

ஓதிய வாங்மா வென்று முதித்திடா நித்த
மென்றே, யேதமி லாடம லுள்ள வியல்பினை
யிசைக்கா நின்ற, வேதமோ துவதா லந்த
விமலமாஞ் சொரூப மாஞேற், கேதுமே பிராரத்
தந்தா னிருக்குமென் றுரைப்ப லாமோ, 521

என்றுதே காங்ம புத்தி யிசைந்ததா யிடுமோ
வன்றே, துன்றுபிரார்த்த கன்மத் தொடர்வுமே
சித்தி யாகு, மொன்றுதே காங்ம புத்தி யொழிந்
துள வறிஞ ரின்பா. னின்றதாய்ப் பிராரத்
தத்தை நினைவது நீதி யோசொல், 522

கற்பித தேகத் திற்குங் கருதிய பிராரத் தத்தை, யொப்புதன் மயக்க மேயா முண்மை யிற் கற்பி தந்தா, னெப்படி சநிக்கு நிற்கு மிறந்திடு மியாது மில்லை, யிப்படி யுசாவி லாக்கை யென்றுமே யசத்துத் தானே. 523

ஆதலா லசத்தாக் கைக்கு மமைபிரா ரத்த மில்லை, யோதிய நீதி யாக வொன்றினுக் கேனு மீது, சாதுவே யிலாத தேனுஞ் சத்திய ஞாநி கட்கு, வேதமே பிராரத் தத்தை விதிப் பதன் கருத்தைக் கேளாய். 524

அந்தநல் வித்தை யாலே யவித்தைகா ரியந சித்தாற், பிந்தியித் தேக மாதி பிறங்குவ தெந்த வாறென், றிந்தவா சங்கிக் கின்ற வீநரைச் சமாதா நிக்கச், சுந்தர மான வேதஞ் சொல் லிடும் பிராரத் தத்தை. 525

இப்படி வெளிநோக் காக வேகதே சத்தில் வேதங், கற்பிதப் பிராரத் தத்தைக் காட்டிடு ஞாநி கட்குஞ், செப்பிய தேக மாதி சிறிதுமே

சத்தா மென்றிங், கொப்பிடும் வண்ண மித்தை
யுரைத்திட வில்லை மைந்தா. 526

அகிலபூ ரணமே யாகி யாதியந் தங்க ளின்றி,
மிகவுமோர் பிரமா ணத்தான் மேவவொண்
ணாத தாகிப், பகர்செய லின்றி நின்ற பரமமாம்
பிரம மொன்றே, திகழுமத் வயமா யித்திற்
சிறிதுமே பேத மில்லை. 527

சுத்தநிட் கிரிய சத்சிச் சுகாக சொரூப
மாகி, நித்தவத் துவித மான நிருமலப் பிரம
மொன்றே, புத்திர வெல்லா மாகிப் பூரண
மாயி லங்கு, மித்தில்வே றுன பேத மெவளவு
மில்லை யென்றும். 528

தள்ளவுங் கூட்ட வுந்தான் றகாததாய்த்
தன்னிற் றுனு, யுள்ளவா தன்னி லொன்று
மொன்றிடாப் பிரம மொன்றே, யுள்ளிலும்
வெளியி லெங்கு மொருமையாய் நிறைந்து
நிற்கு, மெள்ளள வேனு மித்தி லெய்திய பேத
மில்லை. 529

நிரஞ்சன நிருவி கற்ப நிட்கள நுண்மை
யாகி, விரிந்தநிர்க் குணமா யொன்றால் விளம்

விடப் படாத தாகிப், பொருந்திய வடிவ மான பூரணப் பிரம மொன்றே, யிருந்ததத் வயமா யித்தி லெவ்வளவும் பேத மில்லை. 530

சித்தமு வாக்கி யாவுஞ் சென்றுகோ சரிக்க வொண்ணுச், சத்ததாய்ச் சுத்த சித்தாய்ச் சாருமோ ருவமை யின்றி, நித்தவா நந்த மாகி நிகழ்சொத சித்த மான, வத்யவப் பிரமத் தின்க ணணுவுமே பேத மில்லை. 531

போகமே தள்ளி யந்தப் போகவா சையும்வி டுத்திங், காகிய சாந்தி தாந்தி யடைந் தமா வெதிக டாமே, யேகாற் றத்து வத்தை யிருதயந் தனில றிந்து, பாகமா மியோகத் தாலே பரசுக மடைந்தா ரன்றே. 532

ஆதலாற் பால நீயு மகண்டவா நந்த மான, பேதமி னின்சொ ரூப பிரமதத் துவம றிந்தே, யேதமா நின்ம நத்தா லிங்குக்கற் பித்த மோகப், பேதமாம் பந்த நீங்கிப் பேறுபெற் றவனாய் நிற்பாய். 533

நிருவிகற் பகமே யான நிருமலச் சமாதி கொண்டே, யொருமையா முன்சொ ரூப முணர்வதாந் திட்டி யாலே, மருடரு மைய மின்றி மாசற நோக்கு வாயேற், பிரியநீ கேட்ட வத்துப் பின்னரும் பேதி யாதால், 534

தன்னிடைப் பொய்ய வித்தை தந்தபந் தம்வி டுத்துத், துன்னிய சச்சித் தின்பச் சொரு பமாந் தனேயே சார, மன்னுநன் னூல்கள் யுக்தி மாகுரு வசந மாநம், பின்னுநற் சுவாநு பூதி பெருகிய பிரமா ணங்காண் 535

பந்தமு மோட்ச முந்தான் பசியுடன் திருப்தி தானுஞ், சிந்தையின் ரோக மில்லாத் திறமையே முதல னேத்து, மைந்தனே தாங்க டாமே மயலற வுணர்வர் மற்றோர், வந்தவோ ரநுமா நத்தால் வகுத்துள விவைம திப்பர். 536

சுருதிகள் பொதுவே யாகச் சொல்லிடு மெப்ப டித்தாய்க் குரவரு மப்ப டித்தான் கூறுவர் சீட னேநம், பரசிவ னருளாற் றந்த

பரமுண ரநுப வத்தால், வரையிலாப் பவமா
கின்ற வாரிதி கடக்க வேண்டும். 537

சகலவே தாந்த நூலிற் சாரமாய்த் திட்டி
மூன்று, திகழுமத் திட்டி யாலே திருசிய
மியாவு நீக்கி. நிகழுமத் துவிதா கண்ட நிருமலப்
பிரமந் தன்னை, யகமென வறிந்த வன்ற
னகண்டனுய் முத்த னுவன். 538

பரவிய திட்டி மூன்றின் பகுப்பினைப் பகரக்
கேளாய், விரிவுறு வாத திட்டி மித்தியா திட்டி
மற்றும், பிரிவெலா நீக்கா நின்ற பிரவிலா
பதிட்டி மூன்ற, மிருமைதீ ரிவைக டம்மி
னிலக்கண மியம்பு வாமே. 539

மருவிய சுழுத்தி போலு மகத்தான தானு
போலும், பிரமமா மென்னி டத்திற் பிறிது
போற் காண்ப தெல்லா, மொருவனு வேனு
மில்லை யுள்ளவ னுனே யென்று, நிருமலப்
பார்வை தானே நிகழ்த்திய வாத திட்டி. 540

இருமைசேர் கநவு போலு மிந்திர சாலம் போலும், பிரமமா மென்னி டத்திற் பிறிது போற் காணப் பட்ட சருவமு மித்தை யாகுஞ் சத்திய நானே யென்று, விரிவுறும் பார்வை தானே மித்தியா திட்டி யாகும். 541

பரவிய வாழி போலும் பார்த்திடுங் கநவு போலு, மொருசிதா காச மான முருவமா மென்னி டத்திற், பிரிவுபோற் காண்ப வெல்லாம் பிரமமா நானே யென்று, பிரிவிலாப் பார்வை தானே பிரவிலா பதிட்டி யாகும் 542

ஓதிய திட்டி மூன்றி லுளத்திலு ளிசைந்த தான, வேறொரு திட்டி யாலு மிருமையாந் திருசி யத்தைத், தீதற நீக்கி நித்தந் திருக்குமாத் திரமாய் நின்ற, பேதமில் பரமு ணர்ந்து பேற்றினை யடைய வேண்டும். 543

பரவிய திட்டி மூன்றும் பரசிதா காச மான, பிரமஞா நத்தி னுக்குப் பேணிய வேது வேனும், பிரிவிலாப் பார்வை யாகும் பிரவிலா

பதிட்டி தானே, யொருமையா ஞானஞ் சேர வுத்தம வேது வாகும். 544

உன்னுடை யகண்ட மான வுண்மையாஞ் சொரூபந் தன்னை, யுன்னுடை யநுப வத்தா லுற்றுநீ யேயு ணர்ந்து, பிங்கமில் சீவங் முத்திப் பேறெனு மின்பம் பெற்று, நின்னிடை நிருவி கற்ப நிலைமையாய் நீயி ருப்பாய். 545

பரமமாம் வேதாங் தத்தின் பரமசித் தாந்த மீதே, பிரமமே சீவர் யாவும் பிரமமே சகம னைத்தும். பிரியனே பிரம மாகப் பிரிவற விருத்தன் மோட்சஞ், சுருதியின் முடிவ னைத் துஞ் சொன்னதிற் பிரமா ணங்காண். 546

என்னலுங் குரவன் வாக்கா லேதமின் மறைமா னத்தாற். றன்னுடை மானந் தன்னுற் றத்துவ மறிந்து சீடன், பிங்கவிங் தியம டக்கிப் பேதமில் சமாதி பெற்றுத், தன்னிலே யசல னுகத் தானொரு விடத்தி ருந்தான். 547

இந்தவா சிறிது கால மேகமாம் பிரமத் தின்கண், டொங்தமில் சமாதி தன்னைத்

துகளிலா மநத்தாற் பெற்றுப், பிந்தியந் நிட்டை விட்டுப் பிரிந்துபே ரின்பத் தோடே, யந்தமி லாத தன்னி னநுபவ மறைய லுற்றான். 548

பிரமசீ வைக்கி யத்தைப் பேணிநா னறிந்த தாலே, பிரிவுசெய் புந்தி யும்போய்ப் பிரவிர்த்தி யாவு நீங்கி, யுருவிது வுருவி தன்றென் றென் றையு முணர்கி லேனியா, னெருமையா மிச்சு கத்திற் குற்றவோர் கரையுங் காணேன். 549

விரும்பிய சொரூபா நந்த விமலமாஞ் சுதையி னுலே. நிரம்பிய பிரம மாகு நிர்மல வாரி தன்னின், பரம்பிய மகிமை தன்னைப் பகர்ந்திட வாக்கி னுலுந், தெரிந்திட மநதி னுலுந் திறமையை யடைநதோ ரில்லை. 550

சிந்துவி லாலாங் கட்டி சேர்ந்ததிற் கரைவ தேபோ, லந்தமில் பிரமா நந்த மாகிய சிந்து தன்னின், விந்துவின் லேசா லேச மீதுதான் வீழ்ந்த வென்றன், புந்தியு மதிற்க ரைந்து பூரணச் சுகமா யிற்றே. 551

பங்குற வின்று கண்ட பார்முதற் சகம னைத்து, மிங்குத்தா னெவள வேனு மில்லையீ தென்னே யென்னே, யெங்குத்தா னேக லாய்த் தோ யாதினு னீக்க லாய்த்தோ, வெங்குத் தான் லிந மாய்த்தோ வீதுதா னென்னே யென்னே.

பேதமி லகண்டா நந்தப் பெயர்பெறுஞ் சுதைநி றைந்த, போதமாம் பிரம மென்னும் பூரணச் சிந்து வின்க, ணேதுதான் றள்ளத் தக்க தேதுதான் கூட்டத் தக்க, தேதுதான் வேறு கின்ற தேதுதான் விருத்த மந்தோ. 553

பிரமமா சாக ரத்திற் பிறிதினை யொன்றுங் காணேன், பிரமமா சாக ரத்திற் பிறிதினை யொன்றுங் கேளேன், பிரமமா சாக ரத்திற் பிறிதேது மறிகி லேனியான், பிரமவா நந்த மாகப் பிரிவற விருக்கின் றேனே, 554

தேசிக ராச போற்றி தெரிந்துள பெரியோய் போற்றி, பாசமற் றவனே போற்றி பரமவுத் தமனே போற்றி, யேசிலா வேக வின்ப விரதமா

முருவே போற்றி, மாசிலா விபுவே போற்றி மாவருட் கடலே போற்றி. 555

நின்னுடைக் கடாட்ச மாகு நெருங்கிய நிலவி னாலே, யென்னுடைப் பவதா பத்தா லெய்திய துன்ப நீங்கி, யுன்னிய வகண்டா நந்த வுண்மையா மாத்ம ரூப, மன்னிநான் கணநே ரத்தின் மகத்துவ மடைந்தே னந்தோ. 556

நாதநின் னருளி னாலே நவில்பவ நக்க ரத்தின் பீதியை விடுத்தோ னானேன் பேற்றினைப் பெற்றோ னானே, னேதருந் தந்ய னானே னுள்ளபூ ரணமே யானேன், சோதியாய் நித்யா நந்த சொரூபமே யானே னந்தோ. 557

சங்கமும் விட்டோ னானேன் சரீரமு மற்றோ னானேன், லிங்கமு மிற்றோ னானேன் லிநமா மநத்த னானேன், தங்கள வற்றோ னானேன் தாபமும் விட்டோ னானேன், பங்கமில் புராண னானேன் பரமநின் னருளி னாலே. 558

கத்திரு போக்த்ரு த்வங்கள் கற்பித விகார மியாவு, நித்தமு மற்று நின்ற நிட்கிரிய

சொரூப மானேன். சுத்தசிற் சொரூப மானேன் சுத்தகே வலமு மானே, னித்தநற் சிவமே யானே னிமலநின் னருளி னாலே. 559

கத்திரு போக்கி ருக்குங் காண்பவன் கேட்போ னுக்கு,மெத்தவுஞ் சொல்வோ னுக்கு மேலதாஞ் சொரூப மானே, னித்தநிட் கிரிய மாகி நிரம்பியோ ரெல்லை யற்ற, வத்தமில் புராண மான வசங்கசிற் சொரூப மானேன்.

தெரிந்திடும் பொருளு னன்று தெரிந்திடாப் பொரு ளன்று, விரிந்துள விவைக ளெல்லாம் விளக்கிநற் சுத்த மாகி நிரந்தர மாக வெங்கு நிரம்பியுள் வெளிக ளின்றிப், பொருந்திய வகண்டா நந்த போதமாம் பிரம மேநான். 561

பகருமோ ருவகை யின்றிப் பழைமையா யாதி யின்றி, யகமிது வதுவென் றிவ்வா ருகிய விகற்ப மின்றிச், சுககந வடிவ மாகிச் சுத்தசித் துருவ மாகி, நிகழுநித் தியவ கண்ட நிர்மலப் பிரம மேநான். 562

பரவிய வயனு மானேன் பரித்திடு மரியு
மானே, னிருமைதீர் சிவனு மானே னீசனு
நானே யானே, னருளுநற் சிவனு மானே
னகிலமு நானே யானேன், கருணைவா ரிதிபே
யுன்றன் கரையிலா வருளி னாலே. 563

பரசக சீவ ரானேன் பரசக சீவ ரற்ற,
வொருசிதா காச மான வுருவமாம் பிரம
மானேன், சருவசான் ருகி நின்ற சந்தத போத
மானே, னிருமம நிரகங் கார நிருமல
சொருப மானேன். 564

சகலபூ தத்தி டத்துஞ் சார்ந்துள சாட்சி
யானே, னகிலமாஞ் சகத்தி னுக்கு மமரதிட்
டாரு மானே, னெகுதுமுன் போகம் போக்தா
வீதென வேருய்த் தோன்றிற், றகுதெலா
மின்று நானே யாகினே னந்தோ வந்தோ, 565

அகலுமா நந்த சிந்து வாகிய வென்னி
டத்திற், பகுதியாம் வாயு வின்றன் பலவிதச்
சலநத் தாலே, வெகுவித ஞால மாகும் விசித்திர

வலைக டோன்றி, யகுதுக ளடங்கி ழுலு மாகுவ தெனக்கொன் றில்லை. 566

உலகர்க ளநாதி யாக வுற்றத மத்தி யாச, நிலைமையா நிருவி கற்ப நிட்கள வடிவா மென்னிற், பலவிதத் தூல மாதிப் பகுப்பினைக் கற்பிக்கின்ருர், கலைகணங் கற்ப மாதி கான்மிசைக் கற்பிப் பார்போல். 567

பற்பல சித்த தோடம் பற்றிய மூட ராலே, கற்பித மதிட்டா நத்தைக் களங்கமாய்ச் செய்யா தென்றும், வெப்புறு கான னீரால் விரிவுறுங் காநற் பூமி, யற்பமுஞ் சேறுடைத்தா யாகுவ தில்லை யன்ருே. 568

பரவிய வாகா சம்போற் பற்பல விகற்ப மற்றே, னிரவிபோல் விளக்கப் பட்ட தெவையினும் வேரு கின்றே, னுரவிய வரைபோலென்று மூன்றிநிச் சலனு கின்றேன், கருதிய வாரி போலோர் கரையுமே யற்ருே னேன்.

பூதவா காச மேகப் புணர்ப்பினை யடையா தேபோற், போதமா நானுந் தேகப் புணர்ப்பினை

யடைய வில்லை, யாதலாற் றேக தர்ம மாகிய
நனாக்க நாவு, மேதமாந் துயிலு மென்று
மேகமா மெனக்கு முண்டோ. 570

வாதக தேக மாதி வந்திடும் போயி டும்மற்'
றேதமாங் கன்மஞ் செய்யு மெய்திய பயனைத்
துய்க்குஞ், சாதமே முதல்வி காரஞ் சார்ந்திடு
மாத லாலே, போதமா நான்கு லக்கோ
போலநிச் சலனே யென்றும், 571

ஒருபகுப் பின்றி யென்று மோருரு வாமெ
னக்கு மருவுபி ரவிர்த்தி யில்லை மற்றொரு
நிவிர்த்தி யில்லை, கருதிய விண்போ லெங்குங்
கலந்திடை வெளியி லாம, லொருமையாய்
நிறைந்த நானிங் குற்றெதைச் செய்வோ
னுவேன். 572

இந்தியஞ் சித்த மின்றி யாதொரு விகார
மின்றி, வந்தவோர் வடிவ மின்றி வானென
வகண்ட போதா, நந்தமா மெனக்குப் பாவ
நல்வினை யென்று மில்லைச், சுந்தர வேத
முந்தான் சொல்வதிப் படியே யன்றோ. 573

புருடனின் னிழலி னேடே பொருந்திய தாபஞ் சீத, மருவிய தீங்கு நன்கு மற்றிவை யேதா கட்டுங், தரணியி லந்தச் சாயை தன்னின்வே ருகி நின்ற, புருடனுக் கிலாத தேபோற் புகல்வினை யெனக்கு மில்லை, 574

திருசியங் கட்கு வேருய்த் திகழ்ந்துதா சீந மாகி, நிருவிகா ரியுமே யாகி நிகழ்ந்திடுந் திருக்கா மென்னைத், திருசிய தரும மொன்றுஞ் சேர்ந்திடா தோரில் லத்தின், றருமமங் குள்ள தீபந் தன்னினைச் சாரா தேபோல், 575

சந்தத மிரவி கன்ம சாட்சியா யிருக்கின் ருற்போற், ருெந்தமா மயப்பிண் டத்தைத் தொடரந லெரிக்கின் ருற்போற். சந்தியி லிரச்சு ரூபஞ் சர்ப்பமே யாகின் ருற்போ, லந்தமில் கூடத் தாங்மா வாகிய நானு மாவேன், 576

ஒன்றினைச் செய்வோ னும்மற் ருென்றினைச் செய்விப் போனு, மொன்றினைத் துய்ப்போ னும்மற் ருென்றினைத் துய்ப்பிப் போனு,

மொன்றினைக் காண்போ னும்மற் றென்றினைக் காண்பிப் போனு, மன்றுநான் சுயமே சோதி யாகிய வாந்மா வானேன். 577

சலித்திடு முபாதி யோடே சார்ந்தசிற் பதிபிம் பத்தி, னலைத்தலை மூட ராஞே ரஃதினுக் கயலே யான, சலித்திடா வகண்ட சித்தின் சத்ததாம் பிம்பத் தின்கண், செலுத்திநான் கர்த்தா போக்தா சிதைந்தவ னென்று சோர்வர். 578

பரவிய சலத்திற் கண்ட பாற்கரன் பதிபிம் பத்தின், மருவிய தரும மியாது மற்றவற் கிலாத தேபோற், றிரிவுறு முபாதி சேர்ந்து திகழ்சிதா பாச தர்ம, மொருசிதா காச மான வுருவமா மெனக்கு மில்லை. 579

சலத்திலோ தலத்தி லோவிச் சடமான தூல தேக, மலைந்துதான் புரண்ட போது மஃதுள தர்மந் தன்னைக், கலந்திடே னுனியா தொன்றுங் கடத்துள தர்மந் தன்னைச், சலித் திடா வாகா சந்தான் சற்றுமே சாரா தேபோல்.

கத்திரு போக்திரு த்வங்கள் கலத்துவ சடத்து வங்கள், பெத்தமுத் தத்து வங்கள் பெரியசா துத்து வாதி, புத்தியின் விகற்ப மன்றிப் பூரணப் பிரம மான, சுத்தவத் துவிதா கண்ட சொரூபமா மெனக்கீ தில்லை. 581

பகுதியின் விகாரக் கூட்டம் பத்துநா ருயி ரங்க, ளெகுதுதா னுதித்த போது மேகசித் தாமெ னக்கிங், ககுதிறு லாகி யென்னை யமலமா மாகா சத்தின், முகிலிறு டம்ப ரந்தான் முளைத்தலா லாகி யுண்டோ, 582

பகுதியே முதலாய்த் தூல பரியந்த மான விந்த, வகிலமா ஞாலத் திற்கு மதிட்டான மாயி லங்கிக், ககநே ராதி யந்தங் கலந்திடாச் சூக்க மாகி, நிகழுமத் துவிதா கண்ட நிம்மலப் பிரம மேநான். 583

உன்னிய மாயை செய்த வோர்விகற் பமுமே யின்று, மன்னிய பிரத்ய காத்ம வடிவமாய்ப் புத்தி யாலே, யின்னதென் றுணர வொண்ணு

வின்பமாய்ச் சத்துச் சித்தாய்த், துன்னுமத்
துவிதா கண்ட சொரூபமாம் பிரம மேநான்.

சகலவா தார மாகிச் சகலசாட் சியுமே
யாகிச், சகலவா கார மாகிச் சகலபூ ரணமே
யாகிச். சகலமு மின்றித் தூய்தாய்ச் சத்துமாய்ச்
சலந மற்ற, வகமிலா நிருவி கற்ப வத்வயப்
பிரம மேநான். 585

ஒருசெய லொருவி கார மொருபகிர்ப்
போர்வி கற்ப, மொருவுரு வோரா லம்ப
மொருவிநா சமுமே யின்றிச், சருவமாய்ச்
சருவாந் மாவாய்ச் சருவமுந் தாண்டி
யொன்றுய்ப், பொருவிலா வகண்டா நந்த
போதமாம் பிரம மேநான், 586

ஈசனே திவ்ய மாக விசைந்தநின் னருளி
னுலே, தாசிலாச் சொப்பிர காச சொருபசாம்
பிராச்ய நிட்டை, நீசனு மென்ற னுலு நித்த
மாய்ப் பெறலா யிற்றே, தேசிகேந் திரனே
போற்றி திரும்பவும் போற்றி போற்றி. 587

சநநமு மிறப்பு மாதி சார்ந்ததாற் பொல்லாங்
கான, கநமதா மாயை செய்த கநவினில்
வெகுதா பத்தோ, டநிசமு மயங்கிச் சோர்ந்த-
வகங்கர வியாக்கி ரத்தாற், றிநமுமே துன்பப்-
பட்ட தீநனு மென்னைக் காத்தாய். 588

பன்னிய சொப்ப நத்தைப் பற்றிய வென்னை
நீயே, பிந்நமில் பிரம ஞாந பெலத்தினுற்
போதிப் பித்திங், கன்னசொப் பநம கற்றி
யகண்டவா நந்தந் தந்து, தந்நிய னுகச் செய்தாய்
தந்தையே யருளி னுலே. 589

குருபர வுன்ற னெந்தக் குற்றமில் லாத-
சோதி, வரையிலா தகில மான வடிவமா
கப்பி றங்கு, மொருமையா யகண்டா நந்த
வுண்மையா மந்தச் சோதி, யுருவமே நோக்கி
யென்று முவந்துநான் போற்றல் செய்வேன்,

இன்னவா போற்றல் செய்திவ் வேகமாந்
தத்து வத்தை, யந்நிய மறவ றிந்தவ் வகண்டவா
நந்தம் பெற்ற, தந்நிய சீடன் றன்னைத்

தகைமையுள் குரவ னேக்கி, மின்னிய வதங் ஞக மீளவிவ் வசநஞ் சொன்னன். 591

அகண்டமாம் பிரமத் தோற்ற மகிலமு மாத லாலே, சகமிது வென்னுந் தோற்றஞ் சத்தியப் பிரம மேயென், றகத்துறு மாங்ம னோக்கா லாறிய சித்த னுய்நீ, யிகபர மெவ்வி டத்து மேகமா யென்றும் பார்ப்பாய். 592

சகத்தினி னல்ல தான சட்சுவைச் சார்ந்தோ ருக்குப், பகுத்துள வுருவ மன்றிப் பார்க்கவே றிலாத தேபோ, லகண்டமாம் பிரம வித்துக் கமலமாம் பிரம மன்றி யகந்தனி லறியும் வண்ண மந்நிய மொன்று மில்லை. 593

எந்தநல் வித்து வான்ரு னிம்மகா நந்தம் பற்றி, வந்ததன் னநுப வத்தை மாறிவா ளாம்பு லத்திற், புந்தியால் ரமிப்பன் விண்ணிற் பூரண விந்து தோன்றின், மைந்தவோ வியமே யான மதியினில் ரமிப்பா ருண்டோ. 594

மித்தியா விடயந் தன்னின் மிகுந்தநு பவத்தி-னலே, யித்தனை யேனுந் திருப்தி யில்லையித்

துன்பம் போகா, வத்வயா நந்தாங் மாவி
னநுபவ நிட்டை தன்னே, நித்தமு நீய டைந்து
நிறைசுகத் திருப்த னுவாய். 595

உன்னையே வெளியி லெங்கு மொருமையாய்
நோக்கி நிற்பா, யுன்னையே யொருமை யாக
வுள்ளிலு முன்னி நிற்பா, யுன்னுடைச் சொருப
மான வொழிவிலாப் பேரா நந்தந், தன்னையே
புசித்துக் காலந் தள்ளுமா மதியு டைத்தோய்.

நிருவிகற் பகவ கண்ட நிம்மலப் போதாந்
மாவில், வருவிகற் பகம னைத்தும் வானமர்
புரமே போலா, மொருமையா மாநந் தாந்ம
வுருவநீ யாகி யென்றும், பரமமாஞ் சாந்தி
பெற்றுப் பரமான மோநஞ் சார்வாய். 597

மித்தியா கற்ப னைக்கு மிகவுமே யேது
வான, புத்திநற் பிரம ரூபம் பொருந்தியே
வெறிதி ருத்த, லுத்தம சாந்தி யித்தி லுள்ளவா
றகண்டா நந்தம், வித்துவா னுக்கு நித்தம்
விமலமாய் விளங்கா நிற்கும். 598

ஏகமாம் பிரம ரூப மியானென வுணர்ந்த-கண்ட, மாகிய வவ்வா நந்த மநுபவிக் கின்ற வர்க்கு, மோகவா தனையே யற்ற மோநமா-நிட்டை யின்றிச், சோகமில் சுகம னிக்கச் சொற்பமும் வேருென் றில்லை, 599

தத்துவ மறிந்த யோகி தன்சொரு பாநந் தத்தி, னித்தமும் ரமிப்போ ஞகி நினைத்ததன் னிச்சை வாறே, புத்திர விருப்ப னிற்பன் போகுவன் படுப்பன் மற்று, மெத்தனை விதமோ வாக விசைந்தவா றிலங்கா நிற்பன். 600

ஏதமாம் பதிபந் தங்க ளின்றிய விருத்தி யாகிப், பேதமில் பிரம ஞாநம் பெற்றுள பெரியோ ருக்கு, யாதொரு தேசங் கால மிலக்கிய திட்டி யாதி, யோதுமா சநமே யாதி யொன்றுமே தேவை யில்லை. 601

தன்னினை யறிவ தற்குத் தாஞெரு நியமம் வேண்டா, மன்னிய கடமி தென்று மலைவற வறிவ தற்குத், துன்னிய பொருள்வி ளக்கந்

தோடமில் சட்சு வன்றிப், பின்னொரு நியமந்
தன்னைப் பேணுவ தெங்கு முண்டோ. 602

அந்தவா நித்த சித்த மாகிய வவ்வாந்
மாவுஞ், சொந்தமா மநவி ருத்தி சுத்தமா
யிருக்கும் போது, சந்ததந் தானே தோன்றுஞ்
சாருமோர் தேசங் காலம், பிந்தியோர் சுத்தி
யாதி பேணுவ தொன்று மில்லை. 603

தேவதத் தோக மென்று தெளிவுறு ஞாநத்
திற்குத், தேவையாய் வேறிங் கொன்றுந்
தேடிடாத் திறமை யேபோற், பாவநப் பிரம
வித்துப் பிரமமே நானென் றிவ்வா, மேவிய
ஞாநத் திற்கு மீளவோ ரபேட்சை யில்லை. 604

இரவியாற் சகத்தைப் போல யாதொரு
பிரம தேசாற்,பரவிய சகம னைத்தும் பகுப்புடன்
விளக்க லாமோ, வொருமையா மந்தத் தேசை
யுண்மையில் லாத துச்ச, வுருவமா மெவ்வ
நாந்மா வுள்ளவா விளக்கி வைக்கும். 605

வேதசாத் திரபு ராணம் விவிதமாம் பூத
மெல்லாம், யாதொரு தேசி னுலே யென்றுமே

யிலங்கா நிற்கும், போதமா மந்தத் தேசாம்
பூரணப் பிரமந் தன்னை, யேதுமே யிச்ச கத்தி
லிலக்குவ தெங்கு மில்லை, 606

ஓதிய விந்த வாந்மா வோர்சுயஞ் சோதி
யாகித், தீதற வநந்த சத்தி திகழ்வுடைத் தாகி
யெல்லாப், போதமா முருவ மாகிப் பொருந்
தியே மற்றொன் றுலு. மீதென வுணர
வொண்ணு விலக்கிய வடிவாய் நிற்கும். 607

ஓதிய வவ்வாந் மாவை யுயர்ச்சிசேர் பிரம
வித்திங், கேதமே யில்லா வண்ண மியானென
வுணர்ந்து நன்றாய்த், தீததாம் பந்தம் விட்டுத்
திராமன முத்தி பெற்று, யாதொரு துன்ப
மின்றி யேகமா யிலங்கா நிற்பன். 608

பிரிவிலா நந்த திருப்தி பெற்றுள பரம
வித்து, மருவிய விடயத் தாலே மகிழ்வுசோர்-
வடையா னத்தி, லுரவிய காம மாதி யுற்றிடான்
றன்னி டத்தே, சருவதா ரமிப்போ னாகிச்
சந்தத மகிழ்ச்சி சார்வன். 609

பரவிய லீலை செய்யும் பாலகன் பசிதா கங்கண், மருவிய தேக பீடை மற்றெதும் விட்டு லீலை, புரிவது போல ஞானி பூரண சுகியே யாகி, நிருமல நிரகங் கார நிலைமையாய் ரமிப்ப னித்தம். 610

சிந்தைதை நியமி லாமற் செறிபலி யன்ன முண்டு, வந்துறு குளமே யாதி வாரியைப் பானஞ் செய்து, பந்தமா நியம மற்றுப் பயமற வனம யான, மெந்தவோ ரிடத்து ஞானி யேக னுய்த் துயில்செய் வானுல். 611

சுத்தமாய்த் தோய்த்து லர்த்தாத் துகிறரித் தலது திக்கை, வத்திர மாயு டுத்தி வந்தபூ மியின டந்து, வித்தர வேதாந் தத்தின் வீதியிற்-சஞ்ச ரித்து, வித்துவான் பிரமத் தின்கண் விமலமாய் ரமிப்ப னென்றும். 612

இன்னவெண் றுணர வெண்ணு விலக்கண முடையோ னுகிப், பன்னிய பாகி யத்தைப் பற்றிடா வான்ம ஞானி, யந்நிய ரிச்சை யாலே

யமைவதைப் பால னேபோற், றுன்னுதே காபி மாநத் துகளிறந் தவனுய்த் துய்ப்பன். 613

அகண்டமாஞ் சிதம்ப ரத்தி லமர்ந்துள பிரம ஞாநி, திகம்பர மலது மற்றோர் திவ்விய வம்ப ரந்தான், வகுந்தவோர் வற்க லாதி வத்திரந் தானு டுத்திப், பகுப்பிலாப் பாலன் மத்தன் பசாசெனச் சஞ்ச ரிப்பன். 614

தத்துவ மறிந்த யோகி தன்னிலே தான்ம கிழ்ந்து, நித்தமுஞ் சருவாங் மாவாய் நிகழ்ந் துதன் னிச்சை வாறே, யெத்தனை யுருவோ-வாகி யேதுமே தான்பு சித்திங், கித்திற மேக ஞகி யெங்குமே சஞ்ச ரிப்பன். 615

ஒருமையாம் பரமா நந்த முற்றுள பிரம ஞாநி யொருவிட மூட னேபோ லொருவிடம் வித்து வான்போ, லொருவிட மன்ன னேபோ லொருவிடம் பித்த னேபோ, லொருவிடம் சாந்த னேபோ லுலகினிற் சஞ்ச ரிப்பன். 616

ஒருவிட மசக ரத்தோ டொத்தவா சார ஞகி, யொருவிட நேய ஞகி யொருவிட நேய

னன்றி, யொருவிட மறைவோ ளுகி யொரு
விடந் தெரிவோ ளுகி. யுரைதரு மிவ்வா
றெல்லா மொருவனே சஞ்ச ரிப்பன் 617

அருத்தமில் லாதி ருந்து மகிசமு மகிழ்ச்சி
சார்வ, னெருத்தரின் சகாய மற்று முரவிய
பலமே சேர்வன், திருப்திசெய் புசித்த லற்றுத்-
திருப்தியே நித்தஞ் சேர்வன், பொருத்தலில்
விடம மெல்லாம் பொருந்தியே சமமாய்ப்
பார்ப்பன். 618

ஒன்றினைச் செய்யும் போது மொன்றுமே
செய்கை யற்றோ, னொன்றினைத் துய்க்கும்
போது மொன்றுமே துய்த்த லற்றோ,னொன்றிய-
சரீரி யேனு மோர்சரீ ரமுமே யற்றோ, னன்றியு
மளவு பட்டோ னுகினும் பூர ணன்றான். 619

உரைதரும் விதமே யாக வோர்சரீ ரமுமே
யின்றி, யொருமையா யிலங்கா நின்ற வோங்கிய
பிரம வித்தைப், பிரியமப் பிரிய மற்றுப் பேசிய
சுபாசு பங்கண், மருவியே தொடரா தொன்று
மைந்தனே மற்றுங் கேளாய், 620

ஏதமாந் தூல மாதி யிசைந்துள வபிமா
னிக்கே, யோதிய சுகதுக் கங்க ளொன்றிய
சுபாசு பங்க, ளீதெலா முண்டாம் பந்த
மிசைந்திடா வாந்ம வித்துக், கேதுதான் சுகதுக்
கங்க ளேதுதான் சுபாசு பங்கள். 621

விரியின னிராகு வாலே விழுங்கிடப்
பட்டோன் போலப், பரவிய சநங்க ளுக்குப்
பார்வையிற் றோன்ற லாலே, யிரவியி னுள்ள
தான விலக்கண மறியா மூட, ரிரவியே விழுங்
கப் பட்டா னென்பர்தம் மயக்கத் தாலே. 622

ஈதுபோற் றேக மாதி யீநமாம் பந்தம்
விட்ட, தீதிலாப் பிரம வித்துந் தேகிபோற்
றோன்ற லாலே, யேதமே யுற்ற மூட ரின்னவன்
றேகி யென்றே, யோதுவ ரதனு லொன்று
முண்மையா யிவனுக் கில்லை. 6.3

பன்னிய முத்தன் றேகம் பாம்புடைச்
சட்டை யேபோற், றுன்னிய பிராண வாயுத்
தொடர்பினு லிங்கு மங்குந், தந்நிய வெவ்வா

றேனுஞ் சலித்திடு மற்ற வற்ரு, லுன்னிய முத்த னுக்கிங் கொன் றுமே யாதி யில்லே. 624

ஒருநதி பிரவா கத்தா லொன்றிய தாரு வாதி, தரணியின் மேடு பள்ளங் தன்னிலே சாரு மாபோன், மருவிய பிராரத் தத்தான் மாசிலா முத்தன் றேகம்,பொருளிலாப் போகங் தன்னிற் பொருந்துமொவ் வொருகா லத்தே. 625

பேதமாம் பிராரத் தத்தாற் பிறந்தவா தனேக ளாலே, போதமில் பெத்தன் றேகம் போலவே முத்தன் றேக, மேதுமே போகத் தின்க ணிசையினு மிந்த முத்த, ஞேதிய தடத்த னேபோ லுபேட்சையாய் வெறிதி ருப்பன்.626

சத்ததாஞ் சீவங் முத்தன் சக்கர மூல மேபோற், கர்த்திரு கரண மாதி கற்பனே யாவு மற்றுச், சுத்திய விந்தி யத்தைச் சுழல்புலன் றன்னிற் சேரா, னத்தினின் றுந்தி ருப்பா னவனுதா சீந னவன். 627

சுத்தமாஞ் சொருபா நந்தச் சுதையினேப் பாநஞ் செய்து, மத்தமாஞ் சித்த னுன மாசிலாச்

சீவங் முத்தன், சுத்திய விந்தி யாதித் தொழி லின்றற் றொடரும் பேற்றை, யித்தனை யேனு மெய்தா னேகமா யிலங்கா நிற்பன். 528

யாதொரு பிரம ஞானி யிலக்கியா லக்கி யங்க, ளேதுமே விட்ட கற்றி யேககே வலனாய் நிற்பன், சாதுவா மவனே நித்த சச்சிதா நந்த மாக, வோதிய சிவசொ ரூப னுண்மையி னுண்மை யீதே, 629

கிரியையெல் லாமு டிந்த கேவலப் பிரம ஞானி, சரிதமோ டிருக்கும் போதே தான்சதா முத்த னானன், பரவிய வுபாதி யெல்லாம் பற்றற நசிக்கும் போது, நிருமல நிர்வி கற்ப நிர்க்குணப் பிரம மாவன். 630

ஒருநட னொருவே டத்தை யொன்றினு மொன்றுப் போதும், புருடனே யாகு மாபோற் பூரணப் பிரம வித்து, மொருமையி லுபாதி தன்னை யொன்றினு மொன்றுப் போதும், பிர மமே யாவ னன்றிப் பிறிதேது மாக மாட்டான்.

த்ருவிடைப் பழுத்த பங்நங் தவிர்ந்துதா
னெவ்வி டத்துந், தரணியில் வீழ்வ தேபோற்
றத்துவ மாகி நின்ற, விருமையின் ஞாநி தேக
மெங்கணும் வீழ்ந்த தாலெ, னருமையா ஞாநத்
தீயா லதுதான்முன் வெந்த தன்றே. 632

சச்சிதா நந்த பூன்ற சாந்தமாம் பிரமத்
தின்க, ணுச்சவத் துவிதா நந்த வுருவமா
யோய்ந்த ஞாநி, மச்சைதோன் மாமி சாதி
மலமுறு முடல்வி டுக்க, வச்சமி றேசங் கால
மாதியைப் பேண வேண்டாம். 633

ஏதெனி லிந்தத் தேக மிறந்திடன் மோட்ச
மன்றே, யோர்கமண் டலதண் டத்தை யொழித்
தலு மோட்ச மன்றே, யேதமா மவித்தை யாலே
யெய்திய மநமு டிச்சு, யாதுமே யொழிவ
தன்றே வெதிகளுக் கிசைந்த மோட்சம். 634

ஆதலா லெவணின் ஞாநி யாக்கைதான்
வீழ்ந்த தாலெ, ஞேதிய தருவின் பங்ந மொரு
நதி வாய்க்கால் வீதி, மேதகு சிவால யாதி

மீதுதான் வீழ்ந்த தாலே, யேதுமே சுபாசு
பந்தா னிசைவது தருவுக் குண்டோ. 635

மரமுடை யிலைப லங்கண் மலருக ணசிப்ப
தேபோற், சரீரவிந் திரிய மாதி சகலமு நசிக்கு
மன்றி, யொருசதா நந்த சித்தா யோங்கிய
வாந்மா விற்கு, மருவுமோர் நாச மில்லை
மரமென விருக்கு மாந்மா. 636

சுருதியுஞ் சிற்க நாந்ம சொரூபமே சத்தா
மென்று, மருவிய வுபாதி யெல்லா மாறியே
நசிக்கு மென்றும், பிரகதா ரணமென் றேதும்
பெருகிய வுபநி டத்திற், சருவதா வாந்மா
விற்கே சத்தியத் தன்மை சாற்றும். 637

திருணநெற் பாய்ப டங்க டிறமுறுங் கற்கண்
டங்கண், மரமுத லெரிக்கப் பட்டோர் மண்
வடி வாவ தேபோற், றிருசியத் தேக மாதித்
திரளெலாஞ் ஞாநத் தீயா, லெரியுறப் பட்ட
பின்ன ரேகசிற் சொரூப மேயாம். 638

இரவியின் றேசி டத்தி லிருளிறக் கின்ற
தேபோற், றிருசிய மியாவு மாந்மத் திகழ்விலே

லீந மாகும், வருகட முதலு டைந்தால் வான்
மகா வாந மேபோற், பிரிவுறு முபாதி போனுற்
பிரமமாம் பிரம வித்தே. 639

கிரநீர் தைலங் தன்னிற் கிரநீர் தைலஞ்
சேர்ந்து, பாரினி லயிக்கி யத்தைப் பற்றிய
பான்மை யேபோற், பூரணப் பிரமத் தின்கண்
பூரணப் பிரம ஞாநி, சாரலுற் றேக மாகச்
சந்தத மிலங்கா நிற்பன். 640

பொருவிலா வகண் டாநந்த போதமாம்
பிரம மாக, மருவியே யிருப்ப தான மாசிலா
விதேக முத்திப், பொருளினை யடைந்த ஞாநி
பூருவம் போல மற்றுங், திருசியச் சகத்தி
லென்றுந் தியங்கியே சநியான் மைந்தா. 641

அருமையாம் பரசீ வைக்கிய மறிந்தநன்
ஞாநத் தீயா, லொருமையி லவித்தை யாதி
யுடலெரி பட்ட பின்னர்ப், பெருமையுள் சந்நி
யாசி பிரமமாய் நிற்ப தாலே, பிரமமா மவனுக்
கெங்கும் பிறப்பது முண்டோ சொல்லாய். 642

மித்தையாய்த் தோன்றுஞ் சர்ப்ப மேவிய வதனி னுசஞ், சுத்தமா யிரச்சு வின்கண் சோதிக்கி லிலாத தேபோன், மித்தையா மாயை யாலே மேவிய பந்த மோட்சஞ், சுத்தமா மாங்மா வின்கண் சோதிக்கி லென்று மில்லை. 643

இருளுமா வரண சத்தி யிருக்குமேற் பந்த மென்று, மருளுமா வரண சத்தி மரிக்குமேன் மோட்ச மென்று, முரைசெய வொண்ணுத தாகு முண்மையிற் பிரம மன்றி, யிருளுமா வரண சத்தி யெவளவு மிலாத தாலே. 644

சருவதா விலங்கா நின்ற சத்தியப் பிரம மன்றி, யிருளுமா வரண மாதி யேதுமே யிருக்கு மாகிற், பரமவத் துவிதத் தன்மை பாலனே யாநி யாகு, மருவுமவ் வாநி தன்னை மாமறை சகிக்க மாட்டா. 645

விரிவுறு முகிலால் வந்த விழியினு வரணந் தன்னை, யிரவியி லேற்று மாபோ லீநரா கின்ற மூடர், பரவிய மநத்தால் வந்த பந்தமோட் சங்க

டம்மைப், பொருவிலாப் பிரமத் தின்கண் பொய்யதாய்க் கற்பிப் பாரால். 646

அகிலவத் துவிதா சங்க வறிவுரு வக்க ரத்தி, லிகுதிலை யிகுதுண் டென்னு மிவ்விதத் தோற்ற மெல்லாம், பகர்மனோ தர்ம மன்றிப் பரத்தினுக் கிலாத தாலே, புகலுமிப் பந்த மோட்சம் பொய்ம்மாயை தந்த தேயாம். 647

பரமமா மாங்மா விற்குப் பந்தமோட் சங்க ளில்லை, நிருமல நிருவி கார நிட்கள சாந்த மாகி, யொருமையாய் வாந மேபோ லோங்கி யோர் பழுது மற்ற, பரமமாந் தத்து வத்திற் பரவுகற் பனையே யில்லை. 648

ஓதுமுற் பத்தி யில்லை யொருதிதி நாச மில்லை, தீதுறு பெத்த னில்லை திகழ்முமுட் சுவுமே யில்லை, சாதக னில்லை மோட்சஞ் சார்ந்தவ னில்லை யெல்லாம், போதமாம் பிரம மேயாம் புகல்பர மார்த்த மீதே. 649

சகலவே தாந்த நூலிற் சார்ந்தசித் தாந்த மான, ரகசிய மீதே மெத்த ரகசிய மீதே

யாகும், புகழுமிப் பரம மான பொருளினை
யுன்றனக்கு, மகனேயுன் பத்தி யாலே
மகிழ்ந்துநா முபதே சித்தேம். 650

சகலவா சையுமே யற்றுச் சாரமாம் புத்தி
பெற்றுப், புகல்கலி தோட மொன்றும் பொருந்
திடா முமுட்சுத் தன்னைச், சகமிதி னீசோ
தித்துச் சாற்றுமிப் பொருளை யெல்லா, மகனே
யவ் வதிகா ரிக்கே மயலற வுபதே சிப்பாய். 651

இந்தவா தேசி கேந்திர னிசைத்தவிவ்
வுபதே சத்தைச், சிந்தையுண் மகிழ்ச்சி யோடே
சிரவணஞ் செய்து சீடன், வந்தந மநந்தஞ்
செய்து மற்றவ னநுஞ்ஞை பெற்றுப், பந்தமற்
றவனே யாகிப் பாரினிற் சஞ்ச ரித்தான். 652

அந்தவா சாரி யேந்திர னகண்டவா நந்த
மாகுஞ், சிந்துவி லென்று மூழ்குஞ் சித்தனுய்ச்
சிரேட்ட னாகிப், பந்தமார் சீவர் தம்மைப்
பாவந மாக்க வேண்டித், தொந்தமார் பூமி
யெல்லாந் துகளறச் சஞ்ச ரித்தான். 653

இந்தவா குரவ னுக்கு மிசைந்தவோர் சீட னுக்கும், வந்தசம் வாத மாக வரமுமுட் சுக்க ளுக்குச், சிந்தையி லாந்ம ரூபஞ் செவ்விதா யுணரும் வண்ண, மிந்தநூன் மார்க்க மாக விங்ஙன நிருபித் தேமியாம். 654

நித்தகன் மத்தி ருலே நிங்மல சித்த ராகி, மித்தியா பவசு கத்தில் விரக்தராய்ச் சாந்த ராகிச் சத்தியச் சுருதி நம்பிச் சங்முமுட் சுக்க ளான, வுத்தம வெதிக ளிந்த வுபதேச மாத ரிப்பார். 655

மோகமார் பவமார்க் கத்தின் முத்தாப பாநு தேசா, லாகிய தாகத் துன்ப மடைந்துநீர் விருப்பத் தோடே, வேகமாய் வருந்தி யோடி வெறிதான மருதே சத்திற், சோகமே யுற்ற சீவர் சுகத்தினே யடைய வேண்டி. 656

மெத்தவுங் கிட்டி நின்ற மெய்யுணர் வநந்தா நந்த, வத்வயப் பிரம மாகு மமிர்தவா ரிதியைக்

காட்ட, வுத்தமச் சங்க ராசா னுரைத்திடு மிந்த நன்னூ, னித்தமு முத்தி யின்ப நிலைமையாய் நிகழா நிற்கும். 657

இப்படிச் சங்க ராசா னிசைத்தவிக் கிரந்த நூலை, யொப்பிலா நடந ராச னேங்கிய கருணை யாலே, தப்புறு மென்றன் வாக்காற் றமிழ் மொழிக் கவிதை யாகச், செப்பினேன் மேலோ ரீதைச் செவ்விதென் றேற்ப வேண்டும். 658

இந்தவா றமைக்கப் பட்ட விக்கவி மாலை தன்னைச், சந்ததஞ் சிவகா மாம்பா சகிதனுய் வீற்றி ருக்குஞ், சுந்தர நடந ராசன் சுத்தமாம் பாதப் போதி, லந்தமின் மகிழ்ச்சி யோடே யர்ப்பணஞ் செய்ய லானேன். 659

திருவிடை மருதூ ரின்கண் டிரமதாய் வசிக்கா நின்ற, பிரமவம் சத்து தித்த பெரு மைசே ருலக நாதன், மருளறும் விவேக சூடா மணியெனுங் கிரந்த நூலை, வரதமிழ்க் கவிதை யாக வளமதா யமைக்க லானுன். 660

மகிழ்தரு விவேக சூடா மணியெனு மிந்த நூலை, யகமுற வாசான் முன்ன ரமலமாய்ப் படித்த றிந்தோன், சுககந வடிவாய் நித்த சுத்தமாம் பரமாந் மாவே, யகமென வறிந்து நன்று யகண்டமா யிலங்கா நிற்பன். 661

அகிலநா யகனே போற்றி யம்பிகா பதியே போற்றி, நிகழ்சபா திபனே போற்றி நிருத்தநா யகனே போற்றி, சுககந வடிவே போற்றி சுத்தமா முருவே போற்றி.யகமெனுந் திகழ்வே போற்றி யகண்டமே போற்றி போற்றி. 662

பாயிரச் செய்யுள் 9.

ஆகச் செய்யுள் 671,

**விவேக சூடாமணி முற்றிற்று.**

---



| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 11 | 5 | தத்துவம் | கத்துவம் |
| ,, | 10 | பீரஹ்ம | பிரஹ்ம |
| 14 | 3 | கண்மேந் | கன்மேந் |
| 15 | 14 | அந்நீயத் | அந்நியத்தி |
| 19 | 3 | பிம்பக்கள் | பிம்பங்கள் |
| 22 | 13 | புணப்பி | புணர்ப்பி |
| 1 | 9 | ளதுசந் | ளநுசந் |
| 4 | 4 | மாந | மான; மகில முங் கோச ரிக்கா வகண் டவா நந்த மாகி, |
| 9 | 15 | திருக்குங் | திருக்குங் |
| 15 | 1 | மீதினுன் | மீதினுள் |
| 16 | 17 | டப்யே | டப்பே |
| 26 | 8 | செய்க் | செயக் |
| 43 | 12 | நரமஞ் | நர்மஞ் |
| 57 | 17 | மாற | மாதி |
| 77 | 8 | யலைவப | யலைவய |
| 79 | 17 | ஊதும் | ஊத்தும் |
| 94 | 2 | சலலே | சவனே |
| ,, | 6 | யகத்தை | யகந்தை |
| 111 | 5 | யெல்வா | யெல்லா |
| 131 | 3 | மிமாது | மியாது |
| 148 | 6 | தலே | தாலே |
| 161 | 1 | விடப் | பிடப் |
| ,, | 7 | வத்யவப் | வத்வயப் |
| 156 | 13 | யடைந | யடைந் |
| 163 | 3 | பேதா | யேதா |
| 167 | 17 | லகண்ட | வகண்ட |
| 170 | 4 | ணிக்கச் | ளிக்கச் |
| 172 | 14 | பரம | பிரம |

ஓம் தத் சத்,
பரப் பிரஹ்மணே நம:

இறும்பூ தூர்

ஸ்ரீ தத்துவ ராய சுவாமிகள் அருளிச் செய்த

# அஞ்ஞ வதைப் பரணி.

---

இது
திருப் பூ வண மடாதிபதி
**ஸ்ரீலஸ்ரீ**
**காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகளால்**
பரிசோதித்துப் பதிப்பிக்கப் பெற்றது.



ஹரிஸமய திவாகரம் பிரஸ், மதுரை.
1961.

## சூசிப் பத்திரம்,

# அஞ்ஞ வதைப் பரணி.

---

## 1. கடவுள் வணக்கம்

படைப்பானும் வியன்ஞாலங் காக்கு
மாழிப்-படையானும் படைத்தளிக்கப் பட்ட
வெல்லாந், துடைப்பானுஞ் சுருதிகளுந்
தொழுது போற்றுஞ்-சொருபாநந் தச்சுடரைத்
தொழுதல் செய்வாம். 1

அழிந்துபிறந் துழல்வதுவே தொழிலா யா
னின்-றழியாம லெழுந்தருளி யமையா வின்பம்,
பொழிந்தபெருங் கருணைமுகி லுளு நாளும் -
பூதலத்தின் றுயர்தீரப் பொழிக வென்றே. 2

தலைபலவாய்ப் பெயர்பலவா நதிக ளெல்
லாஞ்-சாகரத்தி னொருநீராந் தன்மை போலப்,
பலபலவாய்ச் சொல்லுநெறி யெல்லாஞ் சொல்
லப்-பட்டவொரு பொருளினையாம் பணிதல்
செய்வாம். 3

அழியாத வீடென்னும் பழைய வூர்கண்-டறியாதா ரதுகாண வேண்டி யாறு. வழியா குஞ் சமயங்கள் கொண்டு தம்மில்-வழக்குப்பே சுஞ்சழக்கு மாழ்க வென்றே. 4

ஈருகி யாதி முதலாயி ரண்டு வகையா மூன்று வடிவா-யெழுதாத வேத மொருநாலு பூத மிவைதானெ ரைந்து சுவைதா, ஞருகி யோது மிசையேழு மான திசையெட்டு மாகி யெவையு-மாகாம லாகுஞ்சொ ரூபங்க லந்த வருளான வாறு மொழிவாம். 5

ஓர்வொன்றி லேனெர் பொருளாக நல்கி-யிருபாத மூன்று குணநான் - குள்ளிந்தி யங்க ளுறுகோச மைந்தொ டறுபாவ நாதி யுணர்கா, லேர்பொன்றி லாத பவமேழ றுத்து வடிவான-வெட்டு முடையா-னெழிலாரு ஞாந மயமாக வாழு மியனுளும் வாழ்க வெனவே, 6

சினமான மாயை யினமான மாசு-செறி யாம னூறி யறிவாகவே, மனமான தீய பகை வீய மோதி-வருஞாந யானே வலிபாடுவாம். 7

ஒழியாம லீச னெளியாகி மேவ-வுணராமன் மூடு மொருமாயையால், விழியாத லோக ரழியாத ஞாந-விழிமேவ லான வழிமேவவே. 8

இறைவாழி நாத னருள்வாழி தாளி-னிசை வாழி யாளு மியல்வாழியே, மறைவாழி மோந மொழிவாழி யாறு-வழிவாழி ஞாந விழி வாழியே. 9

தறுகண்வினை வழிசரிய வருதலைவன் வாழியே-தனதுசர ணெனதுதலை தரவலவன் வாழியே, யுறுகணற வுணர்வுவிழி யுதவுமவன் வாழியே-யுணர்வறமெய் நிகழவரு ளொழிவில்பரன் வாழியே. 10

நினைவயர்வு கெடநிகழு நிகரிலவன் வாழியே-நிரதிசய சுகவடிவி னிலைசெய்பரன் வாழியே, யெனையழிய வரும்விழியி னிசையுமவன் வாழியே, யினிமைதரு சரணபத மருளுமிறை வாழியே. 11

---

## 2. கடைத் திறப்பு

தனிநாடியர் பொருளோடுறு தலைநாடியர் *நிலைபேர், துனிநாடிய ரலைதீர்வதொர் துறை நாடியர் திறமின். 1

மறைநாடியர் மநுநாடியர் மதியால்வரு சமயத், துறைநாடிய ரிறைதாளிணை தொழ நாடியர் திறமின். 2

அருவ மன்றியவ ருருவ மன்றியவ-ரடைய வன்றியவ ருடையசீ, ருருவ மொன்றுபட வுடைய நெஞ்சடைய-வுருகு கின்றவர்க டிற மினே. 3

புனலினமி ழாது ககநமிசை யூதை-புகுத வசை யாத பொருளதா, யனலினெரி யாது படையினழி யாத - வறிவையறி வார்க டிறமினே. 3

ஐய மொன்றுமற வந்த கோனடியி-னன் பொ டொன்றியக மின்புற, மைய ழிந்திட மலர்ந்தி லங்குவிழி - மல்கு வீர்கள்கடை திறமினே.

---

* நிலைபோ - என்றும் பாடம்.

பாரு மெறிவளியும் நீரு மெரியும்வெளி-
பா நு மதியுமிய மா நுநே, ரோரு மளவினுணர்
வாக வொருமொழியி - ஞேது மவர்கள்கடை
திறமினே. 6

கருகு கலியன்வலி தொலேய வுலகின்வரு-
கருணே மலேயினருள் பரவியே, பெருகு மதிச
யமொ டுருகி யருவிசொரி - பெரிய விழியினவர்
திறமினே. 7

உளவலி முநிவர்க ளொழியவா-ருயிர்விட
விழிகொள வருகிவீ, ழுளவினி ஞெருதிரு
மொழியதா-மமிர்தருள் பவர்கடை திறமினே

கனவினு மமரர்கள் பெறலறக் - கலியுக
மிதிலொரு நினேவறத், தனேயருள் செயவிறை
நினேவறத்-தமைநினே பவர்கடை திறமினே. 9

வளேதரு வினேகழல் வுறவரு ளிறையடி-
மருவுதொ ருளமுடல் புளகம தெரியவு-
மலர்தரு குவளேக ளருவிகள் சொரியவு-
மறிகட லொலியென வலறியு முலறியு,

மனைதரு புலனவை மடிதர மநமிற-
வறிவெழு மதுவற மருவிய வெளியினி-
னழிதர வொழிவற மிகுவிழி நிகழ்தரு-
மமிர்தது பருகிடு மவர்கடை திறமினோ. 10

சிதையு மெனவுடன் முதல்வரு பொருள்களுந்-
திரியு மெனவுயர் பதமுறு வினைகளுஞ்-
சிலுக தெனவலை யலைவரு சமயமுந்-
தெளிவு தரவிவை முழுதையு நழுவிநின்,
றிதைய மலர்செய வுருகிநம் மிறைவர்தந்-
திடுமடி யிணைமலர் முடிமிசை யணியவந்-
திழிவு கழிவித மகமறு மமிர்தமுண்-
டெமது சுகவடி வெனுமவர் திறமினோ. 11

மருவு குணமொடு மலமது கழியவு-
மலரு மிருவினை மயலது பறியவு-
மகிழ்வு மடிவற வொருபொறை யணையவு-
மநனு நினைவரு மிடமது நினையவு,
மருவ வுருவன தடிதலை யமரவு-
மயர்வு நினைவறு மறிவது நிகழவு-

மடைய வொழிவுறு மதனிலை திதிபெறு-
மமிர்து பருகிடு மவர்கடை திறமினோ. 12

உலகம நித்தமெனு வுணர்வது நித்தமெனு-
வுருவரு வற்றவரோ ருருவு தனைக்கொடுநுங்,
கலகம நத்திடையே யிலகமு தற்பகருங்-
கலைகளை விட்டெறிவீர் கடைதிற மின்றிறமின்.

ஓதல றக்கணியா வொப்பில்ப ரம்பொருளே-
யொருவடி வாகியெழுந் தருளுத லுன்னு
தொறுங், காதன்மிகுத்துவரக் கண்பனி கொண்
டுவரக் - கரையழி யன்புடையீர் கடைதிற
மின்றிறமின். 14

ஆவியி னுக்குயிரா மாரண னேருருவா-
யவனியில் வந்தருளும் பவநிவி ரைந்துதொழா,
வோவிய மொத்திடநின் றுரையுணர் வொன்
றொழியா-தும்மையொ ழிந்திடவே வொழிவறு
வீர்திறமின். 15

பொருளையே கருதிவெம் புலன்வழிச் செல்
லுமென் - புன்மையே கண்டுவந் திம்மையே
யருள்பெருங், கருணையே யுடையவன் கழனி
னைந் திடுதொறுங் - கரையழிந் துளநெகுங்
காதலீர் திறமினோ. 16

நம்மையா ளுடையநா யகனேயே நனவிலுங்-கனவிலு நவிலுமா றன்றிவே றென்றுநஞ், செம்மையா னதுதெரிந் திடுதல்கண் டிலமெ னத்-தெரியுமா தரவினீர் கடைதிறந் திறமினோ.

விழியா லுல கழியாவெறு முணர்வாய்விடும் வகையா, லொழியாவமிர் துண்பீரும துயர் பொற்கடை திறமின். 18

அளவு கண்டிட வரிய பங்கய நயநம் வந்தும தாவியைக், களவு கொண்டிட வுருகு கின்றவர் கநக நன்கடை திறமினோ. 19

அழுந்த வாகமி ரண்டு மொன்றுற வழிவி லாநெடு தழுவிமுன், பிழந்த நாளெநி னைந்து போதவி ரங்கு வீர்கடை திறமினோ. 20

ஒழித்தே யுள்ள முணர்வடைய வொழியா வொருவன் வருமளவும், விழித்தே யுறங்கும் விளங்கிழையீர் மேவுங் கபாடந் திறமினோ. 21

உருநாம மொன்றுமிலா வொளிகருணை கரனென்னுந், திருநாமம் பெறவந்த திறம் பாடத் திறமினோ. 22

தரணியில் வந்த பெருமானுர் தாளிணை சூடி யஞ்ஞவதைப், பரணியை யின்றென் வாயாரப் பாடக்க பாடந் திறமினோ. 23

---

## 3. காடு.

குறியுரு வறிவுதா னிறைவிதன் கோலமே-
குறுகுவா ருளமெலா மவள்பெருங் கோயிலே,
யறிஞர்வா ழிடமலா தழனெடுங் கானமே-
யறிவிலா வவையெலா மடையவும் பேய்களே.

மறையெலா மறைவதா கியபரஞ் சோதியோர்-
வடிவதா யருளுமிப் பொருளெனுந் தேசதா,
னுறைவதா மகமுரு தலமரும் பேயெலா
முழல்வதா முலசமா மொருபுறங் கூறுவாம். 2

கல்லுங் கயவோர் மனமே யவர்தங்-
கண்ணே மரமு மவர்தண் மையறச்,
சொல்லு முரையே சுடுதீ யிடர்சேர் -
சூழு வளிமற் றவர்தந் தொழிலே. 13

செயிரைச் சுடவல் லவர்தம் மளவுஞ் -
செயிர்செய் பவர்சேர் வுறுதி வனமே,

துயிரைச் சுடவல் லதுவெவ் வழலோ-
வோரா விவர்த முரையன் றியுமே. 4

வெருவ வெரிசொரியும் விழியுமழல் பொழியு
மால்-வெகுளி யெரிவிரவி மிகமிகவு மெரியுமா,
லருவ வுபிருமிற வெரியுமன லதனில்வே-
றனலு மிலதகில வுலகதனி னழலதே. 5

தருவர் தருவதில ரெனநினையு மநமொடே-
தமது தலைமைகெட வவரவர்கள் கடையிலே,
யொருவர் தருமுணவு கருதியுழல் பவை
யில்வே-றுழலு ஞமலிகளு முலவுமல வுணரிலே.

அணிகொளும்பர் தருவுநே ரருகர் பிண்டி மரமுநேர், கணிக பங்க ரரசுநேர் கடிய கான மதனிலே, 7

நீளத்திற் சோலையா நெடுந்தா பத்தா-
னிழலெனவந் தடைந்தவர்க்கு நெருப்பே யாகி,
வாளொத்த முட்சரித்து வறிதே காய்க்கும்-
வன்பாகுங் கருவேலை வளர்க்குங் கானம். 8

ஆராத வருந்துதலும் புணர்ப்பு மாகு-
மாயாமல் வருந்தோற்ற மம்பென் ஞேடிப்.
பேராசை மான்செல்லச் செல்லப் போகும்-
பேய்த்தேரே யெம்மருங்கும் பெருகுங் காநம். 9

செத்தபிண மிடுகாடு சுடுகா டென்று-
செப்புவர்க ளறியாதார் சிலர்தன் னெஞ்சத்.
தொத்ததுதா முணரா துண் டுடுத்து வாழு-
முயிரோடும் பிணம்பயில்கா டொழிய விட்டே.

அறங்காட்டி லிருசெவிமீ தழற்காட்டி னுற் போலு மலகை வாழும், புறங்காட்டிற் கொப் பதுமிப் புறங்காடே வேறுண்டோ புறம்பு கூற,

வெய்யமற மறப்பொருத்த விடயமெனி னெப்பொழுதும் வெறுத்து மெய்யை, யைய மறத் துறந்தவர்க ளருவருத்த திதுசுடுகா டாகை யன்றே. 12

தின்றுலுஞ் சிலரரிந்து தீற்றி னுலுந்
தீமையுறத் தீக்குள்ளே தள்ளி னுலுங்
கொன்றுலு மஞ்சாதார் தங்க ணெஞ்சிற்-
குலேகுலேந்த திக்காடு கொடிதா யன்றே. 13

கரையற்ற நீராருங் கனன்றெழுவ திக்காட்டின் கடுமை யன்றோ, புரையற்ற பெரியோர்கள் போயகல்வ திவ்வெம்மை பொருமை யன்றோ. 14

மேலாய வானோரும் விண்டிருப்ப துடம்புற்ற வெம்மை யன்றோ, மாலாரும் பாலாழி வைகுவது மிவ்வழலை மாற்ற வன்றோ. 15

இன்னமுநான் வேறுசில வியம்புவதெனிவ்வுலக மெல்லா மீன்ற, னன்னமுமாய்ப் பறந்ததுமிவ் வாரணியத் துறுவெம்மை யாற்ற வன்றோ. 16

ஓத வரியவெறி கான மிதிலொருவ-ருடு வரனீனைய லாவதோ, போத வுருவனினை யாத வவரையடு-பூத கணமணவி மோதுமே. 17

---

## 4 பேய்

ஏத மளவுதெரி யாத கொடியவாரு - மேவும் வகைமருவு பேயரோ, பேத மளவுதெரி யாது பெரிதறிவு-பேசு மலகைசில பேசுவாம், 1

ஒன்றென்று நின்றசில பலவென்று நின்றசில-
வுபயத்து நின்ற சிலவே
யன்றென்று நின்றதனை யாமென்று சொல்லி
னலகிட்டு விட்ட சிலபேய். [யுட- 2

இலதென்று நின்றசில வுளதென்று நின்றிசில-
விறைதன்னை நெஞ்சி னுணரும்,
வலதின்றி மங்குமல வுடறங்கு கின்றதவ-
வடிவங்கள் கொண்ட சிலபேய். 3

தண்டைப்பி டித்தசில சிகையைத்த ரித்தசில-
சடையைப்ப ரித்த சிலவே,
முண்டித்து விட்டசில முடியைப்ப றித்தசில-
முசுவிற்பொ றுத்த சிலபேய். 4

அலைகெட்டி ராதுபல தலைகெட்ட நூல்பழகி-
யதுமுக்ய மாக மிகவே,
கலைகற்ற பேய்களொடு சிலுகிட்டு லாவுவன-
கரையற்ற பேய்க ளுளவே. 5

வறிய வானவு ரைபல கேட்பன-
மாண்டு மீண்டினி வாராவ ழியினைச்,
செறிய லானபொ ருள்கடெ ரிந்துரை-
செய்யு மெல்லை செவிடுக ளாவன, 6

வம்பு கூறிலு டம்பெ லாம்வெ றும்-
வாய்க ளாகிவ டித்தற்கு வல்லன,
வும்பர் கோனடித் தாமரை போற்றியென்-
றுரைக்க வென்னில்வெற் றாமைக ளாவன.

பொய்ம்மை யாகிமெய் போலவி ளங்கிய-
பொருடெ ரிக்கினற் புற்புதக் கண்ணின,
மெய்ம்மை யானபொ ருளையு ளத்தினில்-
மீண்டு பார்க்கில்வெ றுங்குரு டாவன. 8

பருகு ளத்தமிர் தம்பொழி நூல்களைப்-
பக்க மோதிப்ப ழித்துக்க ழிப்பன,
திருகு ளத்தொடு தர்க்கங்க ளேயுரை-
செய்யு நூல்கற்றுத் தெற்றர்க ளாவன. 9

ஆவ தொன்றிலை யாயினுந் தன்னைமே-
லாக வுன்னிய றக்கடை யாவன,
பாவ கத்தொன்றி லாதமை காட்டல்போற்-
படப டத்துத்தன் பாழ்வாய்தி றப்பன. 10

ஆறு ஞானமு டையார்பி ணக்கற-
வாறு ஞானநெ றியென்ற றிந்தவர்,

கூறு ஞாநக்க ரும்புகொள் ளாதுபோய்க்-
குருடர் சொன்னசொற் கோதுகொண் டாடுவ.

உண்ண லானவி டந்தொறு மற்றவர்க்-
குற்ற நட்டவர் போலுற வாடுவ,
கண்ண ஞர்சில ராயினுங் கைப்பொரு-
ளில்லை யாகிற்க ழலக்க ழல்வன, 12

கண்ட மட்டினி துவன்றி வேறென்றுங்-
கண்டி லோங்கதி யென்னுங்க ருத்திறற்,
பிண்ட மிட்டவர் தம்பிற கேஞுஞ்ஞை-
பிஞ்ஞை யென்றுபி தற்றித்தி ரிவன 13

வயிறு சாணும்வ ளர்த்தற்பொ ருட்டந்த-
வானுஞ் சென்றுவ ரக்காலு டையன,
கயிறுங் கம்பையு மேடும்பி றர்க்கொரு-
காட்சி போல்வரும் புத்தகக் கையன, 14

சவலைச் சாகர மாகிய சமயத் தேங்லை
யாவன-தனைமெய்ப் பாலுண ராதன தநுவைத்
தானென நாடுவ, கவலைக் காகர மாவன கடை

கட் கேநட மாடுவ - கலேவிற் றேயுண வாவன
கருவிப் பேய்பல கோடியே, 15

அடைகட் டாவுக கோடிக ளவிளற் காமச
ஞதியை-யமைவற் றேநிலே யாமையு மறைவுற்
றேயறி யாதன, சடைகட் டாமழி யாவுட
றலேகட் டாநினே யாவொரு - தமைமெய்ப்
பாலுண ராதன சமயப் பேய்பல கோடியே 16

உழலத் தானிளே யாதன வுணவிற் காவன
தேடுவ - வுணர்வைத் தானுண ராதன வுலகத்
தார்நக வாழ்வன, கழலத் தானுரை யாடுவ
கதறத் தான்முசி யாதன-கநகத் தேமந ஞவன
கருவிப் பேய்பல கோடியே. 17

மெய்வருந்திக் குரவனருள் விரும்பா தென்றும்-
விட்டிடமுந் தொட்டிடமு மறியா தேநின்,
றவ்வருகுப் பட்டனவாய் மிகவுந் தம்மை-
யகமதித்துத் திரியும்பே யநந்தங் கோடி. 18

கவலேயுற்ற தம்பசியைத் தணிப்ப வேருேர்-
கதியின்மை யாலறந்தாங் காட்டு வார்போற்,
குவலயத்தோர் பொருள்விரகால் வாங்கிக்
கொண்டு - குருக்கொடுக்கும் பேய்களொரு
கோடி கோடி. 19

தன்ம நந்தனை வெருட்டு மேபிறர்-தளும்பு
நெஞ்சுக டெருட்டுமே, வன்ம நங்கொடு கிளி
கள் போலறம்-வடிக்கு மேபட நடிக்குமே. 20

நீளு கின்றசடை தன்னி னுசைமிக - நீளு
மேவினையின் மூளுமே, மீளு கின்றநெறி தன்னி
னுதரவு-மீளு மேயொழுக நாளுமே, 21

பஞ்சு படுகலைக டன்னை யும்பல - படிக்கு
மேதலை வெடிக்குமே, பிஞ்சு படுகலைக டன்னை
யுந்துவர்-பிடிக்கு மேபட நடிக்குமே. 22

---

## 5. உவமை.

சொல்லாலு மநனுலு மறியா வொன்றைச்
சொல்லாலே தோற்றுவிப்பத் துணியுஞ் சொற்
கள், புல்லாலே யெரிசுடுதல் போலும் போலும்-
போலாதேற் புகையினெழுங் கனலே போலும்.

ஒளிதருநா லோதிமுடி பொருளைக் காணு-
தோதியநூல் பலவுணர்ந்து பிணங்கும் பேய்கள்,

களிதருமியா னையைக்குருடர் கையாற் கண்டு-
கண்டகண்ட வளவுகொடே கழறல் போலும்.

கலைபகருஞ் சமயிகள்கண் காணிற் பீலிக்- [ண்டு'
கண்ணென்றைக் காணுமெனக் கையிற் கொ
தலைபறியே சமயங்க ளென்று தத்தந்-
தலைபறித்துச் சிலசமணபேய் சாற்றல் போலும்.

அன்புறுநற் குருபரனுக் கன்பு செய்யா-
தருவுருவைப் பெறவிருக்குந் தன்மை யையோ,
வின்புறுநற் கனிபாறே னினித ருந்தா-
திரதநுகர் வுறவிருப்பா ரியல்பு போலும். 4

அருவாய பரனுருவா யருள்வ தொன்றை-
யஞ்சாதே சிலவளவை கொண்டு தாமுங்,
குருவாகிச் சிலகுருப்பேய் கூறுந் தன்மை-
குருடர்க்குக் குருடர்நெறி கூறல் போலும்.

---

## 6. உட் சோலை

போகாத துயர்மேவு பொல்லாத விப்பேய்கள் புகுமாறிலா, யோகால யத்துள்ளி ருப்பாடிருச்சோலை யுட்சோலையே. 1

ஆகாச நீர்பூமி யனல்காலி ரவிசோம ரவி
யாதுமூ, டேகாச தரநாத னடியார்கள் பயில்
வார்க ளிதமாகவே. 2

ஆறு மிலகலை நீரும றிஞர்க ளாறு நிறைவு
மவ் வருளுமே, வேறு மிலகலை கூறு பதினது
நாலு மலதுவி ளம்பிலே. 3

நிலவிய கிளிக ளுலவிய குயில்க ணிறைபயி
லியல்ப திறைவர்தாள், குலவிய மறைக ளிறை
வித னருகு குழறுவ குழறுவ மழலையே. 4

அழலுற வுடலு மயர்வுற வுயிரு மலம்வர
வெருவி யயருநா, ணிழலில பிறிதவ் வழகிய
கருணை நிகழ்வறு நிழலொர் நிழலுமே. 5

என்றிவ் வுலகுள தன்று முதலெதி ரின்று
வரையிதி னென்றுதா, னின்ற தெனவிலை
யென்று மொழிவற நின்ற தொருபொரு
ளொன்றுமே. 6

---

## 7. கோயில்.

ஆதி நாலுமா மறைகள் சூழ்வதற் கரிய கோயிலுக் களவு கூறவோ, வோது நாலிரண் டுடனி ரண்டுதிக் குண்ட மேனியக் கோயி லுள்ளதே. 1

சமய மாறுதா னறைவ தேயலாற் சதுமு காதிகா ணரிய தார்கொலோ, வமையு மாறுதா னறிய வோதுவா ரரிய கோலம்வாழ் பெரிய கோயிலே. 2

மெய்வி ளக்கினர் மேவு கோயிலுக்,
கெவ்வி ளக்குவே றினிவி ளக்குமே. 3

---

## 8. பலி பீடம்.

அண்ட கோடிநா ருயி ரங்களோர்,
பிண்ட மாவிடும் பெரிய பீடமே. 1

பவத்தி னர்பொடி படப்ப ராவிய,
தவத்தி னர்பலி கொடுப்பர் தம்மையே. 2

தமதுரு விறைவடி வுறுதலி னிதங்கர்-
தருவது மொருபொரு ளிலமிது தகவில,
தெமதுயி ரெனினுமி தமுதுசெய் வதுகட-
னெனவடி தொழுதிடு பலிபல பலவே. 3

உடையன வுடலுயி ருறும்வினை யுளமுணர்-
வுலகது தனிலின முறைசெய வருபொரு,
ளடையவு மமிர்துசெய் தனையினி யமிர்துசெய்
வதுமில தெனுமொலி யவைபல பலவே. 4

## 9. ஆல்.

மருவிதய கமலமுறை வாளென்றும் வாழ்வ
தொரு - வடமுமுள ததனளவை யாமிங்கு
நாடளவி,நெருவிதையி னளவளவி லோரண்ட
மாகுமதி - னுளகனியி னளவையினி யார்கண்டு
கூறுவரே. 1

அயனையுல கடையவரு மோருந்தி மாமலரி-
னருளியறி வரியபர யோகொன்றி மாறுயில்
கொள், சயனமென மொழிவதொரு தாழ்கொம்

பின் மேவுசிறு - தளிரினெருு தலையினுங் யேதென்பர் சாகையையே. 2

செறியும்வகை யரியதென வேதங்க ளோது பொரு- டெரியவிர கொருவரறி யாதன்பி னுலரனெ, டறியும்வகை யகிலவுல காய்வந்து கூடியது - மதனில்விடு சிறியதொரு வீழ்நின்ற நீழலிலே. 3

இரையுமெழு கடலும்வளை யாநின்ற வேழ்புவியு - மெழுமலையு முலகுபதி னலுந்த னூடுருவும் வரையுமிரு சுடரடைய வோரண்ட மாகுமிது-வடவிதையி னளவுமில தாலென்கொ லோதுவதே. 4

நெரியமுய லகன்முதுகு நாகன்ப ணமகுட-
நெறுநெறென முறியநட மாடுஞ்ச டாதரனு,
மரியுமல ரவனுமதி லேநின்ற வூசல்மிசை- [ரே.
யணையவரி னவர்கள்விசை போயன்றி மீள்வில

மாருத வருளுடையாண் மாறென் றுலன்றிவி
யாருத வவ்வூச லதினூச லல்லவோ. 6 [சை,

மேனோக்கி வீழோட்டி விரிதிசையே கவடோட்டிக், கீழ்நோக்கிக் கிளையோட்டிக் கிளரவளர் வடமிதுவே. 7

ஆசையெனுந் தளையிட்டே யமையாமற் பறந்திந்தப் பாசம்விடப் பறவாத பறவையதிற் பறவைகளே. 8

---

## 10 தேவி

அன்னையென வெழுந்தருளு மருளுடைய திருமேனி, தன்னையினி யாமறியுந் தன்மையினைச் சாற்றுவாம். 1

மதுர வாரி யாய்ஞான மயம தாகி வாடாத-
மலர தாகி நாடாத மணம தாகி யாறாத,
சதுமு காதி வானோர்கள் சகல வேத கீதாதி-
தகும நாதி யான்மீது தடவொ ணாத தாளாளே.

தொழுதெ ழாவி ழாவாறு சுழலு மாற ருமாயைத் - துயரி னல்வி டாதாறு சொரிய வாய்விடாநாளு,மழுத பாலர்சீரும லமிர்த வாரியா யூறி-யருள்ப யோத ரீயாகி யமிர்த பாந மீவாளே. 3

கதியி லாத நாயான கடைய னேனை வாகூடு-
கழலெ லுவெ னூடுறு கருணை வாரி யோர்
கோல,மதியி லாமை யான்ஞாந வடிவை வேறு
கூருக-வகைசெய் தேறு மாருக மலைவ தோடு
[காதாளே. 4

மருவு மாக மான்மேவி வருகு ணுதி நேராக-
மநனின் மாறி மீளாத மநந மாதி வேரோடு,
மொருவ மாறி மேனுடு முணர்வு நானு நேராகி
யொழிய ஞாந மேயாக வொருசொ லோதும்
[வாயாளே. 5

விகட நாம ரூபாதி விததி யோரொ ரோர்
கோடி - விரியு மாக மீதோடி விரிவொ ணுத
மேலான, மகுட நாடி லோர்கோடி மலரு
தாள்க ளோர்கோடி - மநனு நாவு மேவாத
வடிவ தான மாயாளே. 6

வெருவ ராம னுடோறும் வினையின் மூழ்கி
வாளாரும் - விழியி னுர்கள் பாலோடி விளைவ
தோர்வு ருதேனை, யருவ ராம னுயேனு ளமர
ரானு மாரானு - மறியொ ணுத தோர்கோல
மருளு காதல் கூர்வாளே. 7

அவனி நீரி ஞன்மாள வநலின் மாள நீர்காலி-னாநலு மாள வாகாய மதனின் மாள வூடாடு, பவநன் வாரு மேலான பரம தேசி லேயான-படியின் மாள மாளாத பழைய பாழில் வாழ் வாளே. 8

ஒருவி கார மோர்காலு முறநி லாம லியா தானு-முளது மாசி லாமேனி யொழிய வேறுரு ராதார, நிருபி யான வோர்போது நிருபி யாத வோர்போது-நிகழ்வு ருமலோர்போத நிலைய தாக நேர்வாளே. 9

அநுப வந்தனி னறிவ தன்றியோ ரளவை கொண்டறி வுறுவதோ, தநுப வந்தனை யொழிய வின்றிய தகமை நின்றதோர் தனியையே. 10

உருவ மென்பது மருவ மென்பது முணர்வு கொண்டுணர வொண்ணுமோ, வருவ மிங்கொரு வடிவு கொண்டது விதுவெ னும்பொரு டன்னையே. 11

பொருது திரிபல சமய மதிவழி புரிவு தருகலை புகல்வதோ. கருது பொருடோரு மருவி யவையவை கழல நிலவிய கண்ணையே. 12

தத்த மதிகொடு தர்க்க சமயிகள் சத்த
மறிவதொர் தத்வமோ, சித்த மயலது கெட்ட
வவர்தெரி சிக்க வுரியதொர் சித்தையே. 13

மருவு ருத தற்கு ரைக்கும் வடிவு மில்லை
யென்னவோ, கருவு ரும லாள வந்த கருணை
மேனி கண்டுமே, 14

தொல்லை யாகி நின்ற துய்ய துணைம லர்ப்ப
தங்களுக், கெல்லை யான தில்லை யோவென்
னுச்சி மீதி ருக்கவே, 15

விளம்பு மெய்ப்பொ ருட்கு மேல்மி குத்த
நீண்மு டிப்பரப், புளம்பு குந்தி ருக்க வெல்லை
யுன்ன வில்லை யென்னவோ. 16

அடைய மாதி ரம்ப டைத்த வப்பு ரம்பு
டுப்பதோ, ருடையு மில்லை யென்ன வோவென்
னுள்ள டங்க லுற்றுமே. 17

அன்னை யாகி யத்த னாகி யஞ்ச லஞ்ச
லென்றுவந், தென்னை யாளு கோல நீர்மை
யென்ன தாவி யம்பவே. 18

மாசுணமோ மறைத்தலேயோ மயாநமோ வாக்கிறந்த தேசுணர்ந்த மெய்யடியார் சிந்தை யோ திருந்தமளி. 19

சாத்தும்பூ மாலையினுந் தமையுணர்ந்த மெய்யடியா, ரேத்தும்பா மாலையிலே யெப் போதுந் திருவுளமே, 20

பாதாதி கேசாந்த முவந்தணியும் பணி யருளே, ஞாதாதி யாமூன்று முவந்தயிலு நல்ல மிர்தே. 21

வேத மவடிரு வாயி லோது கீதம்-
வேறு நினைவிலர் காணு மேனி மேனி,
பூத மவடிரு வாசல் காவ லாகும்-
போத மவடிரு மேனி காவ ருனே. 22

யோகி நிகள்கரு ணுதி யான மாதர்-
யோக மருநில மாகின் ஞாந யோகங்,
கோக னகனறி யாத கோயில் கோயில்-
கூற ரியபெரு வாழ்வை யாவர் கூற, 23

கலையே றுவணங் களியன் னமெனக்-
கற்பித் திடவோ சொற்பித் ததுவா,
மலையே றுவணங் கிளியன் புறவந்-
தருள்போ தகமே யவள்வா கனமே. 24

பஞ்சா யுதமே திரிசூ லமழுப்-
படையே யெனவோ பகைவெம் பிறவிக்,
கஞ்சா முனெழுந் தருளா வெறியு
மன்பே திருவா யுதமா வதுவே. 25

---

## 11. உட் பரிவாரம்.

அரணே யறிவே செறிவே யழகே-
யருளே வடிவா கவமைந் துவருஞ்,
சரணே யெனவந் தடையும் மடியார்-
தங்கோ லமெலா மிங்கோ துதுமே. 1

புரம யோகமுற பேதமறு போத முடனே,
பரம யோகமுறு வாரிறைவி பயிர வர்களே. 2

புணரு மைத்ரிமுத லானபொரு ளுள்ள பரிசே,
யுண ருமார்க்கம்வரு மாத்வர்கள் யோகி நிகளே.

நித்திரை சாகரத மற்றதொரு நீர்மையினரே-
நிட்டை யாதுமில தானதொரு நீதியினரே,
முத்திரை ஞானமெனு முத்ரைபல தேதுமிலரே-
முத்தி நாயகர்க ளானபவ மோசகர்களே, 4

பெத்த முத்தியில தானதொரு சாதகர்களே-
பித்து நற்கழலொ டானதொரு பாவகர்களே,
பத்தி சித்தியென நாடிவரு தாபதர்களே-
பத்த ரெய்ப்பிலருள் கோலமிகு பைரவர்களே.

உரையிறந் துணர்விறந் திடமுணர்ந் திடுவரே-
யுணவுமங் கையில்வரும் பலியுகந் திடுவரே,
திரையிறந் தளவிறந் துளபரங் கடலுளே-
செறிதரும் படிவருந் திருவகம் படியரே. 6

அழுதன்மா றுதலிலா விழியர்பா லருள்வரே-
யவர்களா கழுமெலாம் விழியதா மொழிவரே,
யெழுதன்மா றுதலிலா விரவியா முருவரே-
யிகலுமார் வழுமிலா திலகுடை ரவர்களே. 7

அவனிவா னடையவோ ரணுவதா நெடியரே-
யணுவுமே ருகிரியா யறவுநே ரியர்களே,

புவனிவா னடையவோர் பவநிபோ துவர்களே-
புகலுகோ மளவியா மளைபுரா தநர்களே. 8

அலைபொரு மலொருகா றலையெடா தமைவரே-
யருள்பொரு மலுருகா வருவிபாய் நயநரே,
கலைபொரு மலொருகோ வணவராய் விடுவரே-
கவலைதீர் பலிகொணீள் கரகபா லிகர்களே. 9

சகலலோ கமுமெடா வயிலும்வா யுடையரே-
சதிரெலா மழியமா றருவதா ளுடையரே,
புகலுலோ கமுமலோ கமுமெலாம் விழியரே-
புகலுமா றரியதாள் புணருபை ரவர்களே. 10

உருகுவா சகமெலா முடையசா கிநிகளே-
யுயிரெலாம் விழியிலு லயில்வர்யோ கிநிகளே,
பருகியா ரமிர்தையா டுவர்கண்மோ கிநிகளே-
பகருமா றரியநா யகிபதா கிநிகளே. 11

தமர்பிற ரற்றூர் சமயமு மற்றூர்-
சகவியல் பற்றூர் தமையொழி வற்று,
ரமர்விட மற்று ரறமற மற்று-
ரறிவயர் வற்று ரவளடி யாரே. 12

இருணெறி விட்டா ரிருமையும் விட்டா-
ரிலகந டப்பா ருலகுக டப்பா,
ரருணெறி நிற்பா ரமரவி ருப்பா-
ரறிவுரு வுற்று ரவளடி யாரே. 13

பொருளைவி ரிப்பார் புகழுதி றத்தார்-
புளகித முற்றார் புரளுத லுற்று,
ரருளைவி யப்பா லறியவு ரைப்பா-
ரதிசய மிக்கா ரவளடி யாரே. 14

தெளியுமு ளத்தார் சிலவர்தெ ளிப்பார்-
சிலவர்க ளிப்பார் சிலவர்தி கைப்பா,
ரளியுமு ளத்தோ டழுதுசி ரிப்பா-
ரவர்கள் செயற்பா டறியவொ ணுதே. 15

---

## 12. லீலை.

ஆதி மூலமொரு கோலமுமி லாதவடிவிவ்,
வகில லோகமும றிந்தடையும் வண்ணமழகார்-
சோதி மூவடிவு கொண்டருளி யந்தமறைமுன்-

சொன்ன தன்மைதெரி யும்பரிசு சொன்ன துணிவும். 1

கயிலை மாமலையின் மேலினிதி ருந்தருளி யக்-கமல யோகிமுத லெக்கடவு ளர்க்குமரு ளான், மயிலை யேறிவரு மைந்தனுட னந்திமுத லா-மற்றும் வந்தடைப வர்க்குமருள் செய்த வகையும். 2

ஆல நீழலினி ருந்தருளி யன்றுசுரரோ-
டசுரர் நெஞ்சினள விற்களவ றைந்தறிவுசேர்.
நாலு பேரறிய நாலுமறை சொன்னபரிசே-
ஞான மானநய நந்தனை யந்தநலனும். 3

இசைய வையமொரு பாரதமு டிப்பவர்கள் போ- லிப்பி றப்புமுடி யும்பரிசி யம்புமியல்பும், விசைய னையமுறு நெஞ்சினைய றிந்தருளியே- விசுவ ரூபவியல் காட்டிவெருள் வித்தவிரகும்.

ஆயர் தம்மனையி னோர்வடிவு கொண்டு பதினா-றாயி ரந்திரும டந்தையரு டன்புணரினுங்,

தூய பிரமச்சர்ய மத்தில்வழு வாமலொழுகுஞ்-
சுத்த ஞாநசரி தத்தியல்பு சொன்ன துணிவும், 5

வாத வூரனையொ ழிந்தவர்கள் பொன்னடி
யிலே - மன்ன வென்னுடலை மாற்றுகென
வாற்ற லிலனு, யோத வூறுமமிர் தஞ்செவிக
ளார்வுறமுகந்-துண்டி வையகமு முய்யும்-
வகை செய்த வுறவும். 6

தன்ப ராபரம தானதிரு மேனிநிலையிற்-
சலந மின்றியொரு தன்மையினி னின்றருளியே,
யன்ப ரானவர்க ளெஞ்சினிலு வந்தவடிவா-
யங்கு வந்தவர்க ளுய்யும்வகை செய்தவருளும்.

உலகமயக் குருவண்ண முகந்தோறு முகந்
தோறு முதிப்ப னெனென், றிலகியமெய்த் திரு
வார்த்தை யாவர்க்கு மேறும்வகை யிக்கா
லத்தே. 8

பெருமான்வந் தவதரித்துப் பீடுடைய
தரணியுளோர் பிழைக்கும் வண்ணஞ், சொரூ
பாநந் தச்சுடர்தன் றுணைமலர்த்தா டரும்பரிசு
சொல்லிச் சொல்லி. 9

அண்டரெலா மலமாக்க வருட்சொருபா நந்தன்றன் னடியார் வாழப், புண்டரிக மலர்ப் பாதம் பொறித்தருளுந் திருக்கருணை போற்றி போற்றி. 10

கூசாதே நாமுமெலாங் கொண்டாடும் படி யிந்தக் குவலயத்தே, வாசாம சோசரனோர் வடிவாகி வந்தவருள் வாழ்த்தி வாழ்த்தி, 11

கரைத்தல் தீர வந்து தித்த கருணை மேனி காதலோ, டுரைத்து வாழு மிவ்வி னோத மிடைவி டாம லுடையரே. 12

சாத லாதல் வாழ்த லாதல் தரைய தாதல் சயநமாதல், காத லாதல் காய்த லாதல் கருது ஞர்கள் கணமுமே, 13

வந்த விச்ச கத்து தித்து வந்த வாறு மாறு மா, றிந்த விச்சை பாரு மென்றி ருந்த விச்சை காட்டியே. 14

---

## 13. பேய் முறைப்பாடு

அண்ட முண்ட கண்டர் நிற்க வடைய
வுண்ண வாதரங், கொண்ட பேய்க ளகல
வந்து குறைக ணின்று கூறுமே. 1

உலகி லேச நித்து நின்று ழைத்து நீர்பி
ழைப்பிலா, வலகை யாமி னெனவ குத்த
தென்கொ லெம்மை யம்மையே. 2

வாசகத்தா லாவியைநின் றுருக்கு ஞாந-
மதயானை வாதவூர் வள்ள லோடு,
மாசகற்றி யாயிரம்பேர்க் கீச ஞர்நல்-
லமிர்தளித்தா ரெமக்கிரங்கி யருளா ரிந்நாள் 3

தலைப்பான்மை மிகப்பெரிய காழி ஞாந-
சம்பந்தர் தாம்பிள்ளைத் தனத்தி லுலே,
முலைப்பாலைப் பகிராதே தாமே யுண்டு-
முத்தமிழும் பாடியற முதிய ராஞர். 4

திருநாவிற் கரசர்மிகத் தெள்ளத் தேறித்-
தெளிந்துதித் திக்குமருட் டேறன் முன்ன,

மொருநாளிற் பெற்றெம்மை யொழியப் போ
யுண்—டொளியுருவா யினர்நாங்க ளுலர்ந்தே
போனோம். 5

அடுத்தனவே செய்துதிரிந் தற்ற நம்பி-
யாரூரிற் கிறைவர்திரு வருளி னாலே,
தடுத்தவரை யாட்கொண்டா ரமிர்த முண்ணத்,
தாமளித்தா ரெம்மளவுந் தாயே காணேம், 6

சாந்தியினை நேராக வுடைய நல்ல-
சடகோபர் பராவமிர்தைத் தாமே யுண்டு,
தீந்தமிழென் றொருகோடி வேத மாகச்-
செய்யதிரு வாய்மலர்ந்தார் தேர மாட்டேம். 7

சீபாக்கர் முதலாக முன்னந் தாந்தாஞ்-
செய்தபாக் கியத்தானித் தியக்கந் தீர்ந்தார்,
நீபார்க்கப் பட்டவரே கண்டா யெங்க-
ணிர்ப்பாக்கி யத்தையினி நீங்கப் பாராய், 8

முத்திவரும் படியன்றி முற்றுடலம் விடும
ளவுங், கத்திவரும் படியாகக் கற்பித்தா
யெங்களையே, 9

ஆராத வூணுண்டுன் னடியகலும் வகை யெமக்குத், தூராத குழிதூர்க்கை தொழிலாகச் செய்தனையே. 10

பாகாய மொழியாயிப் படுதுயர மொருகா லும், போகாத வுடலம்வெறும் பொய்யாலே செய்தனையே. 11

உங்கட்குத் தகுமிதுவென் றுள்ளபடி யுனை யுணரா, வெங்கட்கு வடிவுவெறு மிடும்-பையினு லெடுத்தனையே. 12

இப்பரிசே பலவியம்பி யிலகுமொரு பேயி னையுன், மெப்பரிசே விளைந்தகுறி விண்ணப் பஞ் செய்கெனவே. 13

---

## 14 குறி.

அடியறிகின் றிலனடியே னறிவதொரு குறியல்ல, குடிபறியும் படிவந்து தோன்றிய தோர் குறியுண்டே. 1

பூண்கின்ற வுடலாதி யாமிந்தப் புவநத்திற், காண்கின்ற பொருளெல்லாங் கனவாகக் கண்டனனே, 2

உடலை யொன்றிய வுயிர்வி டும்பொழு துணர்வ தன்றியிலே, நடலை கொண்டுடனழுவல் கண்டுள நடுந டுங்கிடுமே 3

அழியு மென்றம ருலகி லின்பமி தமையு மென்றிடுமே, கழியு மென்றம ருலக மென்பது கருது கின்றிலமே, 4

சமத மங்களை முதல்வ ருஞ்சில தலைமை வந்திடுமே, மமதை கொண்டிது நமதெனும்பெரு மயன்ம டங்கிடுமே. 5

அழிவ றும்பொருள் பொருளெ னும்படி யறிதி வந்திடுமே, யொழிவ றும்பொருளுணர்வ தென்றிடு முணர்வு வந்திடுமே, 6

தெருளு றுங்கலை பலவு ணர்ந்தொரு சிறிதலம்பிறவா, வருளு றுங்குரு பரனி ருந்திடமறிய வென்றெழுமே, 7

அழுத கண்களு முருகு நெஞ்சமு மலரு மன்புவிடா, தெழுத ரும்படி மொழித லிங்கரி தி துசெ யுங்குறியே. 8

அளியு நெஞ்சுடை யடிய ரிங்கிவை யழுகி தென்றனரே, தெளிவை யின்றிய வலகை யுஞ் சில திகைம யங்கினவே. 9

அழுகி தென்றிடு மதுகொ டுஞ்சில வழுகி தென்றனவே, பழுகி வந்ததொர் பரிச யங்கொடு பலப யந்தனவே. 10

---

## 15. விசேஷப் பேய் வரவு.

வெருவ ருந்திற னுரைசெய் தங்கடி வீழ்வு றும்பொழுதே, குருப ரன்பொரு களம றிந்தொரு குணலை வந்ததுவே. 1

கடுக வந்திடு மலகை வெம்பவங் கருவ றும் படிநீ, படுக ளம்புக வினைவி ளைந்தமை பகரு கென்றலுமே. 2

செயிர றமிக்கதி யங்குமு டற்றுயர் சிறிதுத ணித்தெமதா, ருயிரைய ளித்தம ருரையுமெ னச்சில வுதடுது டித்தனவே. 3

அறுதிப டத்தெளி வளவுதெ ரித்திடு மடையவெ ழுமுதுபே, யுறுதிப டத்தெளி வாலம ருற்றதை யுரையுமெ மக்கெனவே. 4

ஐயப்பா டோகெடுவீ ரஞ்ஞழிந் தமை யின்னம், வையத்தே வந்ததுநான் மறைதேடும் பொருள்காணும். 5

பசியும்போ முங்கள்பெரும் பாவமும்போ மிப்பத்துத், திசையும்போய் முடிந்தபடு களத் திரெரு திணைத்துணையில். 6
பல்லாயி ரத்தாண்டு பலகோடி யண்டத்தா, ரெல்லாரு முண்டாலு மித்தனையுங்குறையாதே,

பாருண்ட மாலுண்டென் படைப்பவனு டரனுண்டெ. ஞருண்டெ ஞரொழிந்தெ னரு காது பெருகாது. 8

ஒழிந்து போன காணு மஞ்ஞ னாமை
மென்று ரைக்கவே, மொழிந்த வாயை யோடி
வந்து முத்த முண்டு நிற்குமே. 9

தொல்லை யுள்ள பரிசு சொன்ன சுருதி
யைக்கொண் டாடுமே, யில்லை யென்ற பேயின்
வாயி னெரியை வையு மென்னுமே. 10

மாயை நாம மஞ்ஞ னாமை மாளு மாறு வந்துநம்,
நாய னார ழித்த வாறு நவிலு கென்ன நவிலுமே.

வாயொரு கோடி கொண்டு மலரோனு தித்த-
முதலாக விற்றை வரையா,
வாயிரங் கோடி கோடி மறையோதி யோதி-
முடியாது காணு மளவே. 12

ஞாநம லாத பாத முரையாடி ஞாந-
முரையாடு காலை யரனார்,
மோநம லாதுகூற முடியாம லியாது-
மொழியாரி தியாவர் மொழிவார். 13

வாயுரை யாடு மெல்லை யலநாய னாரென்-
மநமே புகுந்த மொழியிப்,

பேயுரை யாடு கின்ற தெனநீர்கொ ளாது-
பெரிதாக வுன்னு மிதுவே. 14

---

## 15. அஞ்ஞன் சரிதை.

நாயக னுளு கோல வருண்மேவ நீரு-
நலனேடு கேண்மி னெடுநா,
ளாயக னுவென் மாயா புரமேவி நாளு-
மரசாளு மஞ்ஞ னளவே. 1

மாயாபு ரத்துள்ள வலிகூறு மளவோ-
மாதாபி தாமாது லன்முர மகவென்,
ருயாவ ருஞ்சுற்றம் வீழ்வோர்க ளேறற்-
காதார மேபோல வமிழ்விக்கு மகழே. 2

இன்னுனி யானின்ன னிவனென்று யர்த்தா-
தியானென்ன தென்கின்ற பதாஞ்செய் தீச
றன்னுலு மிதுபோக விடுமாறு முடியாச்- [ன்,
சங்கற்ப மாமென்பர் சலியாத மதிலே- 3

ஓராத வாமூடி யுணர்வென்கு டார- [ரும்,
முள்ளுடொ றுத்தற்கு மொண்ணுமை லியா

பாராத பொல்லாவொ ழுக்காமி ழுக்கே-
படைவீடு சூழப்ப டுங்காடு தானே. 4

அலகற்ற விபரீதம் விளைவிக்க வுரியா-
ரளவற்ற படைவீர ரவர்சுற்ற முடனே,
யுலகத்தை முழுதாளு முணர்வற்ற கெடுவா-
னுருவத்தை யிருள்வேறெ டுவமிக்க வரிதே 5

கருதுமொரு பொருளையொரு கணமளவி
லடையவிகல் கடவுமவன் விடயரதமே, வருதி
சைகள் முழுதுமொரு நொடியளவில் வலிசுழல
வருகமாந மாநதுரகமே. 6

பரனெளிசெ யருமறைகள் பகருமல ரடி
யிணைகள் பரவரினை கிலர்களெனவோ, வரனெ
டரி யயனெனினு மிலதகில மடையவெறு
மஞ்ஞகுல பதியாணையே. 7

அந்தக னுகுஞ் செய்நன்றிக் காகாப் பழிநல்
வழியளவி, னிந்திர னுகும் பிறரொருவ ரேதங்
காணுமி டத்திலே. 8

மெய்யென் றிருப்பது டம்பினையும் விளங்
கிழை யார்தம் வார்த்தையுமே, பொய்யென்
றிருப்ப தீசனையும் புரையற் றோர்கள் புகல்
வதுமே,

நசையு ரைக்கிலவ ணுவும ணுகுமே,
வசையு ரைக்கிலவன் வாய்கோடி யாகுமே, 10

எவ்வத் தேற்பவர்க் கீயக்கை யில்லனே,
கௌவத் தேடியொ ருகோடி கையனே. 11

இளமை யும்மிடும் பைக்கிட மாகிய,
வளமை யும்பெரி தென்றேம திக்குமே. 12

சாயை போலுஞ்ச கட்டுருள் போலுமா,
மாய வாழ்க்கைநி லையாய்ம திக்குமே. 13

மின்ற னெல்லைவி தியற்ற யாக்கைகொண்,
டென்று மிங்கிருப் பார்போலி ருக்குமே. 14

அறஞ்சு ருக்கும வலம்பெ ருக்குமே,
புறம்பெ ருக்கும்பு கழுஞ்சு ருக்குமே. 15

நிரயத் தோடுநெ டுவான்மு கட்டொடுந்,
தரையத் தோடுந்த னியூச லாடுமே. 16

ஓதலு முணர்த்தலு முணவு சுட்டியே,
சாதலும் பிறத்தலுந் தவிர்க்க வல்லவே 17

இந்த மன்னனுக் கென்றும் பவங்கொள,
வந்த துன்மதி மந்திரி யாகுமே. 18

அற்ப மில்லைய ருந்தவ மாதரார்,
கற்பு மில்லைக ழிந்தானெ ழுக்கமே. 19

ஆக மேவடி வாகிய மைந்துள,
முக னீதிமு டியாமொ ழியவே. 20

முறைமை யற்றமை மூவுல கத்தினு,
மிறைய வர்க்கறி விப்பாரு மில்லையே. 21

---

## 17. திரு வவதாரம்.

உண்மை யன்றியு லகத்து ளோர்படுந்,
தண்மை தம்பிரான் றானேய றியுமே. 1

அவப்பிர காசவ வலம்பெ ருத்தமை,
சிவப்பிர காசன்றி ருவுளஞ் சென்றதே. 2

வன்பே யனையான்மேல் வரமெய்ப் பரனுக்குத்,
தன்பே ரருண்முற்றுந் தானோர் வடிவாயே. 3

ஆரா வமிர்தின்சே வடியைப் பிரியாவச்,
சீரா ரடியாருந் திருமே னிகள்கொண்டே, 4

குருநா யகனார்தங் கோலங் கூறப்பண்,
டருநான் மறைகாணா தறிவா ரினியாரே, 5

பிறவிப் பகைவெல்வார் பிறிதற் றெருதாண,
யறிவுற் றவரென்றே யரையுங் கழலிட்டே, 6

ஞாந மேதிரு வாபர ணங்களு-ஞாந மேதிரு மாலையுஞ் சாந்தமு, ஞாந மேதிரு வானவக் கோலமு, ஞாந மேயருண் மேனியு ஞாநமே. 7

ஞாந மேயுடை யாடையுங் கூரிய-ஞாந மே யுடை வாளுந லம்புனை, ஞாந மேவரு மூர்த்தியு மியாவையு, ஞாந மேபிற வுஞ்சில நல்கியே. 8

கமல நான்முக னார்தங்க ருத்தையுங்-
கடந்து லோகம டங்கக்க விப்பதோர்,
விமல மாகிவி ரிந்தொடுங் காமலே-
விளங்கு தண்கொற்ற வெண்குடை காப்பவே,

பூவி லேறியும் போதக மேறியும்-
புள்ளி லேறியும் போர்மயி லேறியுஞ்,

சேவி லேறியுந் தேரினி னேறியுஞ்-
செய்ய பொன்னடி சேரச்சே விக்கவே 10

உம்பர் தாநவர்க் கரிய தாணுவிவ்-
வுணர்வி லானையொன் ருக வுன்னியே,
தம்பி ரானருட் கருணை யாலையன்-
ருனும் வந்தனன் றரணி தன்னிலே, 11

மம்ம ரங்குழந் தமரர் தேடவிம்-
மண்ணின் வந்ததா ளிணைவ ழுத்தியே,
யெம்ம ருங்குகின் றடியர் போற்றவே-
யெம்பி ரானிருந் தருளு மெல்லையே. 12

---

## 18. காமாதி படைச் செருக்கு

புணர்வினோ டருந்த லென்றும் போற்றுத லன்றி வேறோ, ருணர்வறு மரசன் றன்பா லொற்றரு மோடிச் சென்றே. 1

மதித்தல்விண் ணவர்க்கு மொண்ணு மறைப் பொருள் மநுட ஞய்வந், துதித்தன னென்னும் வார்த்தை யுண்டென வுரைத்த போதே. 2

இனிதினுல் வாழு மென்னே யீசனென் ருெருவன் வெல்ல, மனிதனுய் வந்தா னென் னும் வார்த்தையும் வார்த்தை யாமே. 3

ஒன்றில்லே யெனுநீரு மொன்றுண்டு போ லேயு ரைத்தீர்க ளெனவொற்றர்தா, மின்றில்லே யென்னுதி ரோமிந்த வுலகத்தி னியல்கூறி ஞே மென்னவே. 4

அளவில்லே சமயங்க ளவரேயு ரைப்பார்க ளழையென்ன லவர்வந்துமெய், யுளவில்லே வே ருென்று மறியோமு ரைப்பார்க ளுரையோதி ஞேமென்னவே. 5

சொன்ஞர்கள் சொன்னத்தை மெய்யென்று ரைத்தார்கள் சுற்றஞ்சி றைச்செய்யவே, யென் ஞதன் முன்னேவர் பொருளாக விக்காவ லென மார னிகல்கூறுமே, 6

மண்ணேறி னெனையேவர் மலைவார்கண்
மூத்தேவர் மாருகி யானபடிபோய். விண்ணேறி
ஞெருவன் மலையேறி ஞெருவன்
வேலைக்கு ளாஞெருவனே. 7

பண்டொர் நாண்மலர்ப் பட்டின்று மக்கறைக்,
கண்டர் மேனிசெம் பாகங்க றுத்ததே. 8

வேலை ஞாலத்த வரென்னை மீறவோ,
மாலின் மார்பின்வ டுக்கண்டு வைத்துமே. 9

விதியு மென்றன்வி தியினை வெல்லுமோ,
மதிய ழிந்தும கட்கும யங்குமே. 10

மலரோனு மாலு மதிசூடு வானும்-வடிவோடு
கூடி வருமியாருமோ, ரலரோடு போத மழியா
வொ ரோர்வு-மணுகாமல் மாத ரடிதாழ்வரே 11

பரியேறும் வீரர் பலகோடி யோட-மலை
போல யானை பலமோதியே, யரியேறு நூறு மதி
சூர ரேனு-மலர்வாளி காணி னறமாய்வரே 12

கரும்பெனினு மென்னுடைய சைச்சிலைய
சோகங்-கடமலநறு முல்லைகழு நீரிஞெடு சூதத்

தரும்பெனினு மென்கணேசு ரும்பெனினு நா
ணே- ராவியுடை யார்களென தேவல்பிழை
யாரே. 13

தேனிலவு பூகவன முந்தடமு மாறுஞ்-
செய்யவிசை யேழுமுயி ருய்யவரு காலும்,
வானிலவு மாளிகையும் வானிலவு மென்கை-
மாமலரு முள்ளளவும் வந்துணர்வு ருதே. 14

தூமனனும் வாய்மையுமு ருதுமட வார்தஞ்-
சொன்னவில வுள்ளளவு மென்னுமள வேயோ,
காமனெனு நாமமுள தாமளவு மாயைக்-கங்குல்
கழி யாதொருவர் கண்ணும்விழி யாரே. 15

அனிச்ச மஞ்சு மடியி னுரை யார்ம றப்ப
ரறிவினுன், மனிச்சர் முன்பி ருந்து தான்வ டிக்
கும் வார்த்தை வார்த்தையே. 16

பாவ மேவு கொலையி னேடு படுக னற்செய்
கொடுவிழிக், கோப னேயெ முந்த போதிவ்
வுலகு நின் று குலையுமே. 17

குலைகுலைந் துளங்ினைந் திடுங்கினைந் திடுதொ
றுங்- குடர்கரிந் துலகடங் கலுநடுங் குதலுறத்,
தலைகுலைந் துடைகுலைந் தறிஞரும் பெரியதந்-
தலைமைகுன் றிடவெழுஞ் சலமெனுந்தழலதே.

தெருடரப் பொருள்விரித் தருடரத் திரித
ருந்- தெளிஞரைத் தெளிவறத் திசைமயக் குற
வெறுங், குருடெனச் செவிடெனக் கொலை
சினக் கனலெழுங்- கொதிபொறுப் பலர்களைக்
குவலயத் தவர்களே, 19

வருசெ ருச்செயா வகைய றத்தையே-
வடஙி ழற்கணே மதிபெ றச்சொனோ,
ஞெருச ரத்திலே யொருக ணத்திலே-
யுழல்பு ரத்தைநீ றெழவொ ருக்குமே. 20

மறுக வுக்கிரத் தொழில ரக்கர்தம்-
மநமும் வாரியு மதிலி லங்கையுந்,
தெறுக னற்கொளச் சிலைவ ளைத்ததுஞ்-
சிரமு திர்த்ததுஞ் சினமி குத்தலே. 21

கோப மிக்கபோ தேவ ராறுவார்-
குறுகு வோர்தமைக் கொடிய நோய்புகுஞ்,
சாப மிட்டுமா தவர்க ளாயினர்-
தலைமை மிக்கதந் தவமி ழப்பரே. 22

அடலோப னெழிலேவ ரமைவார்க ளடையக்,
கடலோடு மலையோடு தடுமாறல் காணே. 23
பேரோத நேரான பேராசை கூர்போ.
தாரோடு முண்டோவொ ரன்பென்ப தங்கே 24

ஆலஞ்சேர் மிடற்ருனு மையத்திற் குழன்
றிலனே, மாலும்போய் மாவலிபான் மண்
வேண்டி நின்றிலனே. 25

உரையாத பொய்யுண்டோ வுலோபனே
யுற்றக்காற், றரையாளும் பொருட்டன்றே
தருமனும்பொய் சாற்றியதே. 26

ஈசனெளி யோரிடத்து நிகழா வண்ண-
மெவ்வுருவுந் தன்னுருவா யெங்குந் தானு,
மாசையவ னேர்சேனா பதியின் றேலிவ்-
வஞ்ஞகுல பதிபெருமை யறிவா ரியாரே. 27

புகர்வெண்டோர் புனலென்று புலன்க ளாரப்-
போயலையத் திளைத்திளைத்துப் பொய்யே யார்
சகர்திண்டா டச்செய்யு மோக னஞ்ஞன்- [ந்து
ருஞன சமன்வேறோர் தன்மை யின்றே. 28

மோகமுற வேமுநிவர் மூவர்முதற் றேவர்
நர ரியாவர்களு மியாவை யுமெலா, மா கமது யா
னெனது தந்தைதமர் தாரமக வென் பதுமொ
ழிந்த திலரே. 29

மோகமுற வேயெவரு மோகமத முலிடரின்
மூந்துவர்மு டிந்தவிடமுஞ், சோகமுற வே துயர
மூந்துவத லாததுது றந்துணர்வு *கூறவில ரே 30

ஓசையி னிற்பெரியே ளேதின்மி கப்பெரி
யே- னுங்களி னெண்மடிநான் வங்கிச மெனிற்
பெரியே, னீசனெ னக்கெதிரோ வேவ ரெ னக்
கெதிர்வே- றென்னும கங்காரத் தெவரெதி
ரே றுவரே, 31

என்னள வீச னும்வந் தேற்றெழு யும்பலிசென்-
றேற்றில ஞகினயன் றேற்றமி லன்றிருமா.

---

* கூர-எனப் பாட மோதுவாரு முளர்.

றன்னள வோரவியுஞ் சந்திர னிந்திர னுஞ்-
சற்றரெ னப்பகருந் தம்படை நம்படையே. 32

கதத்த யானை யைத்த ணிப்பர் களிமி குத்
தெ ழுந்தமா, மதத்தை யார்த ணிக்க வல்லர்
மண்ணி னன்றி விண்ணிலே. 33

எச்ச ரங்க ளுந்த மக்கெ திர்ந்து ளோர்க
ளைப்படு, மச்ச ரன்ற னுவி தன்னை வவ்வு தற்கு
வல்லரே. 34

தந்த வப்ப யன்பு சித்தல் கண்டு நெஞ்சு
தன்னுளே, வெந்த வப்பொ ருமை தன்னை
வெல்க யாவர் வல்லரே. 35

ஞான மாசில் தன்ம வித்த காம நாம நாலையு,
மீன மாக்கு நம்ப டைக்கொ ரெல்லை சொல்வ
தெங்ஙனே. 36

இங்கி யாது மிவனி யம்ப வின்ப மெய்தி
யிறைவனைச், சங்கி யாம லஞ்ஞ சேனை தாம
கிழ்ந்தி ருக்கவே. 37

---

## 19. ஞாந விநோதன் படைச் செருக்கு.

எவ்வுயிர்க்கு முயிராய விறைவன் பொற்று-ளெய்தவிருந் தவஞ்செய்தோ ரிறைஞ்சிப் போற்றி, வெவ்வுயிர்க்க வருமறியா வேந்தன் றன்னுல்- விளைந்ததெல்லாம் விண்ணப்பஞ் செய்த போதே, 1

போராரு மஞ்ஞனவன் றன்னுல் வையம்-புகுந்த பிழை கேட்டருளிய் போத மூர்த்தி, சீராரு மடியவரைத் திருக்கண் சாத்தத்- திருவடித்தா மரையவர்தஞ் சென்னி கொண்டே. 2

எம்பிரான் றிருக்கடைக்கண் பட்டார்க் கன்றே-வெளிதாகி யிருப்பதுதா னேற்ற மிக்க, வும்பருமா யாபுரத்திற் கஞ்சா நிற்ப-ரொழிந்தவரோ வினியொழிப்பா ருலகத் துள்ளே. 3

வருபாசக் கட்டறுத்து மாமாயா புரமழித்து மயக்கந் தீர்வார். சொருபாநந் தாவுனக்குத் தொழில்செய்வார் பிறரா லுந் தொலைக்கலாமோ.

கச்சொருவுங் கநதநத்தார் கலவியினும் புல
வியினுங் கலக்கந் தீர்வார், மெய்ச்சொருபா நந்த
நிலை மெய்ப்படத்தாம் பெற்றவரே வேறுர்
வல்லார், 5

என்று நின்றுரை செய்த வெல்லையி- னெந்
தை ஞானவி னோதனைச், சென்ற வன்றன தாவி
யுண்டுதி- ரிந்தி டென்றருள் செய்யவே, 6

தம்பி ரானிருப தங்க ளுந்தனது-
சென்னி கொண்டறிஞர் தம்பிரா,
னெம்பி ரானைவிடை கொண்ட வன்படையெ-
ழுந்த வாறெவரி யம்புவார். 7

கடலென காம கோப லோப மாறுவ- கரு
ணைநி ஷாதி யாய்வி டாது பாய்வன- கருவெனு
நாம மாள வீதி போவன- கலக மருத வோசை
மீள மீள்வன, வுடலொடு கோப மேலு மேலு
மூள்வன-வுணர்வறியாத வேட கூட மோதுவ-
வுலகிய றூர நாற வேபொ ருதன- வொளிமத
யானை கோடி கோடி கோடியே. 8

உறவொடு வேறிலாத வாசியூர்வன வுலகிரு நாலு மாறு மேலு மாவன- வுடுபதி சூரியாதி காணொ ணாதன- வுயர்வது வேறு தான லாதி லாதன. துறவொடு சாலு ஞான வீரர் சூழ்வன- சுருதிகள் போன நீதி வீதி போவன- துணிவுற வேறு பாடு சாடி யோடுவ-சுடர்விடு ஞான வாழி கோடி கோடியே, 9

சிதறவி டாம லியாது மாய நூறுவ- செறிய வொ ணாத ஞான வாளி பாய்வன- திருகுதல் திரு மாறு மாறு சேர்வன-சிலுகொழி யாது காதி யோதும் வாதிகள், குதறிய கூர்மை வாய்கண் மூட வேறுவ- குணமொரு காலி லாத தான நீர் மைய- குருபர னூர்த மேவல் வீதி போவன- குர கத ராசி கோடி கோடி கோடியே. 10

இனியன கூறும் வாயு மாய வாய்மையு- மிறு திய தான போதும் வாழு போதினு- மியல்வழு வாத ஞான தீர பாவமு-மிலகிய ஞானவாளுமோன வீரமு, மநியத வூண லாதி லாத வாண்மையு-

மவரவர் சீல மோடு வாமு நீர்மையு- மளவு
படாமை யேசு பாவ மாகையு- மதிபய யான
வீரர் கோடி கோடியே. 11

இந்தவுல கந்தரஞ்செய் தெழுகட-
லெண்டிசைக லங்கிநின்ற குலமலே,
வந்துவிழு மன்றுமொன்று மசைவிலர்-
வந்தபடி கண்டிருந்து மகிழ்வரே. 12

சந்தந குங்குமங்கள் புழுககில்-
தண்பனி தஞ்சொரிந்து மகிழ்விலர்,
நொந்தன கொண்டரிந்து நுகரெரன-
நொந்திலர் முந்தையென்று நகுவரே. 13

நொந்தனர் கன்றிவந்து நலிபவர்- நுந்தன
ரென்றமைந்த கடனற, வந்தனவென்றிடும்பை
வரமகிழ்- வந்தன ரங்கிரண்டு முடையரே, 14

செயலினை யற்றிருக்கு முநிவர்கள்-
செறிவினை யைக்கெடுக்கும் வகையினின்,
முயல்வினை யைக்கெடுப்ப ரறிவினின்-
முன்வினை யைப்புசிப்ப ரடையவே. 15

எண்ணி லாதவியல் ஞாந வீரர்தமை- யெண்
ண லாகுமள வெங்ஙனே, கண்ணில் வேறுபட
வின்மை யாலொருவர்- காணுமாறரியகாணுமே.

கீழி லாதபடி கீழு மேலுமதின்- மேலி லாத
படி கெழுமியே, சூழிலாதபடி சூழு தானிலை-
சொல்ல லாகுமள வல்லவே. 17

நிறைந்தபெரும் படைநோக்கி நீரழிக்கும்
பரிசெமக்கிங், கறைந்திடுமென் றருள்செய்ய
வரியநிரு பகன்றெழுதே. 18

தேராதா ரல்லரோ சேயிழையா ரெனத்தி
கைப்பா, ராராயு மறிவுடையார்க் கருவருப்பே
யல்லவோ. 19

மாலாய வவரன்றி மாசற்றார் மாணிழையார்,
கோலாக லங்களையு மொன்றாகக் கொள்ளுவ
ரோ. 20

நரம்பெலும்பு மூளைதசை நவைதருதோ
லாற்பொதிந்த, குரம்பையினைக் கற்றோருங்
கொண்டாட லென்கொண்டோ. 21

தசைய ருதமு கத்தை வங்தெழு சந்ர
மண்டல மென்பரே. வசைய ருமயிர் தன்னை
யுங்குழல் மங்கு லென்றும திப்பரே. 22

கற்க நாறிம ணந்த குங்கும களப வண்டலு
மளவிலாத், துற்க நாறுதல் கண்டி ருந்துஞ்சு
கந்த மென்றுது திப்பரே. 23

பீளை யாகிய கண்க ளைச்சில பிணைக ளென்
றுபி தற்றியே, சூளை யாரையு மொன்றெ னச்
சிலர் சொல்லு வாரவர் புல்லரே. 24

மெய்ம்மை யேகொடி யெனது வேள்கொடி
மீன்வி டும்படை மாதரார், தம்மை யேயென
தவர்த மைத்துணி செய்த தைர்ய சக்ரமே. 25

பாவை மாருடல் பைம றிப்பதொர் பார்வை
யிற்பொடி பட்டறும், பூவை மார்பொடி யாக
வேபொடி யாகி வேளுயிர் போகுமே. 26

இறைவன் முன்பற நிருப கன்றெழு-திவை
விளெம்பிய வெல்லையிற், பொறைவ லஞ்
செய்து தொழுது றம்பகை பொடிப டும்படி
புகலுமே. 27

மாசாய நாவுடையார் வாய்திறந்தா லவர்க ளுடன், பேசாம லிருந்துவிடு மதுவன்றோ பெருந் தகைமை, 28

வைதாரை வாழ்த்தினர்போன் மதித்தென்று மறக்கொடுமை, செய்தாரை யறியாத செயலன்றோ செயலாதல். 29

பொதுவதுவாய் நிறைந்தபரம் பொருளே போல் யாவர்க்கு மதுவதுவா யிருந்துவிடு மதுவன்றோ வவிரோதம். 30

இகழாவ தேது புகழேது தேரி லிவையாவு மாவ துரையே, யகழ்வார்க ளியாவ ரருள்வார்க ளியாவ ரநுபோக மாகு மவையே, 31

எரியான கோப மெழுபோதி னுறி யினிதாய கூறி யெதிரே, சிரியாதி ரார்கள் பெரியோர்கள் சீற நினைவார்கள் வேறு சிலரே. 32

* முகுளி தம்பெருகு முகமொ ழிந்துவிட முறுவல் கொண்டுமுக மலர்வனே, வெகுளி தங்

---

* முகிழிதம் என்றது - எதுகை நோக்கி - முகுளிதம் எனத் திரிந்தது.

குமாந வெரிகெ டும்பரிசு மிகவு மங்கினிமை விளைவனே. 33

மொழித ருங்கனலு மவிய நின்றமிர்த- மொழியெ னுந்தடிநி பொழிவனே, யழித ரும்படியென் னுடலில் வந்தனவெ னதுப வங்களென வயில்வனே. 34

மிகையாவென் பொறைப் படைக்கு விருந் தாக்கி விடுகின்றேன், பகைபாவங் கொடுமை கொலை படையுடைய கோபனையே. 35

பொறைபெரிது மிவையோதப் புகழ்பெரிய சந்தோட, னிறையுடையா னடியேத்தி நிறை வுடனின் றறைவுறுமே. 36

என்றும் பொருவரிய வின்பப் பொருளு டையார், பொன்றும் பொருளும் பொருளாகப் போற்றுவரோ. 37

வாணு ளொழிந்தாலும் வாய்விண்டு தாம் வேண்ட, நாணு தொழிகுவரோ நன்குய நாவு டையார், 38

உளம்படு பேராசை நோய்கூர மேன்மே-
லுழன்றவர் வாழுத வாகாண லாமே,
வளம்பட வாழ்வோமெ ஞதார்க ளியாரே-
வருந்தினும் வாராது வாரரது தானே. 39

புலன்றலை கொண்டேறு புன்போகமேன்மேற்-
புணர்ந்திட வுண்டாகி வந்தாலு மாரு,
வலந்தலை கண்டாசை யொன்ருேடு ருதே-
யறிந்தவர் சந்தோடம் வந்தாறி ஞரே. 40

இல்லாத பொழுதின்ப மிதுவென்று பிறர்பாற்,
செல்லாத செலவென்ப செலவாய செலவே. 41

படைத்தவனி றுந்திசைப டைத்தபொரு ளெங்கே, யெடுத்தவன்வி ழிற்சுமைவி ழாமலு மிராதே. 42

ஆமாகும் வழியால ருந்தித்த டையற்,
ருமாய்தல் பொருள்மாய்த றவிராது பிரிவே, 43

வாதாகி நுகர்கின்ற வயிறுள்ள தொருசா,
ணேதாலி தமையாதி தென்னேயி தென்னே. 44

ஏசாத பற்றின்மை யெனுமாயு தத்தா,
லாசாப சாசோடு மடலோப னிறுமே. 45

சந்தோ டனிவை யிவை சாற்றவே,
யந்தோ வென்ற ருளுமள விலே, 46

விவகா ரபரா முகன்மே வரும்,
பவகா லிபதம் பணிந்தோ துமே, 47

அத்தனெ டன்னைக் கன்புசெய் கின்று-
ரளவில் பிறப்புற் றவையவை தோறு,
மெத்தனை தாயுந் தந்தையு முற்று-
ரித்தனை யன்றோ விவர்களு மிங்கே, 48

சாலவு திக்கும்பு ழுவுட றன்னிற்-
றகவின்ம லத்தோ டொழுகுமு டம்பே,
போலவு திக்கும்பு ழுவினை யென்னே-
புத்திர னென்றே புந்திசெய் தாரே. 49

வந்தவ ழிக்கண் வந்திலர் போகும்-
வழியினும் வருவா ரிலரிடை வழியார்,
தந்தைம கத்தாய் தம்மொடு வந்தார்-
தாரமு முற்றார் தாமுமெ லாமே, 50

அமருமு டம்போ டழிதுயர் வந்தே-
யலம்வரு போதங் கநுபவி யாதே,
தமர்கள்ப கிர்ந்தா ருளரென வுண்டோ-
தம்முற வாவார் தாமல தின்றே. 51

ஒழிந்தன வேறற வொன்றுட ருனு,
மழிந்தது தம்முட னுமுற வாரே. 52

சுற்றமொ டுற்றது வந்துவ மெல்லா,
மற்றவர் தம்முட னற்றவர் தாமே. 53

கதறிய வாழி யாறி யாடுதல்- கருதினர்
யாவர் தாமி யாவையு, முதறிய ருத போது
நாடொறு- மொழுகவி டாதவ் வார வாரமே. 54

கழியாரி லாத போது சேறது- கழுவியு
மிலாப மேது யாவையு, மொழியாரி லாத போது
மாசற- வுதறவொ ணுது பாச மூடுமே. 55

உறவாடு பந்தங்க ளெல்லாமு திர்ப்படன்,
றுறவாகும் வச்ராயு தத்திற்று ணித்தே. 56
லடிவற்ற கோன்மைந்தன் முன்னின்று *மறை
முடிவற்ற பலகோடி மொழியாத முன்னே.[நா,

* மன்று எனப் பாட மோதுவாரு முளர்,

தத்தந்தொ ழிற்கொண்டுதாழ்வின்மையின்னே,
முத்தன்பெ ருஞ்சேனை யெல்லாமொ ழிந்தே. 58

---

## 20. ஞாந வேந்தன் படையெழுச்சி.

தஞ்சேனை கண்டன்பு தாமுற்றிவ் வாறே,
நஞ்சேய னுன்மேன டக்கின்ற பொழுதே, 1

வித்தக வேதங்க ளேவாசி யாவே-
மெய்த்திற னுய்கின்ற தோர்பாக னுவே,
தத்துவ மாகின்ற தேரேறி னரே-
தற்சொரு பாநந்தர் தாள்சூடி னரே, 2

வாதக ரோடினு மாதர வோடோர்கால்-
வாசியி லாவாசி யேவாசி தானும்,
போதமே போதக மாந்தேர்வு தேர்தாம்-
போல்பவ ரேவீர ரேதோது மாறே. 3

தான தேதுமில னுதி யாகவல தம்பி ரானு
டைய தானைமால், யானை தேர்புரவி யஞ்ஞ மன்
னனது மாய மாபுரம ணைந்ததே. 4

புறம்பு ருதபடி சூழ நம்படைஞர் போது
கென்றருளு போதிலோ, ரறம்பு காதபடை
விடு சூழவும டங்க வும்படைஞ ரானவே. 5

முகுந்த னன்றரனு மன்று நாலுதிசை
முகனு மன்றவர்த மூலமே, புகுந்த தென்றிகல்
புறம்பு கண்டவரடங்க வுள்புகுது போதிலே 6

மருவி யெங்குமுற நின்றபொரு ளின்று
புவிமேல் – வடிவு கொண்டுவரு கின்றதென
வந்து மொழிவா, ரருவ மென்றுமொழி கின்ற
பொரு ளிங்கு வருவதற்- கடியெ னென்றுசிலர்
நின்றுநகை கொண்டுவிடுவார், 7

சமய மென்பனவு மொன்றுமில தென்று
மொழிவார்- தவமு டிந்ததுமு டிந்ததென
நின்று சமைவா, ரமையு நந்துமுனி யென்
றமைவு வந்து விடுவா- ரறிவி லன்புரம ழிந்த
தினி யென்றயருவார். 8

குடிகெ டும்படிபு குந்ததுணர் வென்றுதளர்
வார்- குலம டங்கலுமு டிந்ததென நின்றுகுலை

வார், முடிவில் வந்துறுவ தொன்றெனமொ ழிந்தகணியார்- மொழியு மின்றுதலை வந்ததென நின்றுமொழிவார், 9

பறைவ தென்கொல்பல விங்கிவர்க ணின்று கெடுவீர்- பவமொ ழிந்துவரு கின்றபடி கண்டு மினநீ, ரிறைவ னன்றெனவி யம்புவதெ னென்றுமொழிவா- ரிருவர் தங்களிலி யம்புவத டங்க லிவையே, 10

---

## 21. அஞ்ஞ வேந்தன் படை யெழுச்சி.

விடர்வி ளங்கு தானை யஞ்ஞ வேந்த னுக்கு மாந்தர்போய்ச், சுடர்வி ளங்கு ஞாந சேனை சூழ்ந்த தென்று சொல்லவே. 1

மூவர் சேனை யென்கண் முன்பு நிற்க வில்லை மொய்ம்பினோ, டியாவர் சேனை யென்னை வெல்ல விங்கு வந்த தென்னவே. 2

யாவர் சேனை யென்ன யாம றிந்த தில்லை யெங்கனுந் தேவ தேவ தேவ னென்ற சின்ன வோசை யென்னவே. 3

ஏகமுத லோன்வருவ னுகினமர் செய்யவவ னென்கணெதிர் நிற்க விலனே, தேகமுள னேலவனை மாரன்முதல் வீரர்படை சிந்து வர்கள் சிந்தி விடவே, 4

வானவர்க டானவர்கண் மானவர்க ளான வரின் யாவர்மறை கூறுபரிசே,ஞானபர ராகிமத ராசான்முத லானவிரு நால்வரையும் வென்ற வவரே. 5

ஓதுமுட லிந்திரிய முள்ளுமந புந்தியுயி ரோங்கியவ கங்கர முமிங், கியாதுமுறு சங்க மெனு மேழணியி னென்றுவிடு விக்கிலவனிங் கிறைவனே, 6

ஆண்டகைய னுகினெனை யஞ்சுதலொ ழிந்து வரு மவனையெதிர்சுண்ட ளவினுன், மீண்டிடுவ

ஞகிலெனே யஞ்ஞவர சென்றழையேல் வேறு
பெய ரிட்ட ழையுமே. 7

என்றுபல பாஷைகள்கொ டுத்துமத நாதி
படை யேவியிறை வன்க ணெதிரே, நின்று
பொர நேரறிவி னெஞ்சினிசி கோடியிரு ணின்ற
தென லாகு நிலையே. 8

---

## 22. தொந்த யுத்தம்.

வேத கீதன்ப டையுடன் வெஞ்சினப்,
போத கீநன்ப டைபொரப் போதவே. 1

துன்னிட் டேகரு போதகந் தோன்றலும்,
வென்னிட் டேகின வைம்புல வேழமே. 2

இரத மானர தத்தெதிர் நின்றில,
விரத மானவி டயர தங்களே. 3

புரணப் பாய்பரி தோன்றப்பு ரத்துள,
கரணப் பாய்பரி யாவுங்க ரந்தவே. 4

அறிவன்பெ ருஞ்சேனே கண்காண வெதிரே-
யஞ்ஞன்கொ டுஞ்சேனே யஞ்சாம லெழவோ,

வெறிவெங்சு திர்ச்செல்வ ரெத்திக்கு மெழவே-
யிரியாம லிருணிற்கி னிதுநிற்கு மெதிரே. 5

ஓட லின்றியெதிர் நின்ற வீரர்தமை வீர
ரங்கெரருவ ரொழிவரச், சாடு கென்றருள வீரர்
சொல்லுவர்வ ணங்கி வீரனிரு தாளிலே. 6

அறிவி லன்படையு மளவி னம்படையு
மறிய வின்றிவரு மறிவுறுங், குறியு றும்பரிசை
யருளு கென்னவவர் குறியு றும்பரிசு கூறுமே 7

விண்டி ருந்தென்மெய் கண்டு ளோர்தவ-
வேட மேவியென் கோடி மாதரைக், கொண்டி
ருந்தெனவர் செய்த தேதவங்- கொண்ட
கொண்டதே கோல மாகுமால், 8

நனவுநிலே போல வறிவுமறி வார்க-
ணவையு மறிவார்க ளலமுளோர்,
கனவுநிலே போல வெதுவுமறி யார்க-
ளதுவுமறி யார்கள் கயவரே. 9

சுற்றவரு மற்றவரு மொருவர் செய்யுங்-
கடுமையினிற் கலுழும்வகை யொத்து மொவ்

வார், செற்றவர்மே லுறுஞ்செயிர்க்கு நோவர் நல்லோர்- தீயுடன்மே லுறுஞ்செயிர்க்கு நோவர் தீயோர். 10

உள்ளமழிந் துகுமன்பர்க் கன்றி யோரா-
வுலகர்திறத் தினுமுண்டாங் கொவ்வார் மாதர்,
கள்ளவிழிக் கழிந்துகுவா ரறியா ரீசன்-
கலந்தவிழிக் கழிந்துகுவார் கவலை யற்றோர்.

அறிவினன் மிகுபவரு மறிவி லோரு-
மாயுமா றென்றுமில ரெனினு மொவ்வார்,
பிறிவிலா மையிலறியார் பிறவி நீத்தார்-
பேரிருளா னென்றறியார் பிறந்து சாவார். 12

மகவருடப் பாலான கொங்கை யின்ப-மயக்கமுயக் குறுங்கணவன் வருடும் போது, மிகவுணர்ந்தோர்க் கும்பிறர்க்குஞ் செயல்கள் பார்த்தால்- வேறறினும் பாவகந்தான் வேறு வேறு. 13

அழுக்கிலவர் செயவேண்டுந் தவமு மில்லை-
யழுக்குடையோர் செய்வதிலை யாத லாலே,

யொழுக்குடைய நல்வினையு முயர்ந்தோர்க்
கில்லை- யொழிந்தோர்க்கு மில்லெனினு மொவ்
வா ரொவ்வார். 14

மேவிவிடு மருட்படைக்கு மருட்ப டைக்கும்-
வேறறிய விவ்வாறு விளம்பி வீர,
னேவிவிடு மளவதனி லஞ்ஞ சேனை-
யிறந்தபடி யதனையுமிங் கியம்பல் செய்வாம் 15

உருபசு மகளிர்தி றத்தினை- யுசாவொடு மற
மொடி ழிப்பொடு. நிருபகன் மதனைய ழித்தன-
னிலவிய ரதியுமி றப்பவே, 16

பாவனு மிகலுமி ரங்கலில்- பாடுறு கொலையு
மெ ரிந்தெழு, கோபனு மடையந லம்பல-
கூறிய பொறையின ழிந்ததே. 17

மோகனு முலகம யக்குற- முடிய மயலுமி
குத்தெழு, சோகனு மகிழ்வுந சித்தனர்- தூமதி
கணவன்வி ழிக்கவே. 18

ஆனசந் தோடனில் லோபனு- மாசையும் பேசுகள வாதியு, மானசந் தாபனுந் தீநனு- மாந முஞ் சேரவுயிர் மாயுமே. 19

அறன ழித்தனன்ம றத்தினைய சூயை தனைநல்-லமிர்த சீலனும ழித்தனன டக்கனுமதத், திறன ழித்தனனு பேட்சையில பேட்சை பொடிநற்-றேர்வி லேபெரிய டம்பனுயிர் சிந்தியதுவே.

ஆங்க ரிப்பரிய சாந்தியின ழிந்ததுயிர்கட்-
கன்னை போலுமவி ரோதமெழ வாருயிரையுந்,
தீங்க ருத்தியிடு மச்சரன ழிந்தயரவே-
செய்யு மையமழி வுற்றதுமி குந்தெளிவிலே.

தற்க மோனமுற வேபொடித மம்பொடிவுறுஞ்- சத்து வத்தில்வரு சங்கமும சங்கமுறநேர், நிற்கு மோவொருமருட்படைய ருட்படையின்முன்- னிற்க வேதுநிண மேதுகுட ரேதுநிலையே. 22

---

## 23. அஞ்ஞ னழிவு.

ஆவியை யொழிய வெல்லா மழிந்தகப் பட்ட வஞ்ஞப், பாவியை யெந்தை பாதம் பணி யெனப் பகர்ந்த போதே. 1

அறிவில னெனும்பே ரொன்று மழிவுரு திருக்க ஞாநங், கிறிவரும் படியென் ருனே கிளர்ந்தெழு மென்னக் கேட்டே. 2

இருடுணிந் திரவிமுன் னிற்குமோ பஞ்சுதா- னெரியின்முன் னிற்குமோ வெங்ஙனே யரவ முங், கருடன்முன் னிற்குமோ ஞாநமே வந் துறுங்- கண்ணின்முன் னிற்குமோ வெண்ண றுங் கன்மமே. 3

அழியுமிக் காயமுங் கழியுமுன் னிளமையு-
மன்புறுங் கிளைஞரு மின்புறும் போகமு,
மொழியுமிச் செல்வமொன் ருகநீ வுன்னியோ-
வுடையாா யகனெஞ் சுணர்வுருதொழிவதே.

தேவர்களு முனிவர்களுஞ் செழுமறையும் பழையவொரு, மூவருமென் றிருந்தனையோ முழுமுதலென் றறிந்திலையோ. 5

இந்தவுல கத்தினிடர் கெடும்பரிசிங் கெழுந் தருளி, வந்தவனென் றறிந்திலையோ மானிட னென் றிருந்தனையோ. 6

அதிரேக வழகுடையா னாளுடையான் றாளு டையா, னெதிரேநின் றனையாவி யிப்பொழுதே யிழந்தனையே. 7

நாய னாரடி யார்கண வில்தொ றும்,
பேய னானும்பெ ருகச்சி னஞ்செய்தே. 8

ஞான வேந்தன்வந் தென்னெதிர் நண்ணுற,
லான வெல்லையிற் காணுமென் னாண்மையே. 9

என்ற வன்மொழி யெந்தைதி ருச்செவி,
சென்ற வெல்லைசி ரித்தருள் செய்யுமே. 10

உம்ப ரிம்பரு வப்பவொ ளிமிகுந்,
தம்பெ ருந்தன்மை காட்டச்ச மைந்துமே. 11

பழுதுப டாமறை வானுளோர்- பண்டை
யொர் மூவர்க ளின்றுகா, றழுதுபெ ருவடி யஞ்
ஞன்மே- லாகவி சைந்தன னண்ணலே. 12

வெருவரு நான்முக னுதியாம்- விண்ணவர்
மண்ணுளர் வேறுவோ, ரொருவர்பெ ருவடி
வுணர்விலா- னுச்சியின் மீதுமு தைத்ததே. 13

தென்றிசை யின்றுயர் தீர்த்ததாள்- செய்
தருளும்படி தெரியுமோ. வின்றிசை கின்றன
வல்லவோ- வித்தலை மீதுமி ருக்கவே. 14

பெரியவர் தஞ்செய லாவதும்- பிறரறி
வாலறி வோமெனத், தெரியும தன்றது தெரிவ
துஞ்- செய்துமு டிந்திடு திசையிலே. 15

செறித ரும்பிறவி முறிய வந்திறைவர்
திருவி ளங்குகழ லருளுநா, ளறிஞ ரென்றுமில
ரவல ரென்றுமில ரவர்சு தந்தரம தடையவே 16

பிறிவி லாதகுரு பரம னார்தமருள் பெருக
வேயுடைய திருவினு. னறிவிலா னுடனிவ் வகில
மாயையுயி ரடைய நூறும்வகை யறைகுவாம்.

சலிக்குமநத் தெழுச்சியறத் தவிர்த்திதம் விட் டகத்தே, சிலுத்மெதழுமத் துடிப்புமறத் திரித்தடையக் கெடுத்தே. 18

குறித்திடலற் றிடத்ததனைக் குறிப்பவரைக் கெடுத்தே, கறுத்தவிருட் டனைக்கதுவக் கரித் தனைவிட் டழித்தே. 19

குறித்தல்குறிப் பிறத்தலெனிக் குறிப்பழி யக் குலைத்தே, மறித்தவிடத் ததிற்பரிசித் தகத் தெனல்மற் றொழித்தே. 20

தனிச்சுடரிச் சகத்தொளிரத் தனைக்கெட வக் கணத்தே, பனித்திவலைத் தடிப்பொழியப் பரச்சுடர்விட் டழித்தே. 21

ஒருக்கிவிரித் ததிற்சுழல்வுற் றுழற்றுமிருட் டனைப்பே, ரருக்கனுதித் தலக்கணறுத் ததிற் பிரபையிட் டழித்தே. 22

செகத்தொழியத் திரித்தவிடத் தெளிர்ச்சி யுறச் சிதைத்தே, விகற்பமறத் தனிச்சுடர்விட் டெரித்தயர்வைக் கெடுத்தே. 23

கலுழ்ச்சிகளிப் பகத்தெளிவுட் கலக்கமிகுத் திகத்தே, செலுத்தல்திரித் தலற்றடையச் சிவச் சுடர்விட் டெரித்தே. 24

தனிற்பிறிதற் றிருக்குமருட் டனிச்சுடர்தற் பதத்தே யினிப்பிறிதற் றிருக்கவிசைத் திடுக்க ணறுத் துவிட்டே. 25

சகப்புரணத் தடிப்படையச் சமித்திடலுற் றிடத்தே, சுகத்தெளிவிற் சிவப்பிரபையிற் களிப்பதனைத் தொலைத்தே. 26

காயா திகளேழு மாயா விடயத்தே-
கையற் றறிவின்கா ரணமா திகளேழும்.
மாயா விடயத்தே மாயச் சுகசற்சின்-
மயபூ ரணமேதன் வடிவா னதுவங்தே. 27

கோதற் றமிர்தாகிக் கூறற் றுணர்வாகிக்-
கூறற் கரிதாகிக் கோசப் புலன்மாறித்,
தீதற் றவர்காணத் தேஜைத் தினிதாகித்-
தேசத் திசைமாறித் தேறித் தெளிவாயே. 28

எம்பிரானே வந்தெ திர்ந்தி றந்த வஞ்ஞ னிங்குரு, னும்பர் வானு ருதி ரும லொன்றி னுனவ் வொளியொடே, 29

அல்ல லான காம ராச னுதி யான சேனையு,
மில்ல வாகி ஞான ரூப மாகி யேயி லங்குமே 30

அறிவறி யாமைய ழிந்தனரே,
யறிவறி யாமைய ழிந்தனரே. 31

பிறிவறி யாமைபி றழ்ந்தனரே,
பிறிவறி யாமைபி றழ்ந்தனரே. 32

கரக்குமு ளத்தவ ராயினரே,
கரக்குமு ளத்தவ ராயினரே. 33

இருக்கமு டிந்தவ ருட்பொருளே,
யிருக்கமு டிந்தவ ருட்பொருளே. 34

அழிந்தற மாயையி ருட்டெலா- மறிவுரு வாகநம் மண்ணலார், மொழிந்தது மிங்கொரு வார்த்தையே- மூவுல கும்மொரு வார்த்தையே,

உழுந்துரு ளுந்துணைப் போதிலே- யுணர் வுரு வாகநம் முச்சிமே, லெழுந்தரு ளும்மிரு போதுமே- யேத்துவ தென்றுமெப் போதுமே,

அறிவி லானுயிர்க் கிறுதி செய்தபி-
னரிஞர் தம்பிரா னரிய தாளிணைப்,
பிறிவி லாததம் படையை மீள்கெனப்-
பெரிய சேனையுந் திரிய மீளுமே. 37

---

## 24 வெற்றி சாற்றல்.

காய மாகிவாழ் மாய மாபுரங்-
கட்ட டங்கவே சுட்டல் கண்டுளோர்,
தூய ஞாநநற் சுடர்வி ளங்குமெய்ச்-
சொருப னூர்பதந் தொழுது ரைப்பரே. 1

அடியே முள்ளங் கருப்பதுநல்- லம்போ ருகங்கள் சிவப்பதுமிப், படியே வந்த பரனே நின்- பாதங் காட்டாப் பண்டன்றோ. 2

செய்யப் படுந்தே வருமுலகுஞ்- சிறியோம் வாழ்வுந் தீப்பிறப்பும், பொய்யற் றிருப்ப தெம்பெருமான்- புவியிற் போதாப் போதன்றோ. 3

போக்கும் வரவும் பொன்றுடும்- புழுவார்
நரகும் புசிப்பனவு, மாக்க மழிவுந் திருக்கடைக்
கண்- ணுகா திருக்கு மளவன்றே. 4

சாவா கின்ற பெரும்பிணிக்குஞ்- சனிக்கும்
பிணிக்குந் தடுமாற்ற, மாவா வென்றுன் றிருக்க
ரத்தா- லஞ்சே லென்னு மளவன்றே. 5

முத்திக் கரசே நீயெங்கு- முழுந்தி யிருப்ப
விழுந்துழலும், புத்திரக் கிலேசந் தலைமிசையுன்-
பொற்ருள் பொறியாப் போதன்றே. 6

அந்தக் கரணம் புறக்கரண- மவத்தை பல
வோ டகம்புறமாந், தொந்தக் கலாதி யாவையு
நின்- றுணைத்தாள் சூடார் சொல்லன்றே. 7

சமயா வெந்தச் சமயமுமெச்- சவலைச் சடங்
குத் தனமுமெல்லா, மமையா ததுநின் றிருப்ப
வள- மலரா திருக்கு மளவன்றே. 8

எவ்வளவு மளவுபடா திருக்கை யுன்ற-
னியல்பாகு மெங்களையெவ் வளவின் வைத்தா,

யவ்வளவே யளவாகி யிருக்கை யெங்க-
ளளவாகு முன்பெருமை யறிவா ரியாரே. 9

கடம்படுமிவ் வுடம்பானேங் கரண மானேங்-
கண்டிருந்த கரியானேங் காட்சி தீர்ந்த,
திடம்படுபே ருணர்வானே மெல்லா மானேந்-
திருவிளையாட் டிருக்கின்ற செயலி தென்னே.

அஞ்ஞான மென்னவுமங் கதனு லாய-
வனேகபவ மென்னவுமவ் வயர்வு தீர்ந்த,
மெஞ்ஞான மென்னவுநின் றெருநீ தானே-
விளையாட ரேற்றுவித்த விரகீ தென்னே. 11

ஒழியாதபரவொளியா யோங்குசொருபாநந்தன்,
வழியானசெயலுறுதி வாழ்வன்றேவாழ்வாதல்.

---

## 25. திரு முடி சூட்டல்.

அடங்காமற் புலனுருக வடியிணையே வெளி யான, திடங்காணல் கண்டிருக்குந் தெளி வன்றே தெளிவாதல். 1

தோன்றும்வினை வழியொழியத் தோன்றாத பொருடோன்றிச், சான்றதுவே தானாகுந் தற்சிவமாய் நிறைந்ததுவே. 2

எல்லை யில்பவ வேலை வீரனெ றிந்த வாண்மைய றிந்தெமாற், சொல்ல வில்லினி வல்ல வாரடி தொழுகை யென்றிவர் தொழுவரே. 3

வீர ஞானவி னோத ஞண்மைவி ளம்பு வார்கள்வி ளம்பவத், தீர ஞர்தமை யாளு நாயகர் செம்பொன் மெல்லடி சேரவே. 4

ஞாந சக்கிர மென்று நீர்ந டாத்து கென்று நல்லதா, ளான ரத்ந முடிக விக்க வருளி ஞனிவ் வண்ணலே. 5

ஞாந வானைத் தாள்கள் சூடி நாயன் மார்க டாமெலா. மான வான வதிச யங்க ளியாவர் கூற லாகுமே, 6

ஒழிவற்ற தன்சோதி யுருவத்தை நம்பா-
லுள்ளங்கை நெல்லிப்ப ழம்போல வுடையான்,

மொழிவுற்ற விரகேயெ ஞுநின்று மொழிவார்-
முன்னேனென்ம லர்ப்பாத முடிமீது கொள்வார்.

தன்செய்ய திருமேனி யேயன்றி வேறோர்-
தானென்றி லாவண்ண மெந்தம்பி ரானு,
ரென்செய்த வாறேவி தென்னென்று மொழிவா
ரென்னேயி தென்னேயி தென்னேயிதென்பார்,

பொருளேது மிவரன்றி வேறில்லை யென்பார்-
போதங்கி டீர்செய்ய பொன்மேனி யென்பா,
ரருளேகி டீர்வந்த திருமேனி யென்பா-
ரளவாவ தேயிந்த வருளென்று மொழிவார்.

பொய்யோடு மெய்யேது மில்லாத பெருமான்-
புவநிக்க ணெம்மைப்பு குந்தாள விதுவு,
மையோவொ ரளவாவ தேயென்று மொழிவா-
ரருளோவி தருளோவி தருளோவி தென்பார்.

எண்ணுத பெருவாழ்வெ மக்காய பெருமா-
னெழுதப்ப டாமேனி யிதுகாண வெங்குங்,
கண்ணுன திலையேயெ மக்கென்று மொழிவார்-
கண்ணல்ல காணுத கண்ணென்று ரைப்பார்,

ஏயாத வெண்மையாளு பெருமானை யென்னே-
யிரும்போகம் முடல்கொண்டெவ் விடமெங்கு
மெங்கும்,
வாயாய்வ ழுத்தாதி ராகின்ற தென்பார்-
மலர்ப்பாத மீதுள்ள மாலாகி வீழ்வார். 12

அருகேசெ லச்செல்லு வாரஞ்சி நிற்பா-
ரஞ்சாது சென்ருலு மெஞ்சாது புல்லற்,
கொருகோடி கையில்லை யேயென்று மொழிவா-
ரொன்ருலு மாராது காணென்று ரைப்பார் 13

அன்னேயங் கவர்கள்செய லென்னு லிங்கொன்-
றறையுமள விலகண்டே யறியி னல்லா,
லின்னேதங் குறைக்சூலங் கழித்தா ரென்ன-
விக்கால மென்னையென வியம்ப லுற்றேே. 14

செய்தருளும் படிக்கிதுவு மன்றே தீர்க்கை-
தேசிகனுக் கொருபொருளோ திரித்தல் பின்
முய்தரவங் தருளுகழ லுவந்து வாழ்த்தி- [னு,
யுடம்பெடுத்த பயன்சிலநா ளுறுதற் கன்ருே.

முழுந்தியவன்பினர்மலர்த்தாண் முடிமேற்சூட-
மூவர்களுங் தேவர்களு முழுதும் போற்ற,

வெழுந்தருளி யிருந்தனனிங் கிறைவன் செய்த-
வியல்பிதுவென் றிறைவிபதத் திறைஞ்ச
[லுற்றே. 16

எனக்கினிய சொருபாநந் தனேயெங் கோனே-
யேத்தியவன் புகழினேயே யியம்பா நின்ற,
வுனக்கினியென் செய்வனென விறைவியன்போ
டுச்சியையமோந் திடுந்தழுவு முவகை யுற்றே, 17

உடையசோ தியிலொர்மா சறவிளு நிலனிலோ-
ருருவமா யருவமா சொருபனு ருடையசீ,
ரிடையரு துருகியோ திடுதலே யுரியையா-
மிதனைநீ பெறுகெனு விறைவிதா னருளியே.

---

## 26 களங் காட்டல்.

இலகுநா யகிதனு ரருளதாம் விழியினு-
லிறைவனுர் செயலிதா மெனவினே யருளவே,
யலகைபோ யடையயோ கிநிகளா யருளினு-
ரடிதொழா வமர்செய்மா களமெலா மளவியே,

ஓராத மயலார்விட் டொழிந்த போதே-
யுடனுகும் பிணிதன்னை யொழியாய்ச் சுற்றம்,
பேராத துவந்துவங்கள் போதல் துக்கம்- [மின்,
பிணம்போகப் போமாபோற் காண்மின் காண்

தொத்தறவே மநந்துஞ்சப் புலன்க ளைந்துந்-
துஞ்சியவா நஞ்சுமிழ்வா யஞ்சுஞ் சேரக்.
கத்தறவே யடிக்கழுத்தை யரிய மாய்ந்த- [மின்.
கறையனற்கட்செவியொத்தல் காண்மின் காண்

மைப்படியு நறுங்குஞ்சி மாயை மாய-
மாய்ந்தபடி வையமெரி மருவ வேரிற்,
கப்புடனுங் கிளையுடனும் மரநே ராகக். [மின்;
கரிசறப்பட் டமையொத்தல் காண்மின் காண்

அவிழாத பிணியாக்கை யுடைய வஞ்ஞ-
னழிந்தபடி தான்சாவ வுலக மெல்லாங்,
கவிழாதோ வென்னுமுரை யார்க்கு மேற்கக்-
கரமணிபோற்காட்டியவாகாண்மின்காண்மின்

நெய்விட்ட கருங்குழலார் தம்பால் வைத்த-
நெஞ்சொழிந்தா ரைம்புலன்சே ரின்ப நேராக்,

கைவிட்டா ரொழியாவா நந்த போகக்-
காமுகராய் முடிந்தபடி காண்மின் காண்மின்.

இணைப்பரிய பேரின்பந் தன்னின் மூழ்கி-
இன்புறப்பட் டெவ்விடத்து மெக்காலத்துங்,
கணப்பொழுது மின்பமிலா வுடம்ப ரின்பங்-
கைவிடனீத் தமைகாட்டல் காண்மின் காண்
மின்.

செற்றவர்க டம்முடனுஞ் செறுதற்கென் றுஞ்-
சிந்தைசெயுந் திறன்மறந்து சிறப்பே செய்யக்,
கற்றவர்தம் முடனுனை பிறப்பை யெல்லாங்-
கரிசறுத்த பெரியசினங் காண்மின் காண்மின்.

பழிப்பாகி யொருகாலு மிதுகொண்டு கௌ
பயனற்ற பொருள் விட்டெலா, [வுற்ற-
மழித்தாலு மழியாத பொருள்பேணி யிவருற்ற-
வாராமை காண்மின்களோ. 9

ஓராக மேபண்டு வடிவென்றி ருந்தார்க-
ளுணர்வற்று மொழிவுற்றதோ,
நேராக வுந்தங்கள் வடிவான திவர்நேதி-
நேதித்தல் காண்மின்களோ, 10

---

## 27. கூ முடுவார்

இந்தக்க ளம்பட்ட பாட்டுக்குளே ரொப்பி டத்தேடி டாதீசனுர், சந்திக்க விதுபட்ட தொப் பப்பெ ருங்கூழ்ச மைப்பாரை யழைமின் களோ 1

சாந்தீ யுளவரு தாந்தீ வந்தடி தந்தார் திரு வரு டன்ஞேடே, மாந்தீ நல்லறி மாலாய் கூழட வாரீர் கூழட வாரீரே. 2

மேலா ரொடுமிகு முறவீ தீவினே மிகுவா ரொடுவிடு துறவீயம், மாலா ரொடுவரு கருணைய் கூழட வாரீர் கூழட வாரீரே. 3

பொறையே மிகவரு நிறைவீ புகழ்புனே பொன்னீ யருளினே யுன்னீயக், குறையா நிறை வுறு திருவீ கூழட வாரீர் கூழட வாரீரே. 4

முடிவே திதுவரு முதலே தெனவொரு மொழியா லளவிட முடியாத, வடிவே யடைவ தொர் மதியே கூழட வாரீர் கூழட வாரீரே. 5

பணியே சூடிய வணியே பாடிய பத்தி
கூடிய சித்திநிர்க், குணியே கோமள மொழியே
கூழட வாரீர் கூழட வாரீரே. 6

தன்போ லெவரொடு மன்பே விளைவதொர்
தாயே பவமெனு மாயாவிவ், வன்பே கெடவரு
மன்பே கூழட வாரீர் கூழட வாரீரே. 7

ஒருமை யெனமுன் வகுத்த சித்ர மாகிய-
வுலக வரலை யமைத்து லக்கை யாகவிவ்-
வுலோகர் பழுவை யொடித்தொடித்து நீளெயி-
றுதிர்செய் தரிசி புடைத்தி டித்து மேலவர்,
பெருமை முடியை யடுப்பு வைத்து மேலுறு-
பிணிசெ யுடல்க டத்து லைச்செய் தாருயிர்-
பெரிய விருளை நெரித்தெ ரிப்ப தாய்வினைப்-
பிதிர்செய் தமிர்த மினிச்ச மைக்க வாருமே. 8

பரவை யுலகம னைத்து முற்றெ மாருயிர்-
படர்செ யுடல மெடுத்த ழித்து நோயொடு-
பகலொ டிரவு பசித்தி ளைத்தி டாவகை-
பவமெ னிருளை யறுத்து தித்த சோதிசெய்,

யரவ மறைகள் சிரத்து நிர்த்த மாடிய-
வரிய சொருப னெனக்கு வைப்பெ ருருயி-
ரமல ரடியர் சிரத்து வைத்த மாமணி-
யடிகள் பரவி யுலக்கை குத்த வாருமே. 9

---

## 28. சும் முலக்கை.

அருவரையா யிரஞ்சிரங்கொண் டருமறைக ளறியாத, சொருபரையாங் கண்டனமே சும்மே லோ சும்முலக்காய். 1

மாயவடி வளவாகி மதியிலியா யுழல்வேற் குத், தூயவடி சூட்டினர்காண் சும்மேலோ சும்முலக்காய். 2

பின்னமொழி வகைபுரிந்தெம் பெருங்கரு ணைப் பெருமானுர், சொன்னமொழி யொன்றே காண் சும்மேலோ சும்முலக்காய். 3

நம்மாலே காண்கின்ற நாமும்போய் நாமா கிச், சும்மாவே யிருந்தனங்காண் சும்மேலோ சும்முலக்காய். 4

வான்றுடங்கு முலகுதனின் மன்னுசரா சரங்களெலாந். தோன்றுமிடன் பிறிதுண்டோ சும்மேலோ சும்முலக்காய். 5

உலகாகி யுயிராகி யுணர்வாகி யொருபொருளே, துலங்காமை கண்டாயே சும்மேலோ சும்முலக்காய். 6

சாத்திரமென் செயநமக்குத் தர்க்கமய லறுத்தபிரான், தோத்திரமே யமையுமது சும்மேலோ சும்முலக்காய். 7

வல்லவகை பரனருளே வாயார வாழ்த்தாதே, சொல்லுவது பிறிதுண்டோ சும்மேலோ சும்முலக்காய். 8

சத்தமா திகளுமெலாந் தற்சொருப மானபரி, சுத்தமாய் விட்டதுகாண் சும்மேலோ சும்முலக்காய். 9

---

## 29 கூழ் சமைப்பு

மிடையிரு வினைகள் பற்கள் மேவரு மறி யார் பற்கள், அடையவு மிடித்தி ராகி லடங்கவு முலையுட் பெய்யீர். 1

இழைக்கும்வல் வினையெ ரித்திங் கெலும் பெலா முருக்கி யுள்ளங். குழைக்குமெய்ப் பத்தி வந்து குறைவறக் குழைக்கச் * சொல்லீர் 2

செப்பாதே பலவு நின்று சிலுப்பற விருத்தி யின்பங், தப்பாதே பதத்தைப் பார்க்கச் சாந் தியை யிருத்திக் கொள்ளீர். 3

கனித னக்குநிகர் நெக்கு நெஞ்சுகள்-
கரைந்து கன்னலொடு பாலுமொத்,
தினிதி னிப்படிச மைத்த போனகமெ-
டுத்து மெத்தெனவி ருத்துமே. 4

---

* சொல்வீர் - என்றும் பாடம்.

## 30. கூழ் வார்ப்பு.

துண்மை யாரும்வகை மீளு மாளுடைய-
தம்பி ரானரிய தாள்கடா,
முண்மை யாலுரிய வன்ப ரின்புறமு-
ளக்க லங்களைவி ளக்கியே. 1

கடங்க ளோடுமுள மான மெய்ப்பரி-
கலங்க ளோடுமுள வாவிதா,
னடங்க நீயமிர்து செய்க வென்னவரு-
ளையை தானமிர்து செய்யுமே. 2

அணங்கு தன்றிருவு ளப்ர சாதமது-
வடைய வேநிறைய வயிலுவீ,
ருணங்கு கின்றவுட லான பேய்களையு-
முடைய நீரழையு முண்ணவே 3

வெந்த வுடலம் விடும்பரிசு-வீடு வினவி மிகப்
பசித்து, வந்த பேய்க்குப் பசிதீர-வாரீர் மெத்த
வாரீரே. 4

நசித்தே னிந்தக் கணத்துள்ளே நசியா வண்ண நல்குமிகப், பசித்தே னென்று பதைக் கின்ற பதைப்பைத் தணிக்க வாரீரே. 5

எட்டுக் கரும முட்டறச்செய் தெட்டுக் குணத்தோ டெழின்முத்தி, வட்டத் திருக்கப் போமூத்தை வாய்ப்பேய் தனக்கும் வாரீரே. 6

ஒளிதங் கியமா மறையோதி யுள்ள பொருளை யுணராதே, பளிதஞ் சுமந்த கழுதையாம் பன வப் பேய்க்கும் வாரீரே. 7

படித்து மறைகள் பொருள்படுத்திப் பயனி னெட்டிப் பாராதே, வடித்த கிளிபோல் வருமா யாவா தப் பேய்க்கும் வாரீரே. 8

வேதா கமங்கள் சொன்னபொருண் மெய்ம் மை யறிவார் போலிருந்து, பேதா பேதஞ் சாதிக்கு பெரும்பேய் தனக்கும் வாரீரே. 9

சுத்தப் பிரம மதுநிற்கத் தொள்ளைச் செவியி னுணவான, சத்தப் பிரம மென்றுரே துஞ் சளப் பேய் தனக்கும் வாரீரே. 10

பணியப் படுவா ருள்ளிருக்கும் பரதே வதை
யைப் பாராதே, மணியைத் துலக்கிக் கிணுகி
ணென வரும்பேய் தனக்கும் வாரீரே. 11

ஞானம் போலே பலசொல்லி நாடற் கரிய
முத்தியினுந், தானுஞ் சிவனும் பாசமுமென்
சைவப் பேய்க்கும் வாரீரே. 12

துரியா தீதம் பதினுலிற் ரேன்றி யெவர்க்
குந் தோன்ருத, பெரியார் தம்மை நானென்னும்
பிரமப் பேய்க்கும் வாரீரே. 13

வெறுவாய் கொண்டு மென்றயாந விகாரங்
கொண்டு சிலபிதற்றிப், பெறுவா ரன்றி முத்தி
பெறும் பிடகப் பேய்க்கும் வாரீரே. 14

உடலை விடுகை முத்தியென வுரைத்த வுண்
மை யுணராதே, முடலை யுடலை நானென்னு
முழுப்பேய் தனக்கும் வாரீரே. 15

தியக்கந் தீர்வார் நன்முத்தி சேர்வா ரென்
னுந் திறங்கேட்டு, மயக்கஞ் செய்யும் வாமப்
பேய் வாய்க்கே நெருப்பை வாரீரே. 16

அச்சந் ததிக ளெல்லாமா யல்லா திருக்கு
மறிஞரையு, மெச்சந் ததியுந் தமக்கேயென்
றியம்பும் பேய்க்கும் வாரீரே. 17

---

## 31. தோத்திர மாகிய குணலை வாழ்த்து

நின்ம லன்கருணை யாய டங்கிடவு- நெஞ்சி
றந்திடநி னைந்தபின் பொன்ம லர்ந்தவிரு தாளி
னல்லவருள்- புகழு வாருமுள மகிழவே. 1

பாவிடை நூல்படு சிந்தையினிற்- பதைப்பற
வந்தப ராபரனுர், சேவடி தந்தமை பாடீரே-
செய்ய கருணையைப் பாடீரே. 2

மீட்டவி ரகினைப் பாடீரே- விளம்பிய தொன்
றென்று பாடீரே நாட்டவ ருளினைப் பாடீரே-
ஞானவி நோதனைப் பாடீரே. 3

என்னையொ ழித்தமை பாடீரே- யென்னுயி
ருண்டமை பாடீரே, தன்னைய ளித்தமை பாடீ
ரே- தத்துவ நாதனைப் பாடீரே. 4

துன்னிநி றைந்தொழி யாதுநின்ற- சொரு
பா நந்தச் சுடர்வையந், தன்னின டந்தமை
பாடீரே- தானெனை யாண்டமை பாடீரே. 5

ஞானமு ஞேயமு நானுமென்று- நாடிட-
வொன்றின்றி நின்றதுநா, மான முழுநலம்
பாடீரே- யல்லதில் லாதமை பாடீரே, 6

மதியிலி யாவுழல் கின்றநம்மை- மாநுட
னுயவ னுளவந்த, வதிசய மேனிநந் தாடீரே-
யார்த்தெழுந் தார்த்தெழுந் தாடீரே. 7

என்றிவை யேமிகப் பாடிப்பாடி- யெழுந்
துவி ழுந்தெழுந் தாடியாடி, நன்றித ருங்கண
மானதெல்லா நாநாவி தம்பட நட்டமிட்டே. 8

வரவுசெல வுறுபழைய வழியொழியமொழியுங்,
குரவனடி பரவியிடு குணலைபல பலவே. 9

உரைகழிய வுளமழிய வுணர்வழிய வணையுங்,
குரைகழல்கள் பரவியிடு குணலைபல பலவே. 10

மதமதென விழிசொரிய மயிர்புளகம் வரவே,
குதுகுதென வுளமுருகு குணலைபல பலவே. 11

கொடியபவமுடிவுசெய்த குரைகழல்கள்பரவா,
முடியவிவ ரிடுகுணலே மொழியமுடிவிலதே, 12

பிணக்குறு மாறுச மயங்கத்திப்- பேரிருள்
சேர்மநங் கொண்டுநின்று, கணக்கிடு மாறுத
விர்த்தபிரான்- கழலிணே பாடிக் களித்தனரே 13

பாசமல மறவருளு பார்வையான் வாழியே-
பாடுமறை முடிவினட மாடுவான் வாழியே,
வாசமல ரெனமுழுது மேவினுன் வாழியே-
மாகரறி வரியவிரு தாளினுன் வாழியே. 13

கோரமொடு முழுதுமற நூறினுன் வாழியே-
கூறவிர கரியமொழி யோதினுன் வாழியே,
நாசமறு மறிவுருவ மாயினுன் வாழியே-
நாடிலது கழலகிகழ் மேனியான் வர்ழியே. 15

நினேயு மாற தின்றி நின்றி லங்கு சோதி
வாழியே- நேச மோடு மீச னென்ன நெஞ்சி
லாத வஞ்சனு, மெனேயு நீதி யன்ப ரோடு வந்த
நாதன் வாழியே· யென்னே யாள வந்த கோல
மென்றும் வாழி வாழியே, 16

பந்த பாசம் வேரொடும்பறித்துவீழ வென்முடி,
தந்தபாதம் வாழியேசமைமந்தபார்வை வாழியே.

வைத்த வைத்தகண ழித்தவடி வாழியே-
வைப்பி லாதகண ளித்தவடி வாழியே,
யெத்தி முத்தியரு ளீசனடி வாழியே-
யென்னை யாளுடைய வெந்தையடி வாழியே.

சுத்தம றைதொடர்ந்த தாளினுன் வாழியே-
துற்றுவரும் பெரும்பவ நாசனீ வாழியே,
தத்துவ நெறிதிறந்த சேவகன் வாழியே-
தர்க்கச மயசண்ட மாருதன் வாழியே. 19

வாழிதங் குருபரன் மெய்ப்பத்த ரானவர்-
வாழிமறை துணிபொருள் சித்தித்து வாழ்பவர்,
வாழிபர மாநந்தந் தித்திக்க வாழ்பவர்-
வாழிசொரு பாநந்தன் தத்வப்ர காசனே. 20

ஆகப் பிரிவு 31-க்கு செய்யுள் 494.

அஞ்ஞ வதைப் பரணி முற்றுப் பெற்றது.

சர்வஞ் சிந்மயம்.

---

## வெண்பா.

தரணிபுகழ் தத்துவனுர் தாமுரைத்த ஞாநப்,
பரணிதனைக் கட்டவிழ்த்துப் பார்த்தாற்- கரண
சேர்ந்துமண வாத சிவமணமே பூரித்த.[முடன்,
சாந்தமண நாறுமே தான்.

---

## குரு ஸ்துதி.

பாசமனைத்தையுந் தனித்தனிப் பரிந்திட நீக்கி
நேச மாகிய வறிவுரு நீயெனக் காட்டிப்
பேசு மேழ்வகைப் பிறப்புனக் கிலையெனப்
பேசித்
தூசு நீக்கிய சுயஞ்சிதா காசனைத் தொழுவாம்.

---

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 4 | 5 | வகையா | வகையாகி |
| 13 | 12 | பொருத்த | பெருத்த |
| 18 | 3 | ளவினற் | ளவிற் |
| 21 | 12 | நிகழ்வறு | நிகழ்வுறு |
| 42 | 7 | ஜயப்பா | ஐயப்பா |
| ,, | ,, | ரஞ்ஞுழிந் | ரஞ்ஞனழிந் |
| ,, | 11 | மிப்யத்துத் | மிப்பத்துத் |
| 48 | 6 | யரையுங் | யறையுங் |
| ,, | 7 | ஞரந | ஞாந |
| 53 | 8 | பலர்களைக் | பவர்களைக் |
| 57 | 8 | கேட்டருளிய் | கேட்டருளிப் |
| 62 | 17 | விளளம்பிய | விளம்பிய |
| 67 | 17 | லடிவற்ற | வடிவற்ற |
| 71 | 10 | ராசான் | ராசன் |
| ,, | 17 | சுண்டளவினுன் | கண்டளவினுன் |
| 73 | 1 | வெறிவெங்சு | வெறிவெங்க |
| ,, | 4 | ரங்கெரருவ | ரங்கொகுவ |
| ,, | ,, | ரொழிவரச் | ரொழிவறச் |
| ,, | 17 | சுற்றவகு | கற்றவரு |
| 75 | 8 | உருபசு | உருபக |
| 84 | 8 | விமுந்துழலும் | விழுந்துழலும். |

## கைவல்ய நவநீத பத சார உரை.

கோவிலூர் மடம், துறவு ஆண்டவர் என்னும் அருணாசல ஞான தேசிக ஸ்வாமிகள் இற்றைக்கு 130 வருஷங்கட்கு முன் **கைவல்ய நவநீதம்** என்னும் நூலுக்கு பத சாரம் எனப் பெயர் வைத்து, அவதாரிகை, பத சாரம், தாத்பரியம், விசேஷம், என நான்கு பிரிவாக உரை எழுதியிருக்கின்றார்கள்.

அது இப்பொழுது அச்சாகி யிருக்கிறது. அதனொடு பத உரையும் எழுதிச் சேர்த்து அச்சிட்டு பைண்டு செய்திருக்கின்றோம்.

**விலை ரூ. 3 – 50**

## கைவல்ய நவநீதம், பத உரையும், ஆராய்ச்சிகளும்.

இது, திருப்பூவணம் **ஸ்ரீ காசிகாநந்த** ஞானாச்சார்ய ஸ்வாமிகள் '**கைவல்ய நவநீதத்துக்குப்**' பத உரை எழுதியும், இதற்கு முன், பத்து உரைகாரரும், விளக்கி எழுதாத செய்யுட்கட்கும், விரோத மாக உரை எழுதிய செய்யுட்கட்கும், ஆராய்ச்சி செய்து, அவற்றை, "ஆராய்ச்சிகளும்" என்று பெயர் வைத்து உரை எழுதியும், அச்சிட்டு இருக்கிறார்கள்.

**இதன் விலை ரூ. 1 – 50.**

உ

ஸ்ரீபாரதீ தீர்த்த வித்தியாரண்ய
சுவாமிக ளவர்கள் அருளிச் செய்த

# பஞ்ச தசப் பிரகரணம் மூலம்.

---

இது
முன் பத்துப் பிரகரணம்,
ஸ்ரீகோவி லூர் திற வாண்டவ ரென்னும்
ஸ்ரீ அருணாசல ஞாந தேசிகரின்
பாத சேகர ரான,
ஸ்ரீ நித்யாநந்த சுவாமிகளாலும்,
பின் ஐந்து பிரகரணம்,
திருக் கள ராண்டவ ரென்னும்
ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிகரின்
பாத சேகர ரான
ஸ்ரீ சுப்பைய சுவாமிகளாலும்,
மொழி பெயர்க்கப்பட்டு,
ஷை வீர சேகர ஞாந தேசிகரின்
பாத சேகர ரான
திருப் பூ வனம், ஸ்ரீ காசிகாநந்த
ஞாநாச்சார்ய சுவாமிகளால்
பதிப்பிக்கப்பட்டது.

# பஞ்ச தசி

| | | கவி | சுலோகம் |
|---|---|---|---|
| 1 | தத்துவ விவேகம் | 57 | 65 |
| 2 | பஞ்ச பூத விவேகம் | 58 | 109 |
| 3 | பஞ்ச கோச விவேகம் | 21 | 43 |
| 4 | துவித விவேகம் | 34 | 69 |
| 5 | மகா வாக்கிய விவேகம் | 8 | 8 |
| | | ——— | ——— |
| 6 | சித்திர தீபம் | 143 | 390 |
| 7 | திருத்தி தீபம் | 157 | 298 |
| 8 | கூடத்த தீபம் | 25 | 76 |
| 9 | தியாந தீபம் | 74 | 158 |
| 10 | நாடக தீபம் | 9 | 26 |
| | | ——— | ——— |
| 11 | யோக ஆநந்தம் | 60 | 134 |
| 12 | ஆத்ம ஆநந்தம் | 38 | 90 |
| 13 | அத்வைத ஆநந்தம் | 52 | 105 |
| 14 | வித்யா ஆநந்தம் | 32 | 65 |
| 15 | விஷய ஆநந்தம் | 23 | 35 |
| | | ——— | ——— |

ஆகக் கவி 795 ஆகச் சுலோகம் 1671

# பாயிரம்.

அநகநிர வயவபர வமலவுணர் வுறவே,
யுனவரிய பகுதியதி னுருமுழுது மறவே,
மநநிறைய வமுதசுக மகிழ்வுதரு மொளிசேர்,
கநகசபை நடநமிடு கடவுளடி பணிவாம். 1

தேசமர் கழனிநற் றெய்வ மாநகர்
வாசநன் னேசன்சிங் மயன்வெம் வன்பவ
மோசக னெனப்பகர் முத்தி ராமலிங்
கேசனை யிருதயத் திருத்தி யேத்துவாம். 2

மாசிலா மணிசிவ மாயை தீரவி
நாசிமா தகனரு ளீச லேசனுங்
காசினி யுயவரு கருணை யங்கடற்
தேசிகேந் திரன்சரண் சிந்தை செய்குவாம். 3

தூண்டருஞ் சுடரே யாருஞ் சுகமுற மணிமன் றுற்றுத், தாண்டவம் புரிந்தெம் போல்வார் தளர்வற மேனி சாத்தி, யீண்டன ணைந் தெனையு மாட்கொண் டெனதகங் கோயில் கொண்ட, வாண்டவ னென்று மன்னி யருளின னிதனை யம்மா, 4



ஓம் தத்ஸத்

பரப் பிரஹ்மணே நம:

# பஞ்ச தசி

# மூலம்.

---

## முதலாவது

## தத்துவ விவேகம்.

திருவளர் சங்கரா நந்த தேசிகன்
பெருகுமா மோகமாம் பெருங்க ராத்திரினப்
பருகியின் பருளலே பரம வேலையா
மருமலி பாததா மரைவ ணங்குவாம். 1

அப்பதத் துவந்துவ வஞ்செந் தாமரை
யொப்பறு சேவையா லொளிரு நெஞ்சினர்க்
கிப்புவி தனிலுணர் வெளிது தித்திட
மெய்ப்புறு தத்துவ விவேகஞ் சாற்றுகேம். 2

ஒலியொடு ருதியா மோதும் வேத்திய
மலிதரு நனவிடை வடிவின் வேறதா
நலிவுசெய் யவற்றின்வே ருகு ஞாநந்தான்
பொலிதலி னேகமாய் வேறு பூணுமோ. 3

இன்னதாங் கனவினு மீண்டு வேத்திய
மன்னுரு நனவிடை மன்னி நின்றிடு
மன்னதாற் பேதமா மவற்றின் வேதநம்
பின்னமன் றேகமாய்ப் பிறங்கும் பெற்றியால். 4

துயின்றெழுந் தோனுக்குச் சுழுத்தி காலையி
லியைந்திடுந் தமவறி வெண்ண மாமதூஉம்
பயன்றரு மநுபவம் பற்றி வந்ததா
லயர்தரு தமமப்போ தறியப் பட்டதே. 5

அறிவது விடயத்தி னயல்மற் றன்றுகாண்,
பிறவறி வினிற்கனுப் பிறங்கும் போதம்போன்,
முறையிதி னறிவுமுப் புரத்து மேகமிங்,
நெறிபிற ழாதயற் றிநத்து நிற்குமால். 6

பேதமாய்ச் சென்றதும் பின்னர்ச் சார்வதா
மாதமாண் டுகமொடு மருவு கற்பத்துஞ்
சாதலும் பிறத்தலுந் தணந்த ஞாநமொன்
ருதலி னிதுசொய மாகுஞ் சோதியே. 7

ஓதுமாங் மாவிதா முவப்பி னுக்கிட
மாதலாற் பரசுக மாங்ம வத்துவிற்
சாதலோய்ங் திடநிதங் தரித்தல் வேண்டுமென்
றேதமாய்ங் திடுமுவப் பிலங்கு கின்றதால். 8

நேயந்தற் பொருட்டய னேர்வ தாமல
வேயதாங் மாவிடை யிதர வேதுவோ
வாயதா லதுபர மாகு மாகையாற்
றூயவாங் மாப்பர சுகசொ ரூபனே. 9

இவ்வகை மெய்யறி வெழிலின் பாமுயி
ரெவ்வமி லுத்தியா லிலகு தற்பரம்
அவ்வகை யவ்விரு வோர்க்கு மைக்கிய
மெய்வகை மறைமுடி விளம்பு கின்றதே. 10

விளங்குரு தெனிலிலை மிகுதி நேயமும்
விளங்குறு மெனிலிலை விடய வேட்கையும்
விளங்கினு மாதலான் விளங்கு ருததாம்
விளங்குமாங் மாப்பர மேனி யின்பமே. 11

ஓதுவோர் குழுவிடை யுற்று நின்றிடுங்
காதல ஞேதுறு கவின்கொ ளோசைபோன்
மேதக விளங்கினும் விளங்கு ருதுதற்
சோதியின் றடையினுற் சொல்ல லாகுமால். 12

இருப்பது விளங்குவ தென்னற் பாலதாம்,
பொருட்கணத் தகைமையைப் போக்கி மற்ற
விருத்தமா யிருப்பதில் விளங்கு ருதெனத்,[தன்,
தருக்குறச் சநிப்பது தடைய தென்பரால். 13

காதல ஞேதொலி காதுட் கோடலி
னேததற் கநேகரோ டியைவுற் ஞேதுத
லோதுமிங் கதிமயக் குதித்தற் கேதுவா
மாதியி லவித்தையே யாகு மென்பவே, 14

பிரமசிற் சுகநிழற் பெற்று முக்குண
வுருவமாம் பகுதிய துற்ற சத்துவ
நிருமல மலிநத்தி னேரு மாயையு
மருவவித் தையுமென வகையி ரண்டரோ. 15

மாயைவிம் பித்தவன் வயஞ்செய் தேயதை
யேயமுற் றறிவனு மீசன் ருனுமாந்
தேயவித் தையின்வயன் சீவன் மற்றதற்
காயவேற் றுமையினு லநேக னுகுமே. 16

ஆமது காரண வாக்கை மாநிதா
னேமநற் பிராஞனு மிவர்கட் கீசனுற்
ருமதப் பகுதியிற் சாரப் போகம்விண்
போமருத் தநலறல் பூமி வந்தவே. 17

அவைகளின் சத்துவத் தைந்து கூற்றிஞற்
செவிதுவக் கக்கியுஞ் சிகுவை மூக்கெனு
மிவைமுறை யைந்துஞா னேந்தி யங்களாங்
கவினவை யனேத்திஞட் கரணம் வந்ததே. 18

விருந்திபே தத்திரு விதம தாமந
முருச்சமு சயமதி யுருவ நிச்சய
மரத்தமா மிரசதத் தைந்து கூற்றிஞற்
பரித்தவாய் கைபதம் பாயு குய்பமாம். 19

சொனவவை யனேத்திஞற் றுவள்பி
ராணனும், பிநமுறு விருத்தியாற் பிறழ்பி
ராணனு, மநகவ பாநனு மவிர்ச மாநனும்,
வினேசெயு தாநனும் வியாநன் ருனுமாம். 20

புத்திகன் மேந்தியம் புகல்பி ராணனேந்
தத்தொடு மநமதி யாக்கை சூக்குமஞ்
சொத்திடு மிலிங்கமிச் சூக்க மாநத்தா
னுத்தமப் பிராஞ்ஞனுண் டொளிருந் தைசதன்.

இரணிய கருப்பனு மீசன் மற்றிவன்,
வரைவறு சமட்டியா மன்னுயிர் யாவையு,
மொருமையாத் தானென வுணர்த லின்மை
யால், விரிவுறு சீவர்கள் வியட்டி யென்பவே, 22

நுகர்வ மராலய நுகர்வுந் தோற்றிடப்,
பகவன்விண் முதற்பஞ்சீ கரணம் பண்ணி
னுன், வகிர்ந்திரண் டொன்றுநால் வகைசெய்
தாதியைத், தகவித ரங்களிற் சாத்தவவ்
வைந்தாம். 23

புகலவற் றண்டமும் புவந போக்கிய
நுகர்வமர் தநுவுமா நுவலிவ் வாக்கையிற்
றகவிராட் டாகும்பொன் கருப்பன் றைசத
னகமுறு விசுவன்றே வாதி யாவனுல். 24

அவர்பகி ருணர்வின ராகி வேறெளிர்
எவமறு தத்துவ போத மில்லராய்க்
கவர்தரு நுகர்வுறக் கரும மாற்றுவர்
தவறறப் பயனையும் தாம்பு சிப்பரால். 25

நதியுறு பழுச்சுழி தோறு நண்ணியே
கதிபெரு தெனவவர் கடுகி யோர்பவத்
திதியொழிந் தோர்பவத் திதியை நண்ணியே
யதிகதுக் கந்தனை யடைவ ரென்பவே. 26

புண்ணிய முதிர்ச்சியாற் புகன்ற வப்புழு
தண்ணளிச் செல்வராற் சார்ந்து தீரமேல்

வண்ணமென் றளிர்விரி மரத்தி னிழலை
நண்ணியே தளர்ச்சிபோய் நன்கு மேவுமால். 27

வஞ்சமி றத்துவ ஞாந மன்னிய
தஞ்சமாங் குருவுப தேசஞ் சர்ர்ந்துபின்
பஞ்சகோ சங்களின் பகர்வி வேகத்தா
லெஞ்சலில் சுகமவ்வா றிசைந்தி ருப்பரால். 28

அந்நமு முயிர்மந மறிவு மாநந்த,
மென்னுமைங் கோசமா மிவற்றி னுன்மறைத்,
தின்னறீர் தன்னுரு வெனச்சொல் லாற்றுமா,
தன்னுரு மறதியாற் சார்வன் வன்பவம். 29

பஞ்சமா பூதத்தாம் பருத்த வாக்கையே
யெஞ்சலி லந்நமா மிலிங்கத் தேய்வுறும்
விஞ்சிரா சதத்தெழு மிகுபி ராணனு
மைஞ்சுங்கன் மேந்திய மமர்பி ராணமாம். 30

சத்துவத் தெழும்புத்தீந் திரியந் தன்னுடன்,
செத்துரு மநமுமே சேர்ம நோமயம்,
புத்திநிச் சயவுருப் போந்த வற்றொடே,
சுத்தவிஞ் ஞாநமாச் சொல்லுங் கோசமாம். 31

ஓதுகா ரணத்துறு மொளிசெய் சத்துவ,
மோதமுன் விருத்தியு மொழியு மாநந்தஞ்,

சேதந வாற்றுமா செறிந்தக் கோசத்தோ
டேதவம் மயமுமா யிருப்ப னென்பவே. 32

மன்னுடம் பாடெதிர் மறையி னுலுமாந்,
துன்னுமைங் கோசத்தின் ருெடர்வி வேகத்
தாற், றன்னதாங் மாவினைத் தானு ணர்ந்து
மேற், பிங்கமில் லாப்பரப் பிரம மாகுமால். 33

கனவினிற் றூலமெய் கண்ணு ருதெனுந்
தனதுரு வொளிர்வது தனது டம்படா
மநகமாங் தன்னுரு வவிர்வ தென்னினும்
பிநவுட லெதிர்மறை பிறங்கி டாமையே. 34

சூக்கமெய் மறையினுஞ் சுழுத்தி யிற்றன
தாக்கமாம் திகழ்வுடம் பாட தாகுமா
னீக்கமா மெதிர்மறை நிகழி னுஞ்சொய
மூக்கமாஞ் சூக்கமெய் யொளிர்வு ருமையே. 35

உயிர்மந முணர்வென வோது கோசமும்
பயிலுமத் தேர்ச்சியார் பகுக்கப் பட்டன
குயிலவை யாண்டன்றே குணவ வத்தையின்
வியனுறு பேதத்தின் வேறு பட்டன. 36

மறையினுஞ் சுழுத்திதா மனுஞ்ச மாதியி
னிறைவுறு மாற்றுமா நிகழ்வ தங்வய

முறைவெதி ரேகந்தா ளுனிர்வ தாகினு
மறையுமச் சுழுத்திதோன் ருமை யாகுமே. 37

முஞ்சத்திற் பசும்புற்போன் மொழிநல்
லுத்திகொண், டுஞ்சிடுந் தீரரா லுடல மூன்றி
னின், றெஞ்சலி லாற்றுமா வெடுக்கப்
பட்டிடின், விஞ்சிடு பிரமமாய் விளங்கு றுஞ்
சொயம். 38

அத்தகை பராபர வாற்று மாக்களி
னுத்தியா லுட்கொளு மொருமை மற்றினித்
தத்துவ மசிமுதற் சாற்றும் வாக்கிய
வத்துவாம் பாகங்கண் மனுந்தி யாகத்தால் 39

வத்துதா மதகுண மாயை தன்னையே
யொத்துபா தாநமா முலகி னுக்கெலாஞ்
சுத்தசத் துவமதைத் துனிநி மித்தமாந்
தத்தெனும் பதமது சாற்று றும்பரம். 40

இலகுறு மப்பரப் பிரம மெப்பொழு
தலகறு காமகன் மாதி நிந்தைசேர்
மலிநசத் துவமதை மருவு மப்பொழு
துலேவறுந் தொம்பத முரைக்கும் வத்துவாம்.

மும்மையாய்த் தனித்தனி முழுவி ரோதியா,
மைம்மல மகற்றியே வயங்க கண்டமாந்,
தம்மயச் சச்சிதா நந்த தற்பரஞ்,
செம்மைமா வாக்கியஞ் செப்பும் வத்துவாம்.

மன்னிய சோயமாம் வாக்கி யங்களிற்
பன்னிய வதனிதன் பகைத்தி றத்திறற்
றுன்னிய பாகங்க டுறத்த லாலொரு
தன்னிய லிலக்கிய மாமித் தன்மைபோல். 43

பரனொடு சீவர்க்கும் பகரு பாதியா,
விரவுமா யையுமவித் தையையும் விட்டுமேற்,
றரமறு மகண்டமாஞ் சச்சி தாநந்தந்,
திரமகா வாக்கியஞ் செப்பும் வத்துவாம். 44

இலக்கியஞ் சவிகற்ப மாகு மென்னிலோ
விலக்கியந் தனக்கசத் தியம்வந் தெய்துமே
யிலக்கிய நிருவிகற் பகம தென்னிலோ
விலக்கியங் கண்டில மினியுண் டாகுமோ. 45

சொனவிகற் பகநிரு விகற்பந் தோய்ந்
ததோ, மனுஞ்சவி கற்பகம் வாய்ந்த தாங்

கொலோ, முனமதேற் பொய்ம்மையா மொழி
மற் ருமெனீ, லநவத்தை யாங்மவா சிரய
மாதியாம். 46

இதுகுணங் கிரியையு மியைந்த சாதியென்
பதுந்திர வியமுஞ்சம் பந்த மைந்தினும்
பொதுவத னலிங்குப் புகலு மீதெலா
மெதுவடி வதனிடை யிருக்கு மென்கவே. 47

நெடுவி கற்பமு மதனிகட் பூபாவமுந்,
தொடவரும் பொருட்கணே சொலும்வி கற்
பிதந், தடையகற் றிலக்கியத் தன்மை சம்பந்த,
மடியெலாஞ் சொருபத்தி லத்தி யாசமே, 48

இத்திறம் வாக்கியத் திதன ருத்தத்தின்
சத்தியத் தேர்ச்சியே சவண மாகுமா
லுத்தியாற் கேட்டவத் துடைய சிந்தநம்
வத்தியா நிற்குமோர் மநந மாகுமே. 49

அவ்விரண் டானுமே யய்ய மின்றிய,
செவ்விய பொருளிலே நிதித்த சித்தத்தின்,
றிவ்விய வொருமைத்தாய்த் திகழுஞ் சிந்
தையே, தவ்விகழ் நிதித்தியா சநமென்
றேதுப, 50

நினைபவ நினைவையு நெறியி னீக்கியே,
யுனவுரித் தொன்றையே யுணரு நெஞ்சகம்;
புனைதரு நிவாததீ பத்தைப் போலுமே, தனை
நிகர்த் தொளிர்வது சமாதி யென்பரால். 51

தனையுணர் விருத்தியத் தருணந் தோன்
றுரு, தெனினுமே லெழுந்தவற் கெழுங்
க ருத்தினு, லனுமித மாமவற் ருக்க முன்னல,
முனுஞ்சமற் காரமோ டுறைத லாலெழும். 52

எத்தகைத் தாம்விளக் கென்ப தாதியாற்
பத்தனுக் கிதைமிகப் பகவ னேதினு
னித்தினுற் சஞ்சித கருமம் யாவும்போ
முத்தமச் சுத்தமாந் த்ரும மோங்குமே. 53

பரிமித மின்றியிப் பகர்ச மாதிதான்
சொரிதலிற் றருமமாஞ் சுதைநற் ருரைகள்
விரிதரு தருமமா மேகமா மென்பா
ருரியதாம் யோகமிக் குணர்ந்து ளோர்களே 54

சொல்லிது வாதனைத் தொகுதி மாயமாய்த்
தில்லெனக் கருமவே ரீர்க்க வாக்கிய
மல்லறீர்ந் தன்றுள தங்கை நெல்லிபோ
னல்லப ரோட்சஞா நத்தை நல்குமே. 55

தேசிகன், மொழிவரு சிவநற் போதமே
மாசிகி யெனமதி மறமெ லாஞ்சுடு
மாசிகழ் தன்மய வறிவஞ் ஞாநமா
மாசிரு ணாறிடு மதியப் பாநுவாம். 56

இப்படித் தத்து வத்தி னெழிலுறு விவேகஞ் செய்தே, யொப்பறு விதிதப் பாம லுளத்தினைத் திரம தாக்கி, வெப்பமை பவபந் தத்தை விடுத்துள ளுகி மேலாஞ், செப்பரும் பதத்தைப் பூமான் சீக்கிரஞ் சேர்வ னன்றே. 57

**முத லாவது**

**தத்துவ விவேக முற்றிற்று.**

---

## இரண்டாவது

## பஞ்ச பூத விவேகம்.

---

சத்தொடத் துவித மென்னச் சாற்றுறு பொருளெம் பூத, வுத்தம விவேகந் தன்னு லுணர்வுற வெளிய தாமற், றித்திறு லதன்வி வேக மியம்புகே மிதன்கு ணங்கள், சத்தமூ றுருவத் தோடு தகுசுவை கந்த மாமே. 1

ஒன்றிரண் டொருமூன் றோர்நான் கோ ரைந்து குணம்வா னுதி. துன்றிடு நெறியே வானிற் றெரியெதி ரொலியாங் காற்றின், றன்றிறம் வீசி யோசை தகுகுளிர் கொதிப்பி லூறும், வன்றெரி புகுபு கென்னும் வங்கியின் வெம்மை காந்தி. 2

செலஞ்சுலு சுலுவென் றோசை சீதலம் வெண்மை தியம், நிலம்கட கடவென் றோசை நேர்தரு கடின மூறே, பலவுரு நீல மாதி பகர் சுவை மதுர முன்னுங், குலவுறு மிருமைக் கந்தங் குணமிவை வகுத்து ரைத்தாம். 3

சோத்திரந் துவக்கே சட்சு சொற்றிடுஞ்
சிகுவை கிராணம், பூத்தவிந் திரிய மைந்தாம்
புகுமிடங் காதே யாதி, யேத்தசத் தாதி காணு
மிதுமுறை சூக்கு மத்தாற் கோத்தகா ரியத்
தான் மேயங் குணம்பகிர் முகமே யாதல், 4

சிரவமே புதைக்கி ஞேர்காற் செடரவக்
கிங்பி ராணன் மருவக வொலிநீ ரங்கமாந்திடி
னுண்ணி னூறு, மிருவிழி மூடி னுள்ளா ரிருளு
முக் காரஞ் செய்யிற், றெறிதலிற் சுவையே
கந்தம் பொறிக்ககத் தெரிவு முண்டே, 5

சாற்றுத லீத லேக றள்ளுத லின்பஞ்
செய்த, லாற்றுமைந் தொழிலிவ் வைந்துள்
ளடங்குறு முழவே யாதி, தோற்றுகா ரணமாம்
வாக்குத் தோள்பதம் பாயு பத்தம் போற்று
கன் மேந்தி யங்கள் புகுமிட முகமே யாதி, 6

மநந்தசேந் திரிய கத்தா மனுமித யாம்பு
யத்தே, யினையதுட் கரண மாகு மிந்திரி யங்க
ளின்றித் தனிமையாய்ப் புறத்தெஞ் ஞான்றுஞ்
சார்ந்திடா தாத லாலே, துனினவை புலன்க
டம்மிற் சுபாசுப நாடு மீதே. 7

இதன்குணஞ் சத்து வாதி யிவற்றினுற்
றிரிபா மன்றே வுதயமாஞ் சத்து வத்தி
லுதாரமு நிராசை சாந்தி, முதலவு மிரச தத்தின்
முயற்சியு முலோபங் காமங், கதமுமத் தமத்திற்
சோம்பர் களிப்பதி மயக்க மன்றே. 8

சத்துவங் களினுற் றேன்றுந் தருமமே
பாவ முண்டா மத்திமங் களினு லேதா மதங்
களா லிரண்டு மின்றி, யொத்தவோர் வாளுள்
வாளா வொழியுநா னென்னும் போதன்,
கத்தனென் றுலகி லிங்ஙன் கழறுவ ரெவரு
மாதோ. 9

இலகொலி யாதி வாய்ந்த விவைபௌதிக
மாந் திண்ண. மலகினூ லுத்தி தம்மா லக்கமா
தியுமற் றென்கப், புலன்பதி ஞென்றே டுத்தி
புநிதநூ லிவற்றுற் காணு, முலகம தனைத்து
மீதென் றுரைத்திட நிகழு மன்றே. 10

ஈதெலா முனஞ்சத் தேயா மேகமே
வாத்து வீத, மேதுகொன் ஞமரூப மென்பதா
ருணியின் வாக்காம், பாதவச் சுகத பேதம்
பழமல ரிலையி லாந்தன், சாதிமற் ரொன்ருன்
வேறு சாதிகல் லாதி யாலாம். 11

அப்பரி சுண்மைக் காமுப் பேதமு மடைவி னீக்குந். துப்பம ரயிக்கந் தேற்றந் தொய்தநீக் கமதி வற்ரு, லப்பொருட் குறுப்புண் டென்ன லங்கிச மன்மை யாலே. செப்புறுப் புருப்பே ராகாச் செநித்திடா மையினிப் போதும். 12

பெயருருத் தோற்ற மேயாம் பிறவியா தலினுண் டாமுன், னயனமற் றவற்றுக் கின்ரு மாகையா னிரங்கி சந்தா, னுயருண்மை விசும்பு போலு முண்மையந் தரந்தன் சாதி, யியலுரு விலட்ச ணந்தா னிசைந்திடா மையினு லன்றே, 13

ஒன்றிய நாம ரூப வுபாதிபே தத்தை யன்றி, யின்றுசத் தினுக்கே பேத மில்லது விசாதி யந்தா, னென்றுமுண் டென்னத் தோன்ரு தெதிர்மறை யன்மை யாலே, பின்றபு விசாதி யத்தாற் பேதமெவ் வாரு மன்றே. 14

ஏகமே வாத்தொய் தஞ்சத் தென்பது சித்த மங்கே, மூகரி தசத்தே யாகி முன் னின்ற தெனவன் னித்துச், சாகரத் தாழ்ந்

தோர் கண்க டமிற்கலங் குவரின் னேருண், மாசவி னென்றைக் கேட்டு மாறியின் னதி னின் றஞ்சும். 15

இங்குயர் நிருவி கற்பத் திதரயோ கியர்க்கூங் கச்சங், தங்குமென் றுரைத்தார் கௌடா சாரிய ருயர்ச மாதிச், சங்கம தெளிசோ யார்க்குந் தனிமையா மபயத் தஞ்சு, மங்கயோ கியர்மற் றீதி னதிபய மடைவ ரன்றே. 16

பகவற்பூச் சியநற் பாதர் பரமதிற் பசையி றர்க்க விகலுறு மாத்தி மீக ரிருண்டன ரென்றுரர் வேதச், சிகையினே மூகத் தோவித் தித்தராம் பௌத்த ராங்மா, தகையநு மாநக் கண்ணே சார்ந்துள ராயின் றென்பார். 17

சூநியஞ் சத்தோ டொத்தோ சொன் னின்ற ததுதா னுயோ, சூநியத் தினுக்கி ரண்டுங் தோய்வுரு விரோதந் தன்னுற், சூநியத் தமத்தோ டொன்றுன் சூரியன் றமமு மாகான், சூநியஞ் சத்துங் தெவ்வாஞ் சொன்னின்ற ததுவெவ் வாறே, 18

வானமா திகளி னுமம் வடிவங்கற் பித மாஞ் சத்திற், சூநிய நாம ரூப மற்றெனிற் சுகிநீ நீணு, ளானசன் னும ரூப மற்றெனி னிங்கென் ற்ேறது, தானிரா தார மோகஞ் சார்ந்ததோ ரிடத்துங் காணேம். 19

இருந்தது சத்தெ னுஞ்சொல் லிருமை யேற் றுவித மாகு, மொருமையேற் சொன்ன தோத லொழிகவீ துலகிற் கண்டேம், புரிவது புரிந்தான் வாக்குப் புகன்றன னென்ப தாதி, பரவுவா தனையுற் றேனைப் பார்த்துமெய் யிருந்த தென்னும். 20

காலவா தனைசேர்ந் தோனைக் கருதியே காலா தீதத், தேலவே யெனுமிச் சொல்லா லீண்டுதொய் தமதுண் டென்னேற், சாலவுங் கடாவ லோடுத் தரந்தொய்த மொழியி னேதற். பாலவத் துவிதப் பேச்சிற் பகரவை யிரண்டு மின்றே. 21

எண்டரு மலேவு தோற்றம் பெயரெலா மின்றி யாழ்ந்து, தண்டலி லிருடே சின்றித்

தனித்தவோ ருண்மை நிற்கு, மண்டுரு தவங்கி யாதி யணுவரை நசித்த லாலே, விண்டபு மெனலெவ் வாறு மேதையிற் படுமென் பாயேல், 22

உலகமாத் திரந்திர் வாங முன்மதி தனைச்சார்ந் தாங்கே, யிலகொரு நிரம்ப ரச்சத் தென்மதி சேரா தேனே, புலமுறப் பெறுமவ் வானேற் புகலொளி யிருணித் தெங்கே, யலதுநின் பக்கத் தாமோ வம்பரம் பிரத்தி யக்கம். 23

புநிதமெய்ப் பொருளு மெல்லாம் பொருந்தநிச் சயமாக் கண்டேந், தனிநிலை தனில பாவந் தானிலை யனைய துண்டென், றுனுமுணர் வின்மை யாலே யுண்மையி னுரமு மின்று, மெனினது வேண்டே முண்மை யிலகிநிற் றலின்றற் றுனே. 24

மாமிலா நிலைக்கே சாட்சி மாத்திர மாத லாற்சத், தனை வரு மெளிது சேர வகம்விரி வுறுமுன் சாட்சி, மாநிரா குல மெவ் வாறே மாயையே விரியு முன்னங்,

தனிமையாஞ் சத்தவ் வாறு தானிரா குலமா மன்றே. 25

அதத்துவ மேயாய்க் காரி யத்திரு லறிவ தாமத், திதப்பொருட் சத்தி மாயை செஞ்சுடர்ச் சத்தி போலும், மதத்தது காரி யந்தான் வருமுன முணர்தற் காகா நிதப் பொரு ளலவச் சத்தி நெருப்புத்தன் சத்தி யாமோ. 26

உண்மையின் வேருஞ் சத்திக் குருவம தேது சொல்வா. யெண்மையிற் சூநி யத்தி னியலெனிற் சூநி யந்தான், றின்மையின் மாயை யாலே சேர்ந்ததென் றிசைத்தே முன்ன, மண்மையி னசத்துஞ் சத்து மலவி தன் னுருவென் றேசொல். 27

அசத்ததுஞ் சத்து நின்ற தன்றுமுன் றமமற் ருகு, நிசத்திறென்ற் றுமையா லன்றி நிற்பது தமத்துக் கில்லை, வசைத்திற மதனு லின்மை மானவே றுண்டென் றெண்ணே, மிசைத்தசித் திரிகன் சக்திக் கிருக்கைவே றென்ன லாமோ. 28

சத்தியின் பெருக்கான் வாழ்க்கை தழைக்குமே லதற்கு மூலஞ், சத்தியன் முமச் செய்கை சமமுழ வாதி யாம்போற், சத்திமாத் திரத்தெவ் வாற்றுந் தனுவும்வேற் றெண்ண மின்றுஞ், சத்திகா ரியமே யில்லை சாற்றுதி பிரமெவ் வாறும். 29

பிரமத்தோ ரிடத்த லாது பிறங்குரு தன்ன தெங்கும், வருகுட சத்தி மென்மை மண்ணினி னிகழு மாபோ, லொருபத மனைத்தா மீதி னெளிருமுப் பதமற் றுண்டு, சுருதியோ ரிடத்து மாயை துன்னிடு மென்றுஞ் சொல்லும். 30

இவ்வுல கெல்லா மோரங் கிசத்திடை யிருத்தி நிற்கேன், பவ்விய பார்த்த வென் றுன் பகவன்மற் றவனி யெங்கு, மெவ்வியங் குலங்கள் பத்தாய் விகாரமு மின்றி நிற்பன், றிவ்விய னெனவே யோதுந் திகழ்மறை வியாசன் வாக்கும். 31

நிரங்கிசத் தங்கி சத்தை நிறுவியே யெங்கு மென்று, வரம்பயில் வேத மோதும் வத்துவின் சத்தி மெய்யிற் றரம்பெற வெல்லாஞ் செய்யுஞ்

சார்கிறஞ் சுவரின் கண்ணே, திரம்படப் பலவ
கைத்தாம் சித்திரஞ் செறித்த லொக்கும். 32

ஆதியின் விகாரம் வாநா மதனியல்
வெளியே யாகு, மாதிர முண்டென் றுண்மை
வடிவமா திரத்து மெய்து, நீதிவத் தியல்பொன்
ருகு மிருமைநீர் மையது வாநா, மோதிய
வெளிமெய் யில்லை யும்பர்மெய் வெளியு
நிற்கும். 33

அன்றியும் பிரதி யோசை யம்பர குண
மவ் வோசை, யின்றிமெய் யொன்ரும் வாந
மெதிரொலி மெய்யுங் கூடும், முன்றரு வாநச்
சத்தி முடித்துமெய் வானு மொன்ருப்,
பின்றிகழ் தரும தன்மிப் பெற்றியுந் திரிபாச்
செய்யும். 34

வானியல் மெய்யிற் றங்கும் வானிடை
மெய்ம்மை கொள்வர், தானுல கருந்தார்க்
கீகர் தமத்தினுக் குறித்த தன்ரே, மேனிலை
மாநத் தாலே விளங்குமற் றதுமோ கத்தி,
ஞனிகழ் தருமிந் நீதி யகிலர்க்கு மடுத்த
தாமே 35

இன்னண முனஞ்சேர் வத்து வெண்
ணின்மா றுறுமா லவ்வா, னுன்னுக வானுஞ்
சத்து மொன்றலச் சத்தம் புத்தி, தன்னின்
வேற் றுமையான் வாயு வாதியிற் றழைக்குஞ்
சத்தே யென்னவம் பரந்தான் றேன்று
தெனவரும் புத்தி பேதம். 36

திகழுமெய்ப் பொருளெங் கண்ணுஞ்
செறிதலிற் றருமி யாகும், ககனமாந் தரும
மெய்யைக் கழற்றின்வான் வடிவம் யாது,
புகல்வெளி யுருவ மென்னிற் பொய்ம்மைய
தெனத்தேர் மெய்யி, னகல்வது பொய்ம்மை
யன்றே லதுநினக் கிடையூ றுமே. 37

இலகுமே லிலக மாயைக் கிழையதா
மின்மை தோன்றற், புலமறு கனவின் வேழ
மாதிபோற் பொய்ம்மை யாமாற், குல
வலின் வியத்தி சாதி குணகுணி தேகந் தேகி,
நிலவுவான் மெய்யும் வேறு நிற்குமற் புதமிங்
கென்னே. 38

தெரியினும் பேத நெஞ்சிற் றேற்றம்
வந் திலதென் பாயேற், றிரிபிறு னையத்

தாஞே தேற்றமின் மையது நீசொல், தரி
சம நிலைதி யாநத் தான்முன தேல்வி சாரம்,
புரிதிமற் றெனின்மா நத்தோ டுகேத்தாற்
பொருந்துந் தேற்றம். 39

சித்திர மெய்யின் பேதந் தியாநமா தி
களாற் றேறிற், சித்திர மநிசம் பொய்ம்மை
செம்பொரு ளதுபோ லாகாச், சித்திரம்
பொருளன்ருகித் திகழ்ந்திடு மறிந்தோ னுக்குச்,
சித்திர மிலதா யென்றுஞ் செம்பொரு டிகழுந்
தானே. 40

அனையவா தனைவ ளர்ந்தா லறிஞன்வா
னிசமென் பானைத், தனிநிச போத மில்லான்
றனையுங்கண் டதிச யிப்ப, னினையவான்
மித்தை சத்தே யிருப்பதென் றறிந்தா லிவ்வா,
றநிலமே முதல வற்றி னழிவிலாப் பொருளைத்
தேர்வாய். 41

அழிவிலாப் பொருண்மேன் மாயை
யதினிடை வாநு மவ்வா, னுழிமருத் தேக
தேசக் கற்பித மாய்நின் றெல்குங், கழிதரு
பரிசம் வேக கதியிவை தரும மாங்காற்,

றிழிவின்மெய் மாயை வாந மிவற்றின்மூ
வியல்பு மேவும். 42

மருத்துள தெனல்சற் பாவ மருத்தி
டைச் சத்தை நீக்கிற். பொருட்படா மையது
மாயை புகுமொலி வியோம நீர்மை, யிருக்குஞ்
சத் தெங்கும் வாந மியைவுறு தென்றிங்
கவ்வா, ஞெருப்படு மென்றீ ரிச்சொல்
லொவ்வாமை யெவ்வா றன்றும். 43

சித்திர முனமெங் கண்ணுஞ் செறிவுறு
தென்றே மிங்குச். சத்தமே செறியு மென்று
சாற்றினே முரணெங் கேயோ. வத்துவைப்
பிரிக்கிற் பொய்யேல் வாயுவவ் வியத்த
மாயைக், கொத்துறு மையினற் றன்று
மென்பதே ஞெவ்வா தென்னின். 44

மாயையின் பயனிங் குண்மை வடி
வின்மை யதுசத் திக்கண், ணுயகா ரியத்து
மொக்கு மவியத்தம் வியத்த மாகு. மேயசத்
தசத்தின் றேர்ச்சி வேண்டுமிங் கதுவே
செய்வாய், நீயசத் திடையார் பேத நினைவொழி
யதினிங் கென்னே, 45

நிலைமைதான் பிரமஞ் சிட்டம் நிமலி வான் போல மித்தை, யலைவற விதனை நீணு ளநுட்டித்து மருத்தை நீப்பா, யுலவையிற் ரூழ்வாம் வன்னி தனையுமிப் பரிசே யோர்வாய், தலைமைதாழ் விவற்றின் றேர்ச்சி தாம்பிர மாண்டத் துள்ளே, 46

ஊதையிற் பதின்பங் கக்கு மொளிமருத் தூடு தோற்றும், பூதபஞ் சகத்தின் ருர தன்மியம் புராணங் கூறுஞ், சோதியுட் டணங்தீ மேனி சொலுமூல குணமுஞ் சாரு, மோதலை துண்மை யின்மை யோசை யூ றுடைய தாமே. 47

சத்தொடு மாயை வாங்கா றம்முறுப் புறத்தீ ரூபம், யத்தின்மெய் யதின்மற் றெல்லா மறிவிணுற் பிரித்து மெய்யை, இத்திறம் வேருக் கித்தீ யிலதென வமுந்திற் றெண்ணீர், பத்திலொன் றருகி வந்த பண்பினைச் சிந்தை செய்வாய். 48

நீரிடை யுண்மை யின்மை நிகழொலி யூறு ரூப, நேருவ திதர தன்ம நிச்சுண மிரத மாகுஞ், சாரிருப் பதைப்பி ரிக்கிற் றண்

மித்தை யெனவ மூந்திற், பாரதிற் பதின்
பங் கெஞ்சி வந்தபண் பினைச்சிந் திப்பாய் 49

பூமியி னுண்மை யின்மை புகுமொலி
பரிசத் தோடு, தாமுரு விரத மூல தருமமா
நிசகு ணந்தா, னேமுறு கந்த மாகு மிவற்றின்
மெய் யினைப்ப குப்பா, யாமதைப் பகுக்கின்
மித்தை யாய்மிஞ்சும் பூமி தானே. 50

அவனியிற் பதின்பங் கெஞ்சி யாங்குறும்
பிரமாண் டத்திற், புவாமீ ரேமு மீங்கே
பொருந்துறு முயிர்க டேக, மிவைகளின்
மெய்யை நீக்கி விலங்கும்பொய் யாய்மற் றெல்
லா, மவைகளிங் கிலங்கி னுந்தா மாங்வந்
துறுவ தென்னே. 51

பூதபௌ திகமே மாயை பொய்ம்மை
யென் றுள்ளந் தேறி, னேதந்தீர் பொரு
ளொன் றேயா, மெனுமதி மாறு தென்றும்,
பேதமாம் பூமி யாதி பிரியின்மெய் யொருமை
யாலே, யோதந்தப் பொருட்கன் மந்தா
னுலகினவ் வாறே தோற்றும். 52

சாங்கியன் முதலா னோர்கள் சகப்பேதம்
பலவூ கத்தா, லீங்குறைத் திடுவ ரவ்வா

றேற்குமற் றவர்க ளேய, நீங்கமெய் யொருமை
யோரா நெறியினப் பேதங் காணே, நாங்களா
தலினெ மக்கு நண்ணுறு மாகி யென்னே. 53

துவிதசிந் தனைமாய்ந் தாலத் துவித
சிந் தனைதான் றேறும், புவியிலத் திதிவலுத்த
புருடனே சீவந் முத்த, னவிலிலித் திதியைப்
பார்த்த வண்டிநீ மோகந் தீர்ந்து, தவிர்தரு
பொழுது மன்னித் தற்பதந் தனைச்சார் வாயே 54

ஒன்றெனு மெய்ம்மை பொய்ம்மை
யுறுந்தமி னொருமை ஞாநம், பொன்றுறு
பொழுதப் பேத புந்தியே யாமற் றன்று,
மன்றியப் பொழுது சீவ னகல்வதும் பிரசித்
தந்தா, னின்றவப் பொழுது மோக நீக்கின்மேற்
பிறப்ப தின்றே. 55

நோயில நுய்ந்தின் றேனு நோயினுற்
சுழன்று மூர்ச்சை, யாயெனும் பிராணன்
விட்டிங் கவன்மய லுறுனெவ் வாற்றுந்,
தோய்வுறுங் கல்வி நாளுஞ் சொப்பன துயி
லிற் போயு, மாய்வுறு மறுதி வாவிவ் வகையறி
வழிவு றுதே. 56

மாநத்தால் வந்த ஞாந மாநமேம் பாட்டா லன்றி, யீநமா காவே தாந்தத் தேற்றமா மாந மின்ரு, மானதால் வேதாந் தத்தா மத்தொய்தப் பொருண்மாய் வாகா, தூனகா லத்தும் பூத விவேகத்தா லுறுநன் முத்தி. 57

இரண் டாவது

பஞ்ச பூத விவேகம் முற்றிற்று.

ஆகக் கவி 114.



ண்கி

## முன்றாவது

## பஞ்ச கோச விவேகம்.

---

குகையிலுறும் பிரமமதைக் கோச மைந்தின் விவேகத்தாற் குறிக்க லாமித் தகைமையினா லைங்கோசந் தனைப்பிரித்துத் தெரிக்கின்றேஞ் சரீரந் தன்னி, னகமருவும் பிராணனதற் ககமாகு மநமநதுக் ககமாங் கத்தன், புகலதற்குட் புசிப்பானு மொன்றற் றொன் றிதுகுகையாப் புகல லாமே. 1

தந்தைதநுக ரந்நத்தாம் வீரி யத்திற் சநித்தந்நத் தாலே நீடு, மிந்தவுடம் பந்நமய மீதாந்மா வலமுன்பின் னின்மை யாலே, முந்தையுறு பவத்தின்று மாதலினிப் பவமெங்ஙன் முயன்று நேடும், பிந்தைவரு பவத்தின்று மாதலினிங் கீட்டுகன் மம் பேறற் றேகும். 2

யாதுடலிற் பூரணமாய்ப் பெலந்தந்திந் த்ரியங்களைத்தா மியக்கா நிற்கு, மூதையது வழிணைமய மிதுவாந்மா வன்றுகு முணரா

வாற்ரு, லேதுடலி லகந்தையுறுங் கிரகாதி தனின்மமதை யிசையு மிந்த, வோதுமனோ மயமாந்மா வன்ருகுங் காமாதி யுறுத லாலே. 3

மன்றசுழுத் தியிலடங்கி நனவினக சிகைகாறு மன்ற நிற்கு, மொன்றறிவின் சாயைபெறு மதியதுவிஞ் ஞானமய முணர்வா காவாந், துன்றுமந்த ரிந்திரியங் கருத்தகர ணத்தியல்பாற் றுன்னும் பேத, நன்றறிவு மநம துவுந் தனித்தனியே யகம்புறமாய் யணுகு மன்றே. 4

அறநுகரும் பொழுதெணமொன் றகமுமா யாநந்த நிழலே யண்ணு, மிறநுகர்வு நித்திரையா வொடுங்கிடுமா நந்தமய மீதோர் காலத், துறுதலின லலவாந்மா விதன்விம்ப மயமாகி யொளிரா நந்த, நிறைவெதுவா மதுவாந்மா வாகுமந வரதமுமே நிகழ்வ தாலே. 5

தேகாதி துயிலாநந் தங்காறு முறு பொருள்கள் சேத நந்தா, னுகாவந் நிய மொன்றுங் காண்குகிலே னென்பாயே லவைக ளெல்லாம், வாகாக்கண் டனிதரங் காண்கி

லனென் பதுங்கிசமா மற்றற் றேனும், போகா
வெத் தாலவைகா ணப்படுவ வதனையெவன்
போக்கு வானே. 6

அநுபூதி மயமதனுற் ருனுகி யேயிருக்கு
மறியொ ணுதா, மெனலுணர்வா னேடுணர்வும்
வேறிலா மையினன்றி யில்ல தாலன், றினிமை
முத லியவடிவா யிதரங்கட் கவைகொடுக்கு
மெவைக்குந் தன்பா, லனையவிய னேடுவமா
விலையவற்றை யளிப்பதுவா மயலு மின்றே. 7

தருபொருள்வே றிலதேனு மவைகண்
மது ராதிகுணந் தமைநீங் காவா, றெருதனுரு
வாங்மாவு மறியவொணு தெனினுமுணர்
வுருவை நீங்கா, புருடனிவன் சொயஞ்சோதி
யாகுவனீ தனைத்தினுமுன் பொலிவன் மின்னு,
முருவவவன் றனைமருவி யொளிருமெலா
மவனெளியா லுலகந் தோன்றும். 8

அறிபடுமீ தனைத்துமெவ னுலவனை
யயலெதனு லறிய லாகு, மறிவுயர்வான்
றனையெதனுற் றெரிந்திடலா மநம்விடயத்
தாற்றல் சேரு, மறிவனவன் விடயமெலா
மவன்றனக்குப் பிங்மதா வறிவா னின்ரு,

மறிவுவடி யறிபடும்வத் தறிபடா வத்தினுக்கு மயலா மன்றே. 9

போதமது தனிலுமநு பவமெவனுக் கெவ்வாற்றும் பொருந்து ருதோ, வோதுமந்த நரவடிவா மோட்டினையெவ் வாறுநன்னூ லுணர்த்துகிற்குஞ், சீதமுறுஞ் சிகுவையெனக் குளதிலதோ வெனும்வசநஞ் சிரிப்புக் காம் போல், மேதையையா னறிந்திலன்மே லுணர் வுறவே வேண்டுமென விளம்ப லாமே. 10

உலகிலுணர் வதனைவிடிற் பிரமமது வெனுமதியே யுண்மை ஞாநம், விலகினைங் கோ சமுமிஞ்சுங் கரியுணர்வே தற்சொருபம் வெறும்பொய் யாகா, விலகியதோர் தானுள தாம் வழக்கிடப்பாற் றன்மையிற்றன் னிடத் துங் கூற வலகில்வழக் குளதெனிலோ விவ் வழக்கினெதிர்வாதி யாகும் யாவன். 11

மயலன்றித் தனக்கின்மை யாவருக்கு மிசையாது மற்ற தாலே, செயலற்ற பொய் வாதிக் கழிவினையே யருமறைதான் செப்புஞ் செப்பு, மயலற்ற பிரமமில தெனவுணரிற்

ருனேயில் லாதா னுமா, லியலற்ற பிரமமறி படுவதலத் தனக்குண்மை யெய்தப் பார்ப்பாய். 12

இத்தகையே லெத்தகைய தெனக்கேட்கி னித்தகைத்தா மியல்பங் கில்லே, யித்தகையு மத்தகையு மில்லாத பொருள்வடிவை யிலக வோர்வா, யித்தகையிந் தியவிடயம் பரோட் சந்தா னத்தகைய தெனலாங் காண்பா, னித்த கையிந் தியவிடயம் பரோட்சமுந்தா னலத்தாஞ யிருத்த லாலே. 13

வேத்தியமன் றேனுமப ரோட்சமதா தலிற்ருனுய் விளங்கு வோன்ருன், சாத்திய மாம் வாய்மையறி வநந்த மெனும் பிரமவியல் தன்னி லுண்டு, பாத்தியமில் லதுவாய்மை செகப்பாட்டுக் கொருகரிக்குப் பாடிங்கேதோ, வேத்தியவக் கரியாது சொல்லுதியப் பாடென் று மிசையா தாமல், 14

தொக்கவுருக் களைவிடினு மருவம தாஞ் சேணமிஞ்சித் துன்னு மாபோற், றக் கனவெல் லாம்விடின்மே லெதுசேடித் திருக்கு மது தானே தாஞ, மொக்கவொழிந் திடி னென்று மில்லையெனி னென்றுமிலா ததுவே யோமாம், போக்கமிலிங் குரைகணனி வேற்று மையாம் பொய்ம்மையிலாப் பொருளே நிற்கும். 15

அதுகொண்டே யாங்மாவன் றன்றெ னவே யதத்துவா விருத்தி யாலே, போது வேத மிகழ்வதனை யிகழ்ந்துபா தேயமிதைப் பொருளாக் கொள்ளு மிதுவென்னும் வடிவ மெது வதுவெல்லா மிகழ்வுறப்பாற் றிகழ வொண்ண, தெதுவிதுவாம் வடிவமல வது வாங்மா வென்றுமுள தென்ன லாமே. 16

சம்பவித்த தாம்பிரமத் துண்மைநிலை ஞாநநிலை சாற்றி னேநன், கும்பரநு பூதி

மய மதனுலென் பதுமுதலா முரைக ளாலே, யிம்பரெங்கு நிறைதலினித் தியத்திது லெல் லாமா மியல்பி னுனும், பம்பலிடங் காலவத்து வா லுமுடி வாகாதப் பரம ரூபம், 17

தேகமத னுடன்காலந் திரவியமு மாயை யினுற் செநித்த லாலு, மாசைமுத லானது செய் யந்தமிலே யாதலின்வத் தநந்தமேயா, நாச மின்மெய் யறிவநந்த மாம்பிரம மேபொருளா நணுமதற்கே, யீசனியல் சீவனிய லிருமையுபா திகளால்வந் திசையா நிற்கும். 18

ஈசனிடைத் தாயொன்று யெப்பொருளு நியமநஞ்செய் திருக்குஞ் சத்தி, மாசதிலா வாநந்த மயமுதலெப் பொருளிடத்து மறைந்து நிற்கும், பேசரிய சத்தியது பொருட்டரும நியமியா தென்றே வன்றே. நாசமுறுந் தம்மிற்றூந் தருமங்க ளொருமிப்பான் ஞாலந் தானே. 19

சிந்நிழல்புக் கிடு தலினு லச்சத்தி சேதநம்
போற் றிகழா நிற்கு, மின்னவுபா திபின்
புணர்வாற் பிரமமதே யீசனுடை யியல்பை
மேவு, மந்நமய கோசமுறு முபாதியெனிற்
சீவனியல் பதுவு மாருந், தன்னையன்மற்
றவன்மகனைக் குறித்தொருவன் றாதைமூ
தாதை யாம்போல். 20

புத்திரன்முன் னோர்குறிப்பின் றெனிற்
றாதை மூதாதை புகல வில்லை, யத்திறனே
யீசனுயி ரிலைச்சத்தி, கோசநினை வகலி னன்றே,
யித்திறனே யெவன்பிரம முணர்வனிவன்
பிரமமே யென்ன லாந்தான் சத்தியவத்
துவுக்கில்லைப் பவமதனான் மீண்டிவனுஞ்
சநித்தி டானே, 21

3—பஞ்ச கோச விவேக முற்றிற்று.

ஆகக் கவி 135.

நான் காவது

# துவித விவேகம்.

---

இறைவ னுலு முயிரா லு மியற்றுந்
துவிதம் வகுத்திசைப்பாம், நிறைவி வேகஞ்
செயிற்சீவ னீக்கும் பந்த மேல்வெளியா,
மறிக மாயை பகுதியென வண்ணல் மேலா
மாயாவி, பிறிவி லவன்செய் வானென்றே
பேசுஞ் சுவேதா சுவதரங்கள். 1

ஆங்மா விதுவாய் முன்னின்ரு னவன்
கண் டாக்கி ருனென்றுந். தான்மா நினைவால்
ஞாலமெலாங் தந்தா னென்று மிருக்கோதும்,
வாங்மா ருதந்தீ நீர்பார்சூழ் மற்று மங்ங முடன்
முறையே, யூன்மா யையிலப் பொருளாமிவ்
வுணர்வி னின்றும் வந்ததெலாம். 2

பின்னு நானே வெகுவாவேன் பிரசை
யாவே னெனக்காமித், துன்னித் தவஞ்செய்
தின்ருனிவ் வுலகை யென்னுங் தித்திரிதான்,

முன்ன மிருந்த திதுசத்தாய் முழுதா குவமென்
றதுநோக்கி, வன்னி படைத்தண் டசமாதி
வகுத்த தென்பர் சாமகரே. 3

பொறிக ணெருப்பி லெழுவனபோற்
பொலியக் கரவத் துவின்விவித, வறிவு செடபா
வங்களுமா மென்னு மதர்வ ணச்சுருதி,
பிறிவற் றுலகா யிருந்ததுமுன் பெயரோ
டுருவாய்ப் பிரிந்ததுபின் னெறியுற் றிடுமற்
றவைவிராட் டாதி களிலே நிகழுமால், 4

அவ்வி ராட்டு மநுநரர்க ளாக்கள் கரங்
கள் பரியயங்க, ளிவ்வி தந்தான் றெுந்த
மெறும் பீரு மெனும்வா யதநேயி, சிவ்வி
ருபாந் தரஞ்செய்து தேகம் புக்கா னீசனெனச்,
செவ்வி தாமம் மறைகள்சொலுஞ் சீவ னுவி
தரித்தலினும், 5

இடமாம் போத மிலிங்கவுட லியையும்
போத நிழலொன்றித், திடமாஞ் சீவந்
பரைமாயை செகஞ்செய் வலிமை யுடைத்தாம்
போன், மடமாம் வலியு முடைத்தவனை மயக்கு
மிந்த மடமையினுற் சடமா முடலின் மூழ்கி
யிறைத் தன்மை யொருவிச் சோருவனுல். 6

இறைசெய் துவிதந் தொகுத்துரைத்தே மேழா மநப்பி ராமணந்தா, னறையு முயிர்செய் துவிதம்வகுத் தந்ந மேழாம் ஞாநத்தோ, டுறையுந் தவத்தாற் பிதாத்தந்தா ரென்று நரர்க்குச் சுரர்க்கிரண்டா, நிறையு மாந்மாக் கொருமூன்று நியோக மந்நம் பசுக்கொன்றே. 7

சநமாம் வீரிகி யெழுவாயுந் தரிச பூர்ண மாசங்கள், மநம்வாக் குயிருங் கிரமுமே வயங்கே ழந்ந மென்றுணர்க, முனமோ திறையா லிவையுருவாய் முளைத்த வெனினுஞ் சீவனவை, யநமா நீர்மை யுஞற்றிற னறிவாற் கரும மதனுனும், 8

ஈசன் செய்கை யுயிருணவிவ் விரண்டோ டொருமித் துறுஞால, நேச மகளிர் தாதையினு னேர்ந்து பதிக்கே நுவர்வாம்போற், பாச மாயா விருத்திமயப் பகவ னினைவு தங்கருவி, நீச மநத்தின் விருத்தியுயிர் நினைவு நுகர்வின் சாதநமே. 9

பகவா னுஞற்று மணியாதி பதார்த்த மொருபண் பாய்நிற்க, நுகர்வான் மதிப்பல் விருத்திகளா னுகர்ச்சி நாநா விதமாகும், தகவா

மணிபெற் றவன்மகிழ்வன் சாரா மைபின்மற் றவனயர்வன், மிகநோக் கினுமன் னதின்விரத் தன் மேவா னுவகை யிடும்பையுமே. 10

விருப்பு வெறுப்பு பேட்சையெனும் வேறு பாடு மணிமருவுஞ், சிருட்டி யுயிரி னு மீசன் சிருட்டி பொதுமை வடிவாகும், மருக்கி மனைவி மதுநிமகள் மாதா வெனப் பல் விதமாவ, ளொருத்தி மாமன் முதலானே ருணர்வா லுருவிற் பிரிவிலளே. 11

ஆயின் ஞாநம் பலபிரிவா மாகா ரந்தான் பிரிவிலதா, மேய வொருத்தி வடிவிலுயி ரியற்றும் வியப்பின் ரூமென்ன, நேய வொருத்தி தசைவடிவி நினைவீன் வடிவி மற்றொருத்தி, மேய தசைமே னியளொன்று மேனும் வேறு நினைவுருவி 12

மயக்கங் கநவு மநோரதத்தால் வருசிந் தைகளின் மநோமயமாம், வியக்கு நனவின் மாநத்தா மேய மதுவா காதெனின்மெய், நயக்கு மாந மேயத்தா னணலின் விடயா கிருதி யாம், பயக்கும் பாடி யமும்வார்த்தி கமுமிவ் வருத்தம் பகர்வனவாம். 13

செம்பைக் குகையின் வார்க்கவதன் றிறமா மதுபோ லுருவாதி, பம்புஞ் சித்தம் விரைந்தந்தப் பண்பாய்த் தோன்று மொளி வெயிலுங், கும்ப முதலி னுருவுபெறுங் கொள்கை மதியும் பொருளனைத்து, மிம்பர் விளக்கு மதனுலே யிலகும் பொருளின் வடிவாயே, 14

மாது ருவினின் றெழுமாகம் வருமம் மாக பேயமுறும், போது மதுமே யத்துடனே பொருந்தி மேய நிகருருவா, மேது விதனுற் கடவிடய மிரண்டா மணுரு மதியுருவென், றேது மணுரு மேயமதா முணர்வா லொளிரு மதியுருவே, 15

பறையு முடன்பா டெதிர்மறையாற் பந்திப் பதுயிர் மதியுருவா, முறையி னிதுதான் சுகதுக்க முளதா மிலதே லிலதாகும், மறையு மெனினும் புறப்பொருடான் மனுயிர் கனவிற் பந்தமுறும், நிறையுஞ் சமாதி துயின்மூர்ச்சை நேரத் துறினும் விடுபடுமால். 16

தூர தேசத் துறும்புதல்வன் சுகமா யிருப்ப வவன்றுதை, தீரப் பரவஞ் சகன்சொல்லாற்

செத்தா னெனக்கொண் டரற்றுவனுற், சாரங்
கவன் றுஞ் சியுமச்சொற் ருன்கே ளாமை
யாலரற்ருன், பாரிங் கிதனு லுயிரையெலாம் பந்
திப் பதுமா நதசெகமே. 17

பயனற் றமையிற் புறப்பொருள்கள்
பௌத்த வாத மெனினன்ரும், பயனி னெஞ்ச
வுருநேடப் பகர்வா கியமிங் குட்கொளலாற்,
பயனற் றதுமாம் வாகியத்தைப் பற்றற் றெழிக்
கக் கருதேமாற், பயனை விரும்பா மாநங்கள்
பற்று மிதுவே நிலையாகும். 18

மநத்தின் றுவிதம் பந்தமெனின் மநம
தொடுங்கிற் கெடுமதனுற், பனித்து மியோகஞ்
செயவேண்டும் பரம வுணர்வா லென்கொ
லெனி, னநித்த மப்போ தாமெனினு மதுபிற்
பிறவா தொழிவதுதான், கனத்த பிரம வுணர்
வொழிந்து கைகூ டாதென் றெலிக்குமறை.

இறைவன் சிருட்டி யாந்துவித மிருப்ப
வதனைப் பொய்ம்மையென, வறியிற் பிரமத்
தொருமையெளி தறிதற் கொருமை வாதிக
ளால், வெறுமைக் காலத் ததுவொழிய விரோ

தித் துவித மிலதேனு, முறநற் குருநூன் முத
லிலதா லுணர்தற் கரிதா மொருமையே. 20

அண்ண னிருமி தத்துவித மலவா திப்ப
தாங்கருவி, யொண்ணு மதுவோ நழுவ விதா
லுறைக வேறெவ் வாருகு, மெண்ணில் சீவத்
துவிதமிரண் டெழினூ னூலி லாமையென,
நண்ணற் பாற்றூங் தத்துவத்தின் ஞாந நண்
ணும் வரை நூலே. 21

சீவப் பிரம விசாரணையே செப்பு நூன்மா
நதசெகமா, மேவத் தகுதத் துவமுணரின்
விடற்பாற் றதுவென் றிடுஞ்சுருதி, மாவல் லப
நூல் கற்றறிஞன் மாறி மாறித் தான்பயிற்சித்,
தோவ வரிய பரம்பொருடோர்ந் துற்கை போற்
பின் பதைவிடுக. 22

நூலைப் பயிற்சித் தறிஞன்மதி நுண்மை
மதிபெற் றவனுய்வைக், கோலை விடல்போற்
றுனியங்கைக் கொண்டோ னூலை யறவிடுக,
மேலைப் பொருடோர்ந் தந்தணனும் விறலோன்
பிரஞ்ஞை பெறல்வேண்டு, மாலைத் தருமிக்
கொலிகினையல் வாக்குக் கதுமிக் கிளைப்பன்றே.

ஆக்க மவனே கனேத்தெரிக வயலாம் வாக்கு களேயொழிக, வாக்கை யறிஞன் மநத் தொடுக்க வென்ப தாதி மறைதெரிக்கு. மாக்க னூலி லாமையிரு வகைதீ விரமந் தமுமென்றே, தாக்குங் காமா திகடிவிரஞ் சலிக்கு மனோராச் சியமந்தம். 24

போதம் பெறமெய்க் காட்சியின்முற் புரை யாமிரண்டும் விடற்பாற்றுஞ் சாதநங்களிடைச் சமையுஞ் சமாதா நமுங்கேட் டனமதனுன், மீதக் காட்சி மேலுமவை விடற்பாற் றறிய முத்திபெறக், காத லாதி பந்தமொடு கலப் போன் முத்தி கலவானுல். 25

சீவந் முத்தி யிதுவேண்டாஞ் செந்ம மொழியின் யான்சுகியே, லாவ தேயாம் பவ முமுனக் கண்ட ருலகந் தனிற்சுகிநீ, யேவ முற லா லழிவுவியப் பென்னும் சுவர்க்கம் விடற் பாற்றே, லீர்வ தெனுமிக் கிழிவுருவா மிக்கா மாதி கொளற்பாற்றே. 26

உள்ள துணர்ந்துங் காமாதி யொருங்கே யொழிக்கின் றிலேயென்னிற், கொள்ளல் விட னூ றவிருனக்குக் குறித்த படிபோ குதன்மே

வுந், தெள்ள வொருமைப் பொருடெரிந்
தோன் சித்தப் படிபோ குதலாமேற், றள்ள
வசுசி தினிநாய்க்குந் தத்து வனுக்கும் பேத
மெனே. 27

ஞாநம் பெறுமுன் மநத்தீங்கா னலிவு பூண்
டாய் பின்பிதுநா, ளான வகில சநநிந்தை யமை
ந்தா யகோநின் மதிமகிமை, யேன முதலுக்
கொப்பாத லெழிலார் மதிபோய் நீவேண்டேல்,
மாந தத்தீங் கொழிந்துலகால் வணங்கப்
பெறுதி தேவனென, 28

காமி யாதி தீங்கோர்தல் காமா திகள்
போம் வழியாகும், சேம முத்தி நூலிவணஞ்
செப்பு மவைதேர்ந் துறச்சுகிப்பாய், காம மாதி
விடற்பாற்றுட் கற்ப னையின்மற் ருநியெனே,
தீமை யனைத்தின் வித்ததனுற் றிருமா லாநி யா
மென்ருன். 29

விடய சிந்தை பெறுநரர்க்கவ் விடயங்
களின்மேற் சங்கம்வரு, மடையுஞ் சங்கத் தாற்
காம மதனுற் குரோத மதிகரிக்கு, மிடையு மத
னுன் மிகுமோக மிகுமோ கத்தா னினைவயரு,

முடனவ் வயர்வாற் புத்திகெடு முண்டா ஙாச மதனுலே. 30

நிருவி கற்ப சமாதியினுண் ணினைவு மாயு மதுதானு, மருவுஞ் சவிகற் பகமதனுன் மற்ற துண்மை தெரிந்துளத்திங், கருகி யேகாந் தத் தமர்ந்தங் களவோங் காரஞ் சொலமாயு, மொரு வினதுமூ கண்போலு முளமுந் தொழில்விட் டிருந்திடுமே. 31

இந்தப் பதமிக் கிராகவனுக் கிசைத்தான் வசிட்டன் காண்பதிலென், றுந்து முணர்வா லதுமநத்துக் கொழியி னுயரும் பரசுகமாம், பந்த மறுநா லோர்ந்துதமிற் பன்னுட் டெளிந் தேம் வாதனையின், ஞெருந்த மகன்ற மௌந மலாற் றுனுநற் கதிவே றிலையன்றே. 32

போக மளிக்குங் கருமத்தாற் புத்தி யோர் காற் சலிக்குமெனி, னேக சமாதி மீண்டுடனே

யிலையும் பழக்க வலிமையினுற், சோக மறு சஞ் சலமிலியைத் துய்யபிரம வித்தென்னல், மோக மிலிவன் பிரமமே யென்பர் முநியாய்க் கரைகண்டோர். 33

தெரிவுந் தெரியா மையுந்தீர்ந்து திகழ்கே வலமே தானுகிப், பிரிவற் றிருப்போ னவன் பிரமம் பிரம வித்துத் தானலனுந், திரிவில் சீவந் முத்தியின்மேற் செரியுங் காட்டை யிதுபேரு, மிரியிற் சீவத் துவிதமிதா லீசத் துவிதம் பகுத் துரைத்தேம். 34

நான் காவது
துவித விவேக முற்றிற்று.

ஆகச் செய்யுள் 169.



## ஐந் தாவது

## மகா வாக்கிய விவேகம்.

---

எதனிற் காண்ப னிதனை வினுவுவன்
வதுவை கொள்வன் வழக்கிடு வான்மிக
மதுர மல்லது மற்றதுந் தேருவ
னதுகொ லாம்பிரஞ் ஞானம தென்பதே. 1

திசைமு கேந்திர தேவர்கண் மாநுட
ரசுவங் கோமுத லானவற் றுள்ளுமே
யிசையு ஞானமொன் றேபர மாதலா
னசைப ரம்பிரஞ் ஞானமென் பாலுமாம். 2

அறவும் பூரண மாம்பர மாற்றுமா
வுறுமிங் கேயுணர் வுக்குரித் தாமுடற்
செறியும் புத்தியின் சீர்க்கரி யாய்மரீஇப்
பிறிவி லாதக மென்றுபி றங்குவான். 3

உரிமைப் பூன்றமென் றேதுப ரம்பொருள்
பிரம மென்பதாம் பின்னுமிங் காகின
னெருமைத் தாமென் று ணர்த்துவ தாதலா
லருமைச் சந்மய மாகின னரோ. 4

ஏகமேவாத் துவிதமெ னுஞ்சத்தே
யாகு நாமவு ருவம கன்றது
மாக மாதி வருமுனு மின்றுறும்
பாகு பாடிலப் பண்பது வென்பதாம். 5

வினவு வோனுட லிந்திய மேலதாய்த்
துனுமெய் வத்திங்கு தொம்பத மென்பதா
மனுநல் லொற்றுமை மற்றசி தேற்றிடுந்
தனிமை தொந்தத்தின் ருன்பெறற் பாலதே. 6

சொயஞ்வி ளங்கிய சோதிநற் காட்சியே
யயமெ னுஞ்சொலி ருளுட்கொ ளத்தகுந்
துயர கங்கரந் தொக்கிறு வாயின்வே
றியைவ தாற்றுமா வென்றுரை செய்வதாம். 7

திரிசி யம்பொய்ச்செ கமுழு துக்குமோர்
பிரிவின் மெய்ம்மைப்பி ரமம தென்பதா
மரிய வப்பொரு ளான்றதற் சோதியாந்
துரிய வாங்மசொ ரூபம தாகுமே. 8

**5—மகா வாக்கிய விவேகம்**

**முற்றிற்று.**

ஆகச் செய்யுள் 177.

## ஆறுவது

# சித்திர தீபம்.

---

சித்திர படத்திற் றவுதங்கட் டிதமுந் திகழி லாஞ் சிதமிரஞ் சிதமென், றெத்திற மவத்தை நால்வகை தோற்று மிணையிலாப் பரம்பொரு ளிடத்து, மத்திரஞ் சித்தோ டந்தரி யாமி யணி திகழ் சூத்திராங் மாவோ, டொத்திடு விராட் டிவ் வவத்தைநால் வகையு மொளிருமென் றுணர்ந்திடல் வேண்டும். 1

இங்குதன் னியல்பின் வெண்மைகாண் டவுத மிணைதலி னங்கட் டிதமா, மங்குறு மசிமே னியினிலாஞ் சிதமாம் வன்னங்க ணிறைந்திரஞ் சிதமா, மங்குநற் பரந்தன் னியல் பினிற் சித்தா மந்தரி யாமிமா யாவி, தங்குறச் சூக்கஞ் சூத்திராங் மாவாங் தடிப்புட லான்வி ராட் டாமே. 2

திரத்தினிற் பிரமன் முதற்றம்ப மீருஞ் சேதநங் களுஞ்செடங் களும்வத், திரத்திலோ

வியம்போ லுத்தம வதமத் திறத்தினு லுறை வன வாஞ்சித், திரத்தினிற் கோட்டு மாநுடர்க் குறுவத் திரத்துடைப் போலிவே ருச்சித், திரத் தினுக் கிடவத் திரத்திலே டுறழ்வாய்த் திகழ்வ போற் செயப்பட்ட வன்றே. 3

சித்திலாந் தேகி களுக்குவெவ் வேறு சீவ ரென் றிடுசிதா பாச, ரொத்துவந் தனர்மிக் கிவர்சமு சார முறுவர்வத் திரத்துடைப் போலி, தொத்துறு நிறங்க டமையதிட் டாநத் துகின் மரு வியவெனச் சொலல்போற், புத்தியற் றவர்க ளுயிர்ச்சமு சாரம் போதமே வியதென மதிப்பார். 4

ஓவியத் தமைந்த கிரியெழு வாய்கட் கொண்டுகிற் போலியில் லதுபோன், மேவிய சிருட்டி மண்ணெழு வாய்க்கு வித்தையின் போலியு மிலதா, தாவிறன் வடிவி லிச்சமு சாரஞ் சத்திய மாய்ப்புணர்ந் ததெனை, வாவிய பிரமை யவித்தையா மிதுதான் மன்னிய வித் தையான் மடியும். 5

தன்னுடைப் போலி யாகிய சீவன் றனே யுறு பவந்தனக் கில்லை, யென்னுமெய் யறிவே

வித்தையா மிதுதா னெழில்விசா ரத்தின்வந் தெய்தும், மின்னுறு சீவ செகபராந் மாவை விசாரணை நிதஞ்செயல் வேண்டு, முன்னுறு சீவ செகச்சுபா வங்க ளொழிந்திடிற் சொரூப மே மிஞ்சும். 6

புலனுரு தொழித லவற்றெழி வன்றும் பொய்ம்மையே யென்றிடு துணிவா, மலவெ னிற் சுழுத்தி யாதியின் முயல்வற் றடைந்திடு முயிர்பர கதியை, மலமிலா வாந்ம சொரூபமிஞ் சுதருன் மற்றது மெய்யெனுந் துணிவா, முலகு தோற் ருமை யலவல வென்னி லுயர்வுறு முத்தியின் ருமால். 7

திரவிசா ரத்தாம் வித்தையே பரோட்சந் திகழப ரோட்சமு மென்ன, விருவகை யவற்றி னுறினப ரோட்ச மியம்பிய விசாரமுற் றுறு மாற். பரமமுண் டென்ன வுணர்வுறி லதுதான் பயன்றரு பரோட்சமா ஞாநம், பிரமநா னென் ன வுணர்வுறி லதுவே பிறங்கப ரோட்சமெய்ஞ் ஞாநம். 8

நனியுட னெதனு லிவன்சமு சார மனைத் தையு நண்ணுரு னந்தத், தனிமைவிஞ் ஞாநம்

பெற்றிட ருணர்வின் றத்துவம் வகுத்துரை
செய்கே, னினியகூ டத்தன் பிரமஞ்சீ வேச
ரெனவுஞ்சித் தீரிரு வகைத்தாம், புநிதவாங்
கடவம் பரமகா வாநம் புனல்வெளி மேகவிண்
போலும். 9

கடத்தவச் சிந்ந வாநினீ ரகத்துக் கதுவி
மே கத்தொடு விண்மீ, னடுத்தவா னீர்வா
ரைமகா வானி னகத்தமர் மேகமண் டலநீ,
ரிடத்தநு மேக வாங்புயற் றுளியா யிருக்குநீ
ரங்கிச வடிவிற், றடத்தவாற் பிரதி விம்பமா
மிதுநீர்த் தன்மையாற் கருதிடப் படுமே. 10

நிலைமை யாலுட லிரண்டுறை சேதந னிகழ்
தரு கூடம்போ, லுலைவி லாமையாற் கூடத்த
னுமிதி லுறுமதிற் சிற்சாயை, விலக லற்றுயிர்
தரித்தலிற் சீவனும் வெம்பவ மிவன்சேர்வன்,
செலவின் னுற்கட விண்ணெனக் கூடத்தன்
சீவனுன் மறைவாமால். 12

ஞாந கீநன்மற் றறிஞருல் வினவமெய்
நானறிந் திலன்போத, மான தில்லையிங் கிலகுரு
தெனவுணர்ந் தறைகுவன் சொயஞ்சோதி,
மேன லம்பெரு வவித்தையே ததைவிட மேவு

மோ மறைப்பென்னன், மோனை யாம்பல தருக்
கந்தன் னநுபவ முழுதையு மறநூறும். 13

தனது ணர்ச்சிநம் பிக்கையின் றேற்றர்க்
கந் தான்மனு மையினுலே, பினையெங் கேமெய்
ம்மை நிச்சயந் தார்க்கிகற் பிறன்பெறு வானன்
றே, மனது ரைத்திடத் தருக்கம்வேண் டுவ
தெனின் வாய்த்ததென் னநுபூதி, யநுச ரித்த
தாங் தருக்கஞ்செய் குதர்க்கம்விட் டகலுதி
டமாமே. 14

தன்னு ணர்ச்சிதா னவித்தையா வரணத்
துங் தகவுறத் தெரிவித்தே, மன்ன தானிச
வுணர்வவி ரோதியென் றறிவுறத் தருக்கிப்
பாய், சொன்ன வன்னது விரோதியே லியாதி
னூற் றுகண்மறைப் புணர்வாயோ, துன்னு
மாவிவே கம்மதன் விரோதியாங் தூயமே லோர்
பாற்காண். 15

சுத்தி வெள்ளிபோ லவித்தையா வரணஞ்
சேர் சோதியி லிருதேகத், தொத்த சீவன்விட்
சேபவா ரோபமா மோதிது வெனுங்கூற்றின்,
சத்தி யத்தன்மை சுத்திமே வுறும்வெள்ளி
தனினிகழ் வுறுமாப்போற், சித்தின் மேவுறுஞ்

சொயத்தன்மை பொருண்மையுந் திகழும்விட்
சேபத்தே. 16

நீனி றப்புறத் தோடுமுக் கோணமு நிக
முரு திப்பிக்கண், மானக் கூடத்த னிடத்தசங்
காரந்த மாதியு மறைவாகுந் தானவ் விப்பியிற்
கற்பிதம் வெள்ளியாந் தன்மைபோற் கூடத்த,
ஞாந மீதத்தி யாசவிட் சேபமு நானெனும்
பெயர்மேவும். 17

இதுவென் னங்கிசந் தான்றெரிந் திரசத
மென்றெணு மாப்போலத், திதிபெ றுந்தனே
நானென வெண்ணுவன் றிகழிது வொடுவெ
ள்ளி, மதிசெ யிற்பினந் தானுநா னென்பது
மற்றத னிகர்காண்டி, பொதுமை யேசிறப்
பேயென வுபயத்தும் பொலிந்திலங் கிடுமன்றே.

தேவ தத்தன்றன் செல்பவ னவ்வழி தெரி
குவை நீதான்மற், றுவி யில்லினான் றனென
வோதுசொல் லகிலத்தின் வழக்காகு. மேவ
மற்றிடு வெள்ளியீ திதுதுகி லென்பதி லிது
போலத், தாவி லின்னவ னீயக மென்பதிற்
றனென்ப துறத்தோன் றும். 19

தானென் கிற்பது நானெனற் கயலதாந் தன்மயத் ததனுலென். ருனென் கிற்பதே கூடத்த துமெனுந் தனிப்பய னெமக்காமாற், ருனென் கிற்பது புறம்பகற் றுவதெனிற் சாற் றுத லவ்வாறே தானென் கிற்பதே சொரூப மென் போர்க்கென் றுஞ் சம்மத மேயாகும். 20

வேறு.

தானென்ப துமெய்ம்மை யுஞ்சார்பரி யாய மத்தா, லானந்தவி ரிவ்வுல கின்கணு டனிகழ்ச்சி, யீனம்பெறு மற்றவைக் காதலி னீடிருனு, மானம்பெறு மெய்ம்மையு மன்னிய மாற்றமா மால். 21

கடந்தானறி யாதெனத் தன்மைக டாதி யான, செடந்தோன் றுறு மோவெனிற் ருேன் றுறுஞ் சிங்மயாங்மா, வடர்ந்தா தலிற் சிற்சட பேதமாங் மாவின் வந்தன், றிடந்தோயுயி ராலது வந்தென் றெண்ணுவாயே. 22

எவ்வா றுயிர் தன்னிடை மாயையா லேய்ந்ததாமோ, வவ்வா றுக டாதிச டங்களு மான வாங்கே, தவ்வாவது வென்பதி துந்தமன்மை

போலவெங்குஞ், செவ்வாயுறு மாதலிற் சித்தெனச் செப்புவாயேல். 23

அதுவோடிது மெய்ம்மையி டத்துறு மாதலாலே, யதுவோடிது மெய்ம்மையன் ருநன்மை யாதிபோலு மதுவோடிது தன்மையு மன்னிய நீயுநானெனன், றதுவாதியெ திர்மறை யாகுமிங் கையமின்றே. 24

அனியத்தினெ திர்மறை தானினக் கன்ன தோநா னெனவத்துவிற் கற்பித மென்றறி யென்றனுன்ருன் பினமுற்றுற வெள்ளியி தென்றிடு பெற்றிபோல, மனிமின்னவு மோக ரொன் றென்றும திப்பர்மாதோ. 25

தாதாம்மிய கற்பனை யிங்குமுற் சாற்றவித் தை, யேதாலுறு மீதிறி லன்னது மில்லதாகு, மோதாவர ணத்தினே டொற்றுமை யோடுஞ் சித்தாற், கோதாமெணம் பிராரத்த நாசங்கு றித்துநிற்கும். 26

முதற்காரணங் கெட்டுங்க ணங்கன்ம மூந்துமென்பர், மதத்தார்க்கிகர் போலெமக் கேனது வாய்த்திடாதோ, மிதத்தாங்தின நூற்

கவ ரோர்கணம் வேண்டுவாரேற், சதக்காற்பம
யக்குரித் தாங்கணந் தானுட்கொள்ளே. 27

பிரமாணமொன் றற்றவர் வீண்மிகப் பேசு
வார்நூ. லுரமூகம தாலுரைப் போர்க்கரி
தென்னேயோசொற் றுருத்தார்க்கிக வாதமிங்
கேகிற்கச் சொல்லுகேஞ்சிற், பரிஞமசொ யத்
தகத் தொற்றுமை பற்றன்மோகம். 28

தக்கோர்க்கயற் பாமரர் தார்க்கிகர் தாமயக்
கான், மிக்காமறை நீத்துத்தி யொன்றுற்று
மெய்ம்மறந்தார், மக்காமுன்பி ஞேர்வொழிங்
தேசிலர் வாக்கின்போலி, யுட்கேயில ராய்த்
தத்தம் பக்கத்தி யோசிப்பாரே. 29

வேறு.

சாட்சிமுத லுடலந்தச் சேர்க்கை யாங்மாத்
தானெனுல காயதரு மூடர் தாமுங், காட்சி
யின்போ லியையடைந்தா ரிவர்தம் பட்சங்
காட்டிடுவான் கோசமங்க மயமவ் வாறே,
மாட்சிவிரோ சநன்கொள்கை மாக மென்பர்
மன்னுயிர்போ யிடிற்றேக மரித்த லாலிங், காட்
சியிலாத் தேகவிலட் சணனே யாங்மா வாகு
மென்ப ரவ்வுலகா யதரின் மேலோர். 30

பிரத்தியக்க மாக்கொளுநா னெனலும் புத்தி பேசுகின்றே னெனன்முதலாம் பிரயோ கத்தாற், றிரத்துவமில் லுடற்கயலிந் தியமாந் மாவாத் தெருட்டிடும்வாக் காதிசண்டை செய்த தாக, வுரத்தசுரு திகள்கேட்டே மாத லாலே யுணர்வாகு மவையதனு லாந்மா வே யாஞ் சிரத்தையிர ணியகருப்ப ருயிராந் மாவா தியரினணந் தேர்ந்துநிதஞ் செப்பு வாரே. 31

நேத்திரமுன் னிந்தியங்க ளகன்று மாவி நிற்கினுய்வாந் துயில்விழித்து நிற்கு மாவி, சாத் திரங்க ளாவியுயர் வென்ப தாதி சாற்றும்வகுத் தாவிமய கோசந் தன்னைத், தோத்திரிப்ப ருபா சகர்நெஞ் சாந்மா வென்றே சொலுமாவிக் கில்லைபுசிப் பானுந் தன்மை, போத்துருநெஞ் சாகுமெனக் கேட்டே நெஞ்சே புருடருக்குப் பந்தமுத்தி கொடுப்ப தாமே. 32

மநமயகோ சஞ்சுருதி புகற லாலே மந மாந்மா வெனலாம்விஞ் ஞாந மாந்மா, வென வுரைப்பர் மேற்கணிக வாதி யானே ரிம்மநத் தின் காரணம்விஞ் ஞாந மத்தாற், கனதையகம் விருத்தியிதம் விருத்தி யென்றுட் கரணமிரு

வகையவற்றின் விஞ்ஞா நந்தான். முனமுரை செய் யகம்விருத்தி யென்ன லாகு மொழிந்தவித மெனும்விருத்தி மநம தாமே. 33

இதம்விருத்திக் ககமெனும்பா வனைவித் தாந்தன் னியல்புணரா விடிற்புறம்பெவ் வளவுந் தோன்ரு, வுதயமிறப் படிக்கடியு மகவிருத்திக் குளவதனுன் விஞ்ஞாநங் கணிக மாகுந் தித முறுசொப் பிரகாசந் தன்ருற் காட்சி சேர்த லின்விஞ் ஞாநமய கோசஞ்சீவ, னதுதனக்குற் பவநாசஞ் சுகதுக் காதி யகிலசமு சாரமென்ரு கமங்க ளோதும். 34

மின்னலொடு மேகநிமைக் கொட்டல் போலும் விஞ்ஞாநங் கணநிலேயீ தாங்மா வாகா, வன்னியனுக் கறிபடா தாலே பாழே யாங்மாவா மென்பர்மாத் திமிக ராஞேர், முன்னமிது விலதாயே யிருந்ததென்ன மொழியுமறை யதனு லே ஞாந ஞேய, மென்னுமீர் வடிவுடைய வகில மோகத் தியன்றதென வையமற வெண் ணற் பாற்றே. 35

நிராதாரப் பிரமையிலா மையினுண் டாங்மா நிகழ்தலிற்சூ நியத்துக்குங் கரியா யன்ஞே, னிரா

ருகிற் சொன்னிகழா விஞ்ஞா னத்துள் ளிதரமா யானந்த மயனுண் டென்றே, தராதலத்தி லறித ரற்பாற் றெனன்னை தீக தரிசநமா மணுமகத் தோ நடுவென் றிங்ஙன், வராநிற்கு மங்கும் வெகு வாதஞ் செய்வர் வாதியர்மா மறையுத்தி வழக்கி னுலே. 36

சூக்குமனா டியிற்புகலா லந்த ராளர் சொற் பமென்ப ருரோமமா யிரங்கூற் றெருப்பிற், போக்குவர வுறுவனணுக் கணுவா மின்னேன் புகல்சூக்கத் ததிசூக்க னதனுன் வேத, வாக்கு வெகு தரமணுவா மெனவே சொல்லும் வால நுனி கோடிபங்கிட் டதிலோர் பங்குக், கேற்கு மிவன் சீவனென வுணர்தற் பாற்ரு மெனவிதர மாமறையு மியம்பு மன்றே. 37

திகம்பரர்மத் திமமென்பர் பாதந் தொட் டுச் சிரசீரு யறிவுநிறைந் திலக லானு, நகம் பரியந் தமெனுமறை யானுஞ் சூக்க நாடிபுக லாற்சூக்க வுறுப்பா லாங்கஞ் சுகம்புகல்போற் கரங்களினுற் றூல தேகஞ் சுருங்கல்விரி வுறு முடலிற் புகுத ருனு, மகம்பயிலாங் மாவுறுப் பின் வளர்வு தேய்வா லாமதனுன் மத்திம மென் றறியல் வேண்டும். 38

உறுப்புடையோன் கடம்போல மாய்வன் மாய்ந்தா லுஞற்றியத னொழிவுஞற்றா ததன்வரத்து மறுப்பதெவ னதனாலே மகத்தா மாந்மா மத்திமமு மணுவுமல வாந மென்னக் குறிப்பறவெங் கணுநிறைந்தோ னுறுப்பொன் றில்லோன் குணவேத சம்மதனா மென்று கூறிச், சிறப்பிடையும் வெகுகலகஞ் செய்வர் சித்தோ செடந்தானோ சிற்செடமோ வென்னா நின்றே

பிரபாகர ருந்தார்க்கி கருமற் றாந்மாப் பேசிலசித் தாமென்ப ரம்ப ரம்போற், பொருளாந்மா வொலிபோற்றற் குணஞ்சித் தாமிப் புந்தியென விருப்புவெறுப் புடன்மு யற்சி, தருமாதன் மமுமின்ப துன்பத் தோடு தற் சமுக்கா ரமுங்குணமா மநதோ டாந்மா, மருவாநின் றிடிற்றனதிட் டத்தா லெல்லாம் வருமதிட்ட மறிற்றுயிலின் மடியு மன்றே. 40

அறிவுடைமை யாலிவன்சே தநனா மிச்சை யநிச்சைமுயற் சியுமுளனாந் துன்ப மாதி, யுறுதலிற்றன் மாதருமஞ் செய்வா னுண்பா னுடலிலொரு காற்கருமத் தாலின்பாதி பெறுமது போல் வேற்றுலகத் துடலிற் கன்மபெலத்தினு

லிச்சைமுதற் பிறக்கு மிங்ங, னிறைபவனும் போவன்வரு வானி தற்கு நிகழ்கரும காண்ட மெலா மாங மென்பர். 41

துயிலிலசித் தாநந்த மயகோ சந்தான் றுன் னுமுதற் கோச மெவர்க் காங்மா வாகும் பயி லிவனுக் கவைகுணமா மசித்தென் ருேர்ந்து பாட்டார்கள்சிற் செடமாங்மா வென்பர் சித்துச், செயிரிலெழுங் தோனிணைப்பாற் கருத லாமாற் செட்ஞுகி யப்பொழுது துயின்றே னென்னக், குயிறருசாட் டியமிருதிச் செடா நுபூதிக் கொள் கையன் றி யோர்போ துங் குலவு ருதே. 42

சுழுத்தியிற்காண் பான்காட்சிக் கழி வி லாமை சொலுமதனு லிவனெளிமற் றின்மை சேர்ந்தோ, னழுத்தமின்மின் மினிபோலா நிரங்கி சன்று னுவதொருக் காலுமிலை யுபய ருபம், வழுத்ததனு லாங்மாச்சித் துருவ மென் பர் மதியுடைய சாங்கியர் செடாங்கி சந்தான், கொழுத்தபகு தியினுருமுக் குணம் வி காரி கொடுப்பநுகர் வொடு கதிதான் வந்த தாமே. 43

சங்கமிலா வறிவதற்குப் பந்த முத்தி சாற் றுதருன் பகுத்துணராத் தன்மை யாலாம்,

பங்கமுறு பந்தமுத்தி நிலைப்ப தற்குப் பகர்ந்
தவர்போற் சாங்கியர்சிற் பகுப்புட் கொள்வர்,
மங்கலிலா மகத்தின்மே லவ்வி யத்த மருவுபிர
கிருதியெனச் சொல்லல் போலத், துங்கமறை
யசங்கனுஞ் சீவ னென்றே சொல்லுதலா லவண
சங்கன் றுணிவி தாமே. 44

வேறு.

சித்தின் கண்ணெழு பகுதி யாலெலாஞ்
செய்வ னீச்சுர னென்பரி யோகிய, ரத்தி னோ
டுயிர் களின யற்பர னுமெ னும்பிர தாந மென்
பதோ, டொத்த சேத்திரஞ் ஞர்க்கு மேபதி
யொண்கு ணேசனென் பதுந லாரணஞ், சுத்த
வந்தரி யாமி தன்னையே சொல்லு மாரணி யகமு
வப்பொடே. 45

ஈண்டும் வாதிக டத்த முத்தியா லெதிரி
யாய்வெகு கலக மாற்றுவார், தாண்டு ருவண
மதிதி டப்படத் தக்க வாக்கியமெ டுத்துக்
காட்டுவா, ராண்டு றுங்கிலே சங்கன் மம்பய
னவற்றின் வாதனை யோடு மென் றுமேத்,
தீண்டு ருப்புமான் மேன்மை யீசனுஞ் சீவன்
போலவன் பற்றில் சித்துமாம். 46

அன்ன தாயினும் புருட மேன்மை யாலவ னுக் கண்டுறு நியமிப் பாந்திற, மின்ன தன் றெனிற் பந்த முத்தியு மிங்கு மன்னினில் லாமை யேயுமா லுன்ன றீரிவன் பயத்தி னென்பவா முரைய சங்கனும் பரனுக் கின்ன துண், டென் ன வோதுமிக் கிவனுக் கேற்குமற் றின்மை யாற்கிலே சங்கன் மாதியே. 47

சீவர் பற்றிலாத் தன்மை பெற்றதாற் சேர்வு ருர்கிலே சாதி யென்னினு, மாவி வேக மற் றமையி னன்னது மன்னு மென்னமுன் சொன்ன தெண்ணுவாய், தாவி லிச்சையுங் கிரியை ஞானமுந் தன்மை யீசனுக் கென்னத் தேருவா ரேவு பற்றிலான் றனக்கெவ் வாறுறு மியக்குந் தன்மையென் றிடுத ருக்கரே. 48

புருட மேன்மைதா னிவனுக் குக்குணப் பொலிவ் ஞலுள தல்ல தில்லையே, யெரிமெய்க் காமன்சத் தியசங் கற்பனே யென்ப தாதிய சுருதி சொல்லுமே, பரன்மெய்ஞ் ஞானமா தியவு ளோனெனிற் படைப்பெ நாளுமே பயில வேண்டுமா, லிரண்ய கர்ப்பனே யீச ஞகுமற் றிலிங்க தேகத்தோ டிணங்கி நிற்பனே. 49

அவன்ம காங்மிய மதிவி சாலமா யழகு
றும்பிரா மணம்பு கன்றிடும், மிவனி லிங்க
முண் டெனினுஞ் சிவனு மியல்பின் ருங்கரு
மாதி யின்மையாற் கவினுங் தூலமெய் விட்டி
லிங்கமெய் காண நிற்பதெங் கண்ணு மில்லை
யாற், றவிர்கி லாதவை ராச மெய்யிறை தலைமு
காதிமற் றெங்கு மேயுளான். 50

சென்னி யாயிர மெங்குஞ் சட்சுவே சேர்
ந்து ளானெனு மொழிவி ளுவினே, மென்ன
வோதுவார் விசுவ ரூபமே யென்று மெண்ணு
வோ ரிங்ங னெங்கனும், துன்னு றுங்கரங்
காலெ னிற்புழுத் தொடக்க மும்பர ளுகு மாத
லான். மன்னு நான்முகன் றேவ தேவனு மற்
றை யோரலர் மநுட ராகுமே. 51

புத்தி ரப்பொருட் டவனை யெண்ணுவோர்
புகல்வ ரிங்ஙனம் பிரசை நாதனே, யித்த லப்பிர
சைகளை யாக்கின னென்ப தாதிவாக் கியமுங்
காட்டுவார், மெத்து பங்கயன் வேத னென்ப
வன் விண்டு நாபியின் வந்து ளானதாற், கத்
தன் விண்டுவே யென்ப ரிங்குபா கவத ரென்ன
வே கருது சிவரே. 52

சிவன்றன் பாதமே காணச் சார்ங்கிதான்
றிடம ழிந்துளா ருத லாற்சிவன், புவந தேவன்
மா லல்ல வென்பர்காண் புநித வாகம மாகிச்
சைவரே, தவறின் முப்புரந் தன்னை வென்றிடத்
தாணு விக்கிநே சனைவ ணங்கினுன், கவுரி
சேயனே கடவு ளென்பர்கள் காண பத்திய
மதத்தன் பாளரே. 53

இப்ப டித்தத்தம் பக்கத் தேனைய ரியையு
மாநத்தான் வேறு வேறதா, வொப்பின் மந்
திரா ருத்த வாதகற் பாதி யொண்டிமிக் குறை
செய் வார்களாற், செப்பி னந்தரி யாமி யை
மு தற் செ றி வர் தாவராங் தேச வாதிகள்,
கொப்பு மேவர செருக்கு வேயெலாங் குலத்
தின் றெய்வமாய்க் குறித்தல் காண்டலின். 54

வேறு.

உண்மை நிச்சய விருப்பினு லொண்ணியா
யத்தோ, டண்மி யாகம விசாரமே யாற்றிடு
மவர்க்குத், தி ண் மை யா கிய பிரதிபத் திய
தொன்றே சேரும், வண்மை யன்னது மிங்கு
தோன் றுறவகுத் துரைப்பாம். 55

மாயை யைப்பிர கிருதியென் றேமதித் திடுக, மாயை பெற்றுளான் றன்னையு மகேசனு மென்றே, யாய வின்னவன் றனதவ யவங் களே யாகி, யேய ஞாலங்க ளியாவையு நிறைந் ததா யிருக்கும். 56

என்னு மாமறைக் கேற்பவே யீசனிர் ண யந்தான், றுன்ன னீதியா மாகவே முரணது தொலையு, மன்னு த்ாவராங் தேசவா தியர்க்கிந்த மாயை தன்னு ருத்தமங் தாபநீ யமதுரை தரு மால். 57

அநுப வம்பிர மாணமென் றறிவிக்கும் வேதம், பினும தாஞ்செட மோகரு பமு மெனப் பேசு, மினிய பாலகோ பாந்தத்து மில குறு தலினுற், பனும தற்குள தநந்தநீர் மையு மெனப் பகரும். 58

அறிவி லாக்கட மாதிய வுருச்சட மன்றே, பொறிம முங்கிட முலகர்மோ கமதெனப் புகல் வர், செறியு மிவ்வகை யுல கர்தங் திட்டியா லிதுதா, னுறையு மியாவர்க்கு மநுபவ மாவுள தாகும். 59

உத்தி திட்டியான் மற்றநிர் வாச்சிய மொ ண்டா, தித்த லத்தசத் தெனுமறை யாலசத் திராது தத்த விர்தலாற் சத்தலத் தாழநீங் குத லான், வித்தை நோக்கினுற் றுச்சமா மேவுரு மையினே, 60

சுருதி யுத்தியோ டுலகுடைத் தொந்தஞா நத்தான், மருவு துச்சமோ டநிர்வச நீயம்வாத் தவமென், றெருமுப் பேதமா மாயையென் றுணர்வுறற் பாற்றும். வருமி தற்குண்மை யின் மையுங் காட்டுறு மாயை. 61

விரிவி னுற்குவி வாலுமோ வியப்படம் போலுங், தெரிப டாமையாற் சித்தைவிட் டில் சுதந் தரையா, மரிய சங்கமி லான்றனை யநிய மாக் குதலின், வரிசை சார்சுதந் தரையு மவ் வண்ணமா மாயை, 62

மாயை யீதுதான் கூடத்த வசங்கவாங் மாவை மேய சாட்டிய மாக்குஞ்சீ வேசரை வெறுஞ்சிற் சாயை யாகவும் வகுக்குங்கூ டத் தனைச் சாரா. தோயு மிச்சக முதலெலா முனுற் றுறு மன்றே. 63

செயற்க ருஞ்செய லுஞற்றுறு மாயையிற்
செறியும், வியப்பென் னீரிடை நெகிழ்ச்சியக்
கினியின்கண் வெம்மை, பயக்கு மண்டனிற்
றிண்மைபோன் மாயையிற் பயிலு, நயக்கு மச்
செய லொன்றினு னண்ணிய தன்றும். 64

உலகர் முன்னிலை யவன்றனை யுணர்வுறு
மட்டு, மிலகு நெஞ்சிடை வியப்புமேற் பொய்
யென விறுமா, லுலக மெய்யெனும் வாதிபாற்
சோத்திய மொளிரு, மிலகு ருதிவ ணிருத்தலின்
மாயையவ் வியல்பாய். 65

வேறு.

சோத்திய மீதுமுண் டேலுறு சோத்தியஞ்
சோத்திய மேற்பெறுமாற், சோத்திய மாற்றுவ
தல்லது மீண்டெதிர்ச் சோத்திய மாற்றவொ
ணு, சோத்திய ரூபம தோடுவி யப்பா தொக்
குடை மாயையிதன், சோத்திய மோய்வழி
நேடுக முயல்வாற் றுகளறு மதியுடையோர். 66

மாயையி னீர்மை மதிப்பது வேதநை
யென்னின்ம திக்திடுவாய், மாயையி லக்கண
ஞாலவி ளக்கம தென்றும திக்கொளுவாய்

மாயையி தென்னவு ரைப்பரி தாகிவ யங்கும்
வெளிப்படவே, மாயையி தென்றிங் திரசா
லாதியின் வையமி நாட்புகலும். 67

ஈதுல கும்வெளி யாகியி லங்குமி தென்
னவு ரைப்பரிதா, மாதலி ஞன்மா யாமய முல
கென் றறிவா யோரமறத், தீதிதி னிகிலபண்
டிதரெனு மறியச் செப்பமு யன்றிடினே,
வோதுறு மன்னே ருடைமுன் போர்புடை
யொளிதரு மஞ்ஞாநம். 68

தேகமொ டிந்திரி யாதிய வீரிய சென்னிய
மானவெனே, வாகம தற்கறி வானதெவ் வா
றெனி னதனுத் தரமென்னே, பாகுறு வீரிய
வியல்பிது வெனினப் பண்பறி திறநீயென்,
போகுத லாற்பய னற்றது டன்பா டெதிர்
மறை யும்போமே. 69

நின்றிடு மிதனியல் பாகிய தெவளவு நிகழ்
தர வறிகில்லே, னென்றிட லேமுடி வின்கணி
னக்குறை விடமதெ னுஞ்சரணு நன்றறி
வாளர்க ளென்றுரை பெரியோர் நாட்டிய வத
ஞலே. யொன்றிய விதனியல் பிந்திர சாலமென்
ரேதுறு வார்மிகவே. 70

கற்பவ சித்திடு வீரிய மறியுங் கைதலே பத மேவும், பற்பல வங்குர மாமுறை சிசுவெவ் வநசரை பலபிணியா, முற்படல் கண்டிடு முண் டிடு வினவுறு மோக்கும்வ ரும்போகு, மற்புத விதனினும் வேறுறு விந்திர சாலமெ னும்போ லும். 71

உடலது போல்வட விதையின திடையு மோர்ந்துற நோக்குதியால், வடவிதை தானெங் கேமர மெங்கே மாயையி தென்றுணர்வாய், தடமுறு மூகத் தபிமா நம்புனே தார்க்கிகர் முத லோரைத், திடமுறு மரிடமி சிரன்முத லோர் கண் டனேயுழி தெண்டித்தார். 72

எண்ணவொ ணுப்பொரு ளவைகட ருக் கத் திடையில ணேக்கவொ ணு, வெண்ணவொ ணுமந தாலுமி வுலகத் தியல்வடி வதுவன் றே. வெண்ணவொ ணுவியல் வல்லப காரண மென்றறி மாயையதே, யெண்ணவொ ணுத் துயி றனினக் காரண மெய்துறு மறிதரவே. 73

சாக்கிர சொப்பந வுலகதி லீனங் தருவி தை யிடைபோலாங், தாக்குறு மதுகொடு முழுதுல கதின்வா தனேயவ ணிலேமேவும், வீக்

குறு புத்தியின் வாதனை களிலே விம்பித் திடு
ஞாநம், போக்குறு புயல்விண் ணெனமிளி
ராச்சிற் போலிகொ ளப்படுமால். 74

சித்தது சாயையை யார்விதை யன்னது
தியுரு வாயெழுமாற், புத்தியி லேசிற் சாயைமி
ளிர்ந்துபொ லிந்திடு மாயையதே, மித்தைய
தாச்சீ வேசரை யாக்குமெ னச்சொலும் வேத
மெலாந் தத்துறு புயல்விண் சலவிண் போலவர்
தழுவியி ருந்திடுவார். 75

மேகநி கர்த்துறு மாயைய மேகமி டைந்
திடு பனிநீர்போ, லாகிடு மதிவா தனைபனி நீர்
விண் ணனவாஞ் சிற்சாயை, மோகமு ருச்சின்
னிழன்மா யோன்மறை மொழியும கேசனென,
வேகனெ ருங்குண ரந்தரி யாமியி வைக்கவ
னேகிபமாம். 76

துயிலுறு மாநந் தமயனை யாரம் பித்துச்
சுருதி தனி, னியலிவ னேசரு வேசனெ னச்
சொலு மிவன்மறை புகலிச, னயமுறு முழு
துணர் வாதிக ளவனண் ணுவென நவிலவொ
ணு, தயைமறை பொருளய மலமா யையிலே
தங்குமெ லாமதனுல். 77

இன்னவ னுக்கிய தாமுல கினேவே ருக்
கவெ வர்க்குமரி, தன்னத னுற்சரு வேசனெ
னச்சொலு மாரண மங்ககில, மன்னுயிர் மதி
களின் வாசனே செறியும வற்றெடிவ் வகில
முமே, மின்னுற வுணர்தலி னுன்முழு துணர்
வுள னென்றும்வி ளம்புறுமே. 78

வாதனே காட்சிய லாமையின் முழுதுணர்
வுடைமைம திக்கவொணு, போதம னேத்தினு
மன்னது காணுபு வாதனே புகறிடுவாய், மே
தைம யப்பிர தாநமெ னுங்கோ சங்களின்
வேற்றினுமே, யாதியு ணின்றுந டாத்துவ
தாதலி னுமந் தரியாமி. 79

புத்தியி னின்றத னகமாய் மதியாற் புலன்
மரு வான்மதியின், மெத்துரு வாயதை யுள்ளி
ன டாத்துவ னெனமறை மிகவோது, மொத்
துறு தந்துப டத்தின்மு தற்கா ரணமா யுறை
வதுபோல், வத்துமு தற்கார ணமா தலினிவன்
மன்னுவ னெங்கணுமே. 80

படமத னினுநூ லந்தர நூலினும் பஞ்சந்
தரமாகு. மிடமெதி லாமந் தரவிசி ராந்தியவ்
விடமநு மானிப்பாந், திடதுவி திரியந் தரகட்

சங்களின் றெரிசந மதிலிவனுள், ஞடையன றிபடு கிலனத ஞன்மறை யுத்திக ளாற்றுணி வாம். 81

படவடி வாயமன் னுதலா னூலது படி வம் படமாபோல், வடிவமெ லாமாய் மனலா லிவனது வடிவமெ லாமாகும், மிடையறு நூலது குவிவுடன் விரிவொடி யங்குத லாலி யையு முடன்மரு வும்பட மீதுசு தந்தர மொன் றுமு ருதாமால். 82

இன்னன மந்தரி யாமியெ வாறெவ ணெவ்வா தனையாலே, பின்னம தாகுவ னவ் வா றுடனே பேரு மையமிலே, மன்னுயி ரிரு தயத் தீசன ருச்சுன மன்னுவ னெந்திரமேற், றுன்னுறு முயிர்முழு தையுமா யையினுற் சுற்றுதல் செய்விப்பான். 83

மன்னுயிர் விஞ்ஞா நமயர்க ளிவர்கள் மநக்கம லத்துறைவ, ரன்னவர் களின்முற் காரண விறையங் காகுவன் வேற்றுமைதான், மின்னுடன் முதலிய பஞ்சர மெந்திர மேற்றுன லபிமாநஞ், சொன்னனன் விதிகள் விலக்குக ளின்னமை சுற்றுத லாமன்றே. 84

அண்ணறன் மாயா சத்தியி னுல்விஞ் ஞானமயாகா ரத்துருவாகவும், நண்ணடை வடிவம தாகவும் வேற்றுமை நண்ணுவ னது சுழல்வா, முண்ணனி மேவிந டாத்துவ னென லுக் கோத்தித பொருளென்னு, மண்ணெழு வாயெங் கணுமிது நீதிகொ ளத்தகு மதியாலே.

தருமமு மிதுவென வறிவே னதனிற் சார் நடை யிலையெற்கு, மருவுறு மதன்மமு மிது வென வறிவேன் வரவிலை யொழிவதனி, லிரு தய நிலைபெறு தேவனே னப்படு மெவனே வெம்முறையா, லருளினி லாட்டுவ னம்முறை யேயா னடிடு கின்றேனல். 86

வேறு.

நரன்றன் செயலாற் பயனின் றென்று நவிலே லீச, னரன்றன் செயலி னுருவாய் நண் ண லாலிவ் வறிவாற், பரன்றன் செயலெத் திருமும் பாரு தாகு மனைய, பரன்ற னுணர்வாற் றனக்குப் பற்றி லுணர்வு பயிலும். 87

அதனுன் முத்தி யாமென் றறையுஞ் சுருதி மிருதி, யிதமாஞ் சுருதி மிருதி யென்ன தாஞ்

ணை யெனவே, திதனு மீசன் சொற்றான் செப்பு
மாஞ்ஞை பயமே, யுதவா நிற்கு மிந்தப் பயத்தி
னெனவே யோதும். 88

இந்தச் சருவே சன்ற னியல்பந் த்ரியா மி
யின. தந்த வியல்பின் வேறு மக்க ரமெனு
மிவன்ற னுந்து மிகுசா சநமென் றுரைக்குஞ்
சுருதி யுயிருள், வந்து புகுசா ததனிவ னென்
றுஞ் சுருதிவ ழங்கும், 89

ஆக்க லழித்த லாலே யகில யோநி யிவனுந்,
தாக்கும் பிறப்போ டிறப்புத் தயக்கங் காத
லாகும், வாய்க்கச் செய்வன் றன்னுண் மரு
வுஞ் சகத்தை யெல்லாம், வீக்கு முயிர்க்கன்
மத்தால் விரிந்த படமொப் பாயே. 90

தன்னு ளகிலங் கரப்பான் சாற்றக் கன்ம
வொழிவா, லின்னுங் குவிந்த படம்போ லிரவு
பகலுஞ் சுழுத்தி, மின்னு நநவு மிமைத்தல்
விழித்தல் சும்மா விருத்தல், பின்னு மஃக்கற்
பனேபோற் பிறப்போ டிறப்பு மாமே. 91

தோற்றங் கரத்தற் சத்தித் தொடர்ச்சி
யேது வாலே, யாற்று மாரம் பத்தோ டான

பரிஞ் மாதி, யேற்ற சோத்தி யங்கட் கீண்டு
பொருத்த மின்றுஞ் சாற்றுஞ் சடவொற்
றுமையாம் சடங்கட் கீசன் முதலாம். 92

ஆங்கு சித்தின் போலி யங்கி சத்தாற்
சீவர்க், கோங்கு முதலாந் தமத்தி னுயர்வாற்
சேத்தி ரங்கட், கீங்கு சித்தி னுயர்வா லேனை
யருக்கும் பரனே, பாங்கின் மூல மாவான் பாவ
னையெழு வாயால். 93

எனவார்த் தீகக் கார ரெவைக்கும் பரமாந்
மாவே, யினிய வேது வீச னுகா னென்று
ரெனிற்கே, ளஙியொ ஙியாத் யாச மாவிக் கறி
வுக் கும்போற், சொனவீ சனுக்கு மதற்குஞ்
சுரே சுரர்சொற் றனரே. 94

அஙந்த ஞாங மெய்ம்மை யதின்வாங் வாயு
வன்னி, வஙந்த லம்பைங் கூழுண் வடிவம்
வந்த வெனுமோத், துனுந்தன் னுணர்வின்
மையினங் கொளிரும் பிரம ஙிபமாய்க், கனந்
தங் கீசன் மெய்யாங் காண்டி தமிலா ரோபம்.

தமிலா ரோப மங்நஞ் சார்ந்த படங்கட்
டிதமா, யமையு மதுபோன் மயலா லயிக்க

மாகும் புயல்விண். விமல மாவிண் மூடர் வேறு காணு ரதுபோற். சுமடர் பிரமே சர்க்குந் தோன்ற வொருமை காண்பார். 96

வேறு.

உபக்கிரம மாதிலிங் கங்களாற் ருற்பரிய வொண்விசா ரத்திருலே, விபுத்துவமெ னும் பரம சங்கமா யாவிசெயன் மேவுவா னிவன்மகேசன், சுபப்பிரத மெய்யறிவ னந்தமென வேமறைது வக்கியுப சங்க ரிக்கு, மபத்தமறு வாக்குகடி ரும்புமெதி னதனுல சங்கமென் றுணி வாகுமே. 97

மாயாவி வி௱வமதை யாக்குவா னதிலனி யன் மாயையா லார்ப்புண்ணுவா, ஞேயாமலெனவேறு சுருதிசொலு மதனிரு லுண்டாக்கு வோனிறைவனும், வீயாத வாநந்த மயவீசனுகுமிவன் வெகுவாகு வோமெனப்பார்த், தேயாத துயில்கநவ தாமுறைமை போலவேயிரணிய கருப்பவடிவாம். 98

இந்தவுல காதலிரு வகைசுருதி யுடைமையா லியலாக வேனுமொன்ருய், வந்ததென

வே வ னு ம றை ற முறையுணர்தல் வேண்டுமிரு
வகைமையினை யுங்கண்டனந், தந்துருவு
ளோன்சூக்க தேகனெனு நாமனே சகலவுயிர்
மிக்குருவனு, மெந்தெவையு நானெனலி னிச்
சைஞா நங்கிரியை யேயும்வல் லபனுகுமே. 99

புலருமுனு மிரவின்முற் பொழுதுமிரு
திருளினுட் புகுமுலக மென்னமறைவா,
யிலகுமிது கட்டிதப் படமசித னுலிலாஞ் சித
மாத லெனவிறையுருப், பலவிலிங் காகார மதி
னிலாஞ் சிதமுறும் பயிர்சாக சாதமேனும்,
விலகலற் றெங்குமுளை யாதல்போல் விமலமாய்
மிருதுவிச் சகமுளையுமாம். 100

ஆதபத் திலகுலகும் வன்ன நிறை பட
முமுதிர் வாம்பயிரு மெனநிகழுரு, வேதமில்
விராட்டாகு மிதைவிசுவ ரூபமே யெனுமத்தி
யாயமதுவுஞ், சாதபவு ருடசூத்த மும்புகலு
மயனுதி தம்பாந்த மானமெல்லாந், தீதகலு
மிவ்விறைவ னுடையவய வங்களாய்த் திகழு
மென மொழிவர் பெரியோர். 101

ஈசசூத் திரவிராட் டயன்விண்டு சிவனிந்த்ர
னெரியும்விக் கினபைரவர், மாசின்மயி ரால

மொடு மாரிராக் கதர்யட்சர் வருணங்கண் மிருக பக்கி, வீசுதரு யவமாதி யப்புசிலே மண்காட்ட மிளிர்வாச்சி யாதியெல்லா, நேசமுட னிறை வடிவ மென்று பூசிக்கலாய் நிகழ்பயன ளிப்ப தாமே. 102

அவ்வண்ண றனெயெந்த முறைமையாற் பூசிப்ப ரந்தமுறை பயனையடைவார், பொய் வண்ண மற்றபூச் சியபூசை யின்றெடர்பிற் போதுபய னுயர்வு தாழ்வா, மெய்வண்ண முத்திதான் பிரமதத் துவஞாந மேவினல துண் டாகுமோ, தவ்வலறு தன்னநவை யன்றியே தற்கநவு தவிருமோ யிதுபோலவே. 103

ஈசசீ வாதியுரு வாகியறி வறியாமை யென் னும்வடி வாஞ்செகமெலா, மாசிலா வத்துவித மாம்பிரம தத்துவ மதன்கணே கநவாகுமே, மாசிலா நந்தமய விஞ்ஞாந மயராகு மற்றீச சீவ ரென்போர், நீசமா மாயையா லிவர்கள் கற் பிதர்களா நேர்ந்ததவ ரான்முழுதுமே. 104

நோக்கமுதற் பிரவேசம் வரையுறுசி ருட் டிதா னுவலிறைவ னுற்செய்ததாஞ், சாக்கிரம் தாதிரு வாணம்வரை யானசமு சாரமுயிர்

செய்ததாகுந், தாக்கரு மசங்கமத் துவிதமா கியபிரம தத்துவந் தனையுணர்கிலார் வீக்குமா மோகமய மானசீ வேசர்பால் வீண்கலக மே செய்குவார். 105

தத்துவ நிட்டையரை யாங்கணடு சந்தத முஞ் சந்தோட மிக்காருவேஞ், சித்தநிலை பெற் றிலரை நோக்கின்மிக் கயருவேந் தியக்கினர்க ளொடுபேசிலேஞ், செத்தையர்ச் சகராதி போ கர்கடை யீசன்மய றுன்னிநின் றுளராகுமாற், பித்தனுல காயதன் முதற்சாங்கி யாந்தமுயிர்ப் பிரமையினை மேவினர்களாம். 106

அத்துவித மாம்பிரம வத்துதெரி யாதபோ தனைவர்களு மேபிராந்தர், முத்தியவர் கட்கேது மற்றின்ப மிங்கேது முதன்மைய தமத்தன் மைதான், பத்திவரு மெனின்வருக வதுகொ டெனை சொப்பநம் பற்றிவரு முலகிறேடு, மெய்த்துவரு பிச்சையொடு நனவையுற் றவ ரென்று மேய்வுறு ராகுமன்றே. 107

அத்தகையின் முத்தியைந யந்தவர்கள் சீவேச ரதுவிவா தங்களின்மதி, வைத்திடுதல் செய்கையல பிரமதத் துவநாடி மதிசெய்ய

வேண்டுமென்றே, தத்துவவு ணர்ச்சியவை தந்
திடுவ தேற்பூர்வ பட்சமாச் சாருவதலா, லித்
துணையி னுலவச னுகியவை களின்மூழ்கி
யிடருரு தொழிதிநீயே. 108

சாங்கியம சங்கமொடு சித்துவிபு சீவனெ
னுந் தானவா றீசனுமெனத், தூங்கியோ கஞ்
சொலுந் தத்துவப் பொருளவர்கள் சுத்தரா
மென்னினீகே, டீங்கிறத் துவமதனி ரண்டு
பொருள் களுநமது சித்தாந்த மதனைமருவா,
வோங்குமொரு மைப்போத முண்டாக வப்
பட்ச மோர்புடையு டன்பாடதாம். 109

ஆதியறு மாயையான் மோகமுற் றவர்
சீவ வநகரும்வி லட்சணரெனப், போதமுறு
வாரதனை நனிமாற்ற வவைகளிற் போதுசோ
தனைசெய்வதா, மாதலா லேயிவனு ரித்தான
திட்டாந்த மழகுறமு னம்புகன்றேங், கோ
தறுக டாகாய மாவான மம்புவெளி கொண்
மூவின் வடிவமாமே. 110

செலவிடுெடு மேகவிண் செலமேக சேர்க்
கையொடு சேர்ந்தனவ வற்றினிலைவாக், குலவு
கட வானுமா வானுநிரு மலமாமிக் கொள்கை

யா நந்தமயனு, மிலகுவிஞ் ஞானமய னென்ட வனு மாயைமதி யின்வசர்க ளாமிவர்களி, னிலயமுறு கூடத்த் தெடுபிரம மென்பதுவு நிருமலம தென்னலாமே. 111

இப்பக்க வுபயோக மாதலாற் சாங்கியமு மெழில்யோக முங்கொள்வதேற், றப்புற்ற வுடலந்ந மயபக்க மாதலாற் ருனுக வுட் கோடியா, லெய்ப்பற்ற வாங்மபே தத்திஞே டுலகுண்மை யீசனய லெனுமும்மையு மெய்ப் படவி டுக்கினப் பொழுதுசாங் கியயோகம் வேதாந்தக் கோட்பாடதாம். 112

சங்கமிலி சீவனெனன் மாத்திரையி னுற் சொல்கிரு தார்த்தனு னென்னினக்காற், கொங்குகமழ் மாலைசந் தநமாதி மெய்ம்மை யெனல் கொண்டுகிரு தார்த்தனுவாய், தொங்க லெழு வாய்க்குண்மை நேடவரி தநுபோலச் சொற்றவான் மாத்தனக்குஞ், சங்கமிலை யென்னலரி தாம்பண்பி பண்பாய்த்த யங்குசக வீசர்பாலே 113

பிரகிருதி முன்போல்வி ரைந்துசங் கத் திற்பி ணித்திடும வாறீசனு மிருமைபெறு

மினையனையொ டுக்கிடுவ னுதலா லிவனுக்கு முத்தியேதோ, தரமிலவி வேகமே சங்கமொடு நியமமுந் தருவதெனி னக்காலையே, மருளது று சாங்கியனை வந்துமா யாவாதம் வலிமையினி லைந்ததாமே. 114

பந்தமுத் திகணிலைமை யாகவாங் மார்ப்பன்மை பாங்கிற்கொ ளப்பாற்றெனின், விந்தைபெறு மாயைநிலை மைய்துதர வல்லதாம் வேண்டுகில மாத லாலே யுந்துதல்செய் கூடாமை கூட்டு விப் பேனென்ற லொவ்வாமை கண்டிலைகொ லோ, வெந்துயர்செய் பந்தமொடு முத்தியது மெய்ம்மையெனன் மெய்ம்மறைச கித்தி டாதே. 115

நாசமிலை யுற்பத்தி யில்லைபெத் தனுமில்லை நண்ணுசா தகனுமில்லை, யேசறுமு முட்சு விலை யில்லைமுத் தனுமென்ப திது மெய்ம்மை மாயை யென்னுங், காசதறு காமதே னுவினுக் கிரண்டுண்டு கன்றுசீ வேசராகு, நேசமுறு படி துவிதமே பருகு முண்மையா கின்றதத் துவிதமேயாம். 116

கூடத்த பிரமவேற் றுமைநாம மாத்திரங் கொண்டதல தேதுமில்லைக், கேடற்ற கடவானு மாவானு மெங்கணுங் கிட்டுமோ வேற் றுமையினை, ஈடுற்ற வத்துவித மெதுசிருட் டியின்முன மிருந்ததது வேயின் றுமேல், வீடுற்ற போதுமுறு மாயைசெக மனைவரையும் வீறும யக்குமன்றே. 117

வேறு.

இவ்வா றுரைசெயு மவருமவித்தையி னிங்கும யங்கின ரென்னென்னி, னெவ்வா ருமுன மவ்வா றிவர்கட் கிங்கும யங்குத லெய் தாவா. லொவ்வா விகபர முறுசமு சாரமொ ருங்குள தாமெனு மதனாலே, தவ்வா வொருமையி லங்கில திலையென் ருனறி விலர்துணி வாமன்றே. 118

ஞானிக ணிச்சய மிதனினும் வேரு நன் கறி யப்படு மேதத்தம். பானிக ணிச்சய வணம் வன் பவமுளன் பவமிலி நானென நினைவாராற், ருனொரு மையதப ரோக்கம தன்றெனி னன் றறி வாய்நிகழ் தலினாலே மேனிகி லமுமில கில தெனி னிருமைதான் மிளிர்தரு மோமுழு வது மென்னே. 119

27

திசைமாத் திரமத னுலில குதருன் றிகழிரு மைக்குஞ் சமமாகு, மிசையா மிதனுற் றுவித்ம தெனவத் துவிதமு மேவுவ தாகாதோ நசைசே ரொருமைய திருமைய லரிதின் ஞாநம துறினது நணுமோதா, னிசைவா மறிவில குதலவி ரோதி யிவ் விருமைத னக்கதி னுெப்பன்றே. 120

இத்தகை யேற்கே டுவிதம்வெ றும்பொய் யேமா யாமய மதனுலே, யத்தகை யாலத் துவி தமெய் சேடித் தமர்தலி னுலில காஙிற்குஞ், சித்தம தாலென வொண்ணு வடிவினிற் செக முழு துஞ்செறி பொய்யேயென். றெத்தெணி வாத்தவ வத்துவி தந்தனே யொளிபெற விஞ்சச் செயல்வேண்டும். 121

பின்னரு மிருமைய துண்மைய தாகப் பிறழ்தரு மெனினீ மேன்மேலு, மின்னமு முய லுதி யதனு னிற்கிட ரென்னே விங்குரை யெம் மட்டோ மன்னுறு காலமெ னிற்றுய ரிதுதான் மருவுவ தாமிரு மைக்கண்ணே, துன்னரு மொருமையி டத்திது மேவா துயரமெ லாந் தெறு மதனுலே. 122

பசிதா காதிகள் பூருவ மெனவென் பா
னிகழ் கின்றன வென்பாயே, லொசியா தியா
னெனு மாங்கா ரத்திடை யொளிர்தரு மிலை
யென் பவனியாவன் சுசிசே ரறிவினுந் தாதாந்
மியகற் பனையாற் றேன்றுறு மென்பாயே, னிசி
னேர் கற்பனை தனையொழி நீதா னிதமும் விவே
கம தனைமேவே. 123

விரைவாய்க் கற்பனை திடவா தனையான்
மேவுறு மென்னின் விவேகத்தைப், புரைதி ரதி
திட மாநிலை பெறவப் பொழுதும றித்தும்
புரிவாயா, லுரையா ராய்ச்சியி னிருமைய சங்
கத முற்றிட லுத்தியி னுலென்னேல், கரைதீர்
கருதரு செயலின தநுபவங் கரியா கத்தனை
யுறுமன்றே. 124

அறிவும் வெங்கரு தருசெய லுளதெனி
னவ்வா ருகுக யாஞ்சித்தைக், குறிதரு கருதுறு
செயலுடை யதுவாக் கூறில நிசகா ரணமத
னுற், பொறியுரு வுடைமுன் னின்மைய தநு
பவம் புக்கா தாதலி னிசஞானம் பிறிபொரு
ளதன்முன் னின்மைய துணர்வாற் பெட்புறு
காட்சிப் படுமன்றே. 125

குடமுதலியபோ லிருமைமுன் னின்மை
யிற் குயிற்றிடு பொருளே யாமேனு, மிடவிய
செய்கை யசிந்திய மதனு லிந்திர சாலமெனப்
பொய்யாந். தொடரறி வதுகாட் சியுமா மதி
னய றுகள்பொய் யுருவமு மாய்த்தோன்றுந்,
திடவொரு மையதப ரோட்சம தன்றெனிற்
சேரிது தான்றிரி பேயாமால். 126

சில்லோ ரின்னண மோர்ந்தும கிழ்ச்சி செ
றிந்தில ரெதனு னீர்சொல்லீர், வல்லா ரெனுமுல
காயதன் முதலோர் வடிவினை நானெனவென்
சொல்வாய், பொல்லா மதியினி வர்க்குநலோர்
ச்சி புணர்ந்தில தேலவ் வகைமகிழ்வை, புல்லா
தவருமறைப்பொரு ணன்கு பொருந்துற வாக்
கில ராமன்றே. 127

இவனித யஞ்செறி காமம தெல்லா மெப்
பொழு தொழிவன வென்றுபய, னெவமற
வினவின மல்லது ணர்ந்தில மென்றிடி னன்
னது ணர்ந்தனமியா, மவமுறு மிதயமு டிச்சுக
ளியாவு மவிழ்ந்தன வென்றெனு மிம்மொழி
யாற், றவமழி காமமு டிச்சுருவெனவே சாற்
றிய தாமென நீதேறே. 128

ஆங்கா ரத்தையு மறிவுரு வையுமொன் றுக்கிவி வேகம றிந்தமையா, லீங்கே யெற்கிது வாகுக வாகுக வென்னும வாவே காமமதாம். வாங்கா வறிவுரு வந்தனை வேறுற மன்னும கந்தைத னைக்கண்டாற் றீங்கார் பொருளொடு கோடிய வாவினுஞ் சேரா வாதைமு டிச்சற லால். 129

இறினுமு டிச்சுது பழவினை யின்றனி மூக்கா லிச்சைகண் மிக்குண்டா, மறிவுறி னுந்தீ வினைமிகு தியினிற் ககமகிழ் வின்மைபி றப்பதுபோல். வறிதுட ஞேய்முத லாற்றுன் றகுமுதன் மன்னிய செங்மா தியினுற்ற. னெறி யக மருவுறு மிச்சைமு ஞலே நிறையறி வுரு விடை யாவதெனே. 130

அல்லன்மு டிச்சறு முன்னரு மிவ்வாறு மெனி னதுதனை மறவேல்கா. ணல்லன்மு டிச் சற னிற்கது வேயா மதனு னீதந் நியனுகு. மல் லன்மு டிச்சது வேயாம் வேறல வறிவில ரித் தகை யுணராரே, னல்லன்மு டிச்சத னழிவா லஞ்ஞரு மறிஞரும் வேறு குவரன்றே. 131

தொழிரெழி லின்மையி ஞதன்மெ யிந்தி யந் துவள்மந தொடுமதி யாலாதல், பழிபடு மஞ்ஞர றிஞ்ஞர்த மக்கும் பற்றுறு வேற்று மை சிறிதுமிலே, வழியில்வி ராத்திய சோத்திரி யர்க்குநன் மறைவிட லோதுத லாலன்றிக், கழி படு முணன்முத லாலிலே வேற்றுமை காணுக விங்கும் முறையன்றே. 132

வாளா நிற்பவ னெனவே வந்தன வரை யா தோய்ந்தன வாவாமே, மூளா நின்றவ னிந்தமு டிச்சை முறித்தவ ஞகுமு தாசீந, மாளா நிலேயை விதித்தது வாமெனின் மன்னிய வெனவெனு மொழிவீண, மீளா விவனுட லாதிகள் வல்லமை மேவிய வலவெனி னது நோயே. 133

மெய்யறி வினையழி நோயென் றெண்ணுறு மேதா வியர்மிதி மிகுதெளிவாந், துய்யவ ஞர்க் கினி வேண்டுவ தென்னேகொல் சொல்லுதி பர தனே முதலாஞேர்க், கய்யபு ராணந் தொழிலிலே யெனவே யறைதரு மெனினுண் பினும்லீலே, செய்யினு மிரதிப் பினுமெனு மறைமொழி சிரவண மேசெய் திலேபோலும். 134

காட்டங் கல்லென வேபர தாதியர் கனி யுணன் முதலிய வறவிட்டோர், மாட்டிலி ருந் திலர் மற்றெனே சங்கம ருண்டன ராய்வா ளா நின்றூர், நாட்டினி லேசங் கம்பெற் றுன்பா னற்சுக மதுதனே விடலாமாற், கூட்டுற வற விடல் வேண்டுமெ நாளுங் கோதறு சுகம் வேண் டுனர்தாமே. 135

வேறு.

நன்னூற் கருத்தை யுணராது நவில்வர் மூடர் வெவ்வேறு, வன்ஞேர் துணிவிங் கே நிற்க வதன தறுதி யியம்புதுமாற், றன்னேர் விராகம் போதோப ரதிக டமிற்று னன்பாகி, யொன்றுய்க் கொளற்பாற் றுய்நிற்கு மோர் பாற் பிறிபட் டிருக்குமால். 136

ஏது சொருபங் காரியம்வெவ் வேறு மிவைக் குக் கலப்பிலதென், றேது நன்னூற் பொரு ளுணர்ந்தோ ருண்மை யாவுட் கொளல்வேண் டுங், கீது நோக்க லருவருப்புந் திரும்பப் போ கத் தாசையற, லீது மூன்றும் விராகத்துக் கெழிலா ரேது முதலியவாம். 137

வினவ லாதி யொருமூன்று மெய்ம்மை பொய்ம்மை பகுத்தறிதல், பினைவன் முடிச்சு முளையாமை பெரும்போ தத்துக் கிவை மூன்று, மநக வியமா திகள்புத்தி யடக்கம் விவகா ரத்தழிவு, மினிப வேது வாதியுப ரதிக்காமிதுதான் கலப்பிலதாம். 138

நிகழ்மெய்ப் போதந் தலைமையதா நேரே முத்தி யளிப்பதனுன், மிகநற் போதம் வளர்ப்பனவாம் விராக வுபர திகளிரண்டுந், திகழிம் மூன்று மிகமுதிரிற் றீர்க்க காலத் தவப்பயனு, முகள்வெம் பாவத் தொருபாலொன் ருேர்காற் றடைப்பட் டிருக்குமால். 139

விரதி யுபர திகணிறைந்து மேலாம் போதந் தடைப்பட்டோர், நிரதி சயமுத் தியை யடையார் நேர்வர் தவத்தான் மே லுலகம், புரண போத நிறைந்தேனை யிரண்டுந் தடைதான் புகுமெனினுந், திரமெய் முத்தி நிலைவரமாந் திட்ட துக்கஞ் சிதையாதால். 140

அயன்பே ருலகந் திரணமென வறிதல் விரதிக் கவதியுடல், சொயமா வதுபோற் பரந்தானுந் துணிவே போதத் தினுக் கவதி, துயில்

போன் முழுது மறப்பதுதான் றுகடீ ருபர
திக்கவதி. வியனுர் மதியா லவாந்தரமாம் வேறு
பாடோர்ந் திடல்வேண்டும். 141

பெற்ற வினைநா நாத்துவத்தாற் பெரியோர்
நாநா விதமாவர், பற்று மதனு னூற்பொரு
ளின் மயங்க வேண்டா பண்டிதர்க, ளுற்ற
தத்தம் வினைவயத்தா லவர்க ளெவ்வா றுறைந்
தாலு, முற்றும் போத மொருபடித்தா முத்தி
நிலைமை சமனுமே. 142

செகச்சித் திரந்தன் னறிவிடைவத் திரச்சித்
திரம்போன் மாயைசெயு, மிகழ்ச்சித் திதனை
யறிவுருவ மென்றுந் தானு யிடல்வேண்டும்,
புகழ்ச்சித் திரநற் றீபமிதெப் போது மநுசந்
திப்பவர்தா, முகச்சித் திரத்தை நோக்கிடினு
மொன்று முன்போன் மயங்காரே. 143

ஆறுவது சித்திர தீபம்
முற்றிற்று.

ஆகச் செய்யுள் 143.

---

## ஏழாவது

# திருத்தி தீபம்.

---

இந்தப்புரு டன்றுனென வேதன்னேயு ணர்ந்தா, லெந்தப்பொரு ளிச்சித்தெவ னின்புக் குடல் வேவா, மிந்தச்சுரு தியினுட் பொரு ளிங்கோர்பெற வோர்வே, மந்தத்தகை யான் முத்தர்த மாநந்தம்வி ளங்கும், 1

சௌவீசரை யாபாசமாச் செய்கிற்பது மாயை, யெனவோதலி னிவர்கற்பித ரிவர்செய் தன ரெல்லாங், கனவீட்சண முதலுட்படல் காறுஞ்செய்த திறைவ, னனவாதிகை வலியம் வரை ஞாதா செய்ததாமே 2

கூடத்தவ சங்கத்தியல் குலவும்மறி வுரு வாய். வீடத்தகு பிரமைக்கிட மாய்மேவுறு விமலன், சாடத்தகு மொன்றென்றிடை சார் கற்பனே யாற்றன், ஞேடத்தகு மதிசேருயி ரொளிர்பூருட னிங்காம். 3

நிலேயோடம ருயிர்முத்திமு னேரும்முரி மையதா, மலவாந்தனி நிலேயற்றதி றரோபமு ருதா, னிலேயார்ந்துயிர் மயலங்கிச நேர்கின்றிடு பொழுதே, யலவாபவ முளறுனென வபிமா நம துறுமே. 4

மயலங்கிசம் விட்டேநிலே மனிநின்றிடு பொழுதே, சொயசித்துரு நான்சங்கமில் தூ யோனென வுணர்வா, ளியைசங்கமி லதிறு னுரு தெநறுமெனி னதுகே, ளயர்முக்கிய மின் முக்கிய மகமொன்றெடி ரண்டாம். 5

அநியோந்நிய வாரோபம தாற்சிந் மயப் போலி, தனினேக்கிய மாமுக்கியஞ் சடர்சேர்த் தலி ருங்கே, நனிபோலிசிந் மயம்வே றுற நணன்மற்றவை யறிஞர், பனிநானென லுல காரண பரியாயம மைப்பார். 6

ஏகின்றன னெனலேமுத லிலௌகீக வழக் கிற், பாகொண்டறி விற்போலிப குத்தோதுவ ரறிஞ, ராகொட்டிலி நான்சித்துரு வாநூலு ணர் வாலென், றாகந்தனி யறிவில்லக வுரை யொட்டிடு வாரே. 7

போலிக்கறி வறியாமைபொ ருந்தும்மறி
வுக்கின், ருலெங்ஙன மாபாசன்மெய் யறிவா
கின னெனலா, மேலின்னதி ழுக்கன்றறி விற்
போலிய பேத, மேலும்பொய்ம்மை யாபாசன்
மெய் மிஞ்சும்மத ருலே. 8

தனிஞானமெய் நானென்றிடு தகுபோதமு
மெய்யன், றெனின்வாத்தவ மென்ருரெவ ரிங்
கேகயிற் றரவ, நனியோடுதன் மெய்யாமென
நாடேமந்த வியல்பா, மனிநீடுறு மறிவாற்
கொடு மாயப்பவ மாய்வாம். 9

உலகத்தரி யக்கர்க்கற வொப்புள்ளது பலி
யென், றிலகச்சொல்வ ரதனுலறி வின்போலி
யென் புருட, னலகின்றிய வதைவேறுசெய்
தறிவாகின னெனவே, நலவோர்வுற வலனு
மென நாடிச்சொ லு மறையே. 10

அய்யந் திரிபொழி யறிவுட றன்பா
லெய்தும் படியிங் கெய்துக வேண்டு
முய்யும் படியென் றுறுதிபி றக்கத்
துய்யிச் சுட்டுரை செய்தது சுருதி. 11

ஆகந் தனிலிசை யறிவுநி கர்ப்பத்
தேகந் தனிலிசை யறிவுசி தைக்கு
மேகந் தனிலிசை யறிவையி யைந்தோன்
ருகந் தவிரினு மாகதி சார்வான். 12

இதுவென் ருனப ரோக்கம தென்னி
னதுவுள தாஞ்சொய மாகவி ளங்கிப்
பொதுவென வாய்நிகழ் போதமெஞ் ஞான்றுங்
கதுவப ரோக்கம தாயில கலினே. 13

உதவுப ரோக்கமொ டேயப ரோக்க
மிதமுறு ஞாநம ஞாநமு மென்னத்
திதமுறி ரண்டுந் தெசமனி னுறல்போ
னிதவப ரோக்கமெய் தன்னினு நேரும். 14

ஒன்பதெ னெண்ணு லுரனெழி தசமன்
பின்பவ ரொன்பது பேரையு ணர்ந்துந்
தன்புடை சார்தரு மயல்கொடு தசம
னென்பவ ஞெனென வேயுண ராஞல். 15

தசமனெ னப்பகர் தானுறை தரவு
நிசவடி வொன்றுநி கழ்ந்தில திலதென்
றிசையவெ ணிச்சொல்வ னீதறி யாமை
வசம்வழு மூடலெ னப்பகர் வாரே. 16

நதியுளி றந்தன னவனென நலிவுற்
றதிருற வழுவனவ் வழன்முத லியதான்
றிதமயல் வருவிட் சேபம தாமென்
றிதமரு ளறிஞரி யம்புவ ரன்றே. 17

மாய்ந்தில னத்தச மன்னுள னெனமேல்
வாய்ந்தநல் லாத்தனின் வாய்மொழி கேளா
வேய்ந்தசு வர்க்கமெ னத்தச மனையே
தோய்ந்தப ரோக்கம தாய்த்துணி வானல். 18

நீதச மன்று னென்றுக ணிப்பித்
தேதம றக்காட் டிடவப ரோக்க
மாதறெ ரிந்துள் ளகமகிழ் வெய்தி
வேதனை யோடமு குதறனை விடுவான். 19

மடமொடு மூடலு மனும்விட் சேபத்
துடனிரு ஞாநமு முறுகணி லாமையு
மிடமுறு மாமகிழ் வெனுமிவை யேழு
மடையினல் லறிவுரு வதினினு மறிவாய். 20

வேறு.

சமுசார மருவாசை தனைமேவு முளனுய்த்
தமசிவ னெருபோது தனதான வுருவாய்

நிமிர்சோதி மயமாகி நிகழ்கூட மெனவே
யமைவானை யறியாமை யதுவாகு மடமே. 21

இயல்பான கூடத்த னிலைகாணு ணு
னென் றுயர்வான கேள்விக்கிவ் வுரைகூறன்
மூடல், செயன்மேவு வானுண்ணல் செய்வானு
நானென், றயர்வாகும் விட்சேப மதன்மூல
மாமே. 22

மொழிகொண்டு கூடத்தன் முன்புண்டு
மெனவே, தெழிகின்ற தேநன்கு செப்பும்ப
ரோக்கம், விழிகொண்டு கூடத்தன் மெய்ப்
புற்ற நானென், றெழுகின்ற போதங்க ணிற்
கண்ட ஞாநம். 23

அனகர்தத னகமுண்ணு மவனென்றன்
முதலாச், சொனதுக்கம் விடன்மிக்க துயர்
கெட்ட ததுசெய், வனசெய்து பெறல்வேண்டு
வனபெற்று மகிழ்த, லினமற்ற பரிசுத்த வெழி
லின்ப மெனலாம். 24

இவ்வேழு மாபாச னுக்குண்ட வேழி
னெவ்வாத மாபாச மொண்முத்தி மேவு

மவ்வேழி னுமூன்று மப்பந்த மேதா
னெவ்வாறு மேயீனு மிங்கென்பர் மேலோர். 25

தனதுண்மை யதனெண்ணின் முதலின்
மை தனேயேய்ந், துனவிங்க ரியசெய்கை யுற
மன்னும் வழியாய்த் துனவெங்கு மறிகின்ற
திலனென்று துயரே, மனநண்ணு வதுசொல்
லின் மடமென்பர் பெரியோர். 26

வழியின்றி யதினெண்ணி வருபின்னர்
நிலேகூ, ரொழிவின்றி யதுவில்லே யொளிர்கின்றி
லவெனு, விழியொன்று திரிபென்ன விசை
கின்ற செயலே யெழில்குன்ற மறைவெய்ய
விகல்வந்த தொழிலே. 27

இருதேக மொடுகூடு மியமாந னென்பா,
னுருதோயு மெணமாகு முகள்பாச நிபமாய்,
வருதிய சமுசார மெனுநாம மருவா, கருதாதி
யிடரியாவு மிவன்வேலே கருதே. 28

மடமையுட னுவரண வகையிவைக டா
மெணமுழ, னிடமுடைய தாய்நிகழு மெனினு
மெங னேனுமிகு திடனிலேமை யாமவைகள்
செறியுமெண மேயலது, சுடர்விடொளி யா
மறிவு தொடர்வதொரு நாளுமிலே. 29

எண்ணமெழு வதன்முனமு மெண்ண மதன் முதனிலைமை, நண்ணுமது கொடவை களி னண்ணு மிய லதனையுற றிண்ணமிவை பிரமமெழ றிண்ணமதி னதனினிலை, யண்ணு மென லறவிடுதி யண்ணுதலி னதின்முழுதும்.

எனைய ப வ முளனறிரு னிடரதிலி மகிழ் வுடைய, னெனவும்வரு மியலுயரி னிகழுமதி னிகழ்வதிலை, யெனினகமு ணர்விலிப ரவியை புகழ் வெனதுகணி, லெனமுனுள வியலுமுயி ரிடைநிகழ்வ துணர்கிலைகொல். 31

மடமையினில் பிரமமென மனுநிலைமை கொடுபகர்வர், மடமைகரு துதலினுயிர் மருவு மியல்பெனவொதின, மடமையிரு வகையுணர் வின் மடியினில திலகிலதென், மடமைதரு மிவிருவகை மறைவுமற மடிவுபெறும். 32

உரையுணர்வி னுலொழியு முணர்விலதெ னுவரண, மிருமுணர்வி னுலொழியு மிலகிலதெ னுவரண, மருகினிது சீவமய லழியுமிது தானழி யின், கருதுருவ மாதிபவ கவலைகளெ லாமழி யும். 33

பவமுழுது மேயழியிற் பரமகதி சேருத லிற், கவலைபினு ருமையினற் கனமகிழ்வு தான் மருவுஞ் சுவவடிவை யோரினெனுஞ் சுருதிய ப ரோட்சமிடர், தவிர்தலென வோதுமிரு தகையுமுயிர் மேவுமெனும். 34

வேறு.

தெரிகிலை யிவனேதான் செறியிரு வகை யாமே, திருசிய மினலாலே திகழ்தலி னதுதீயா, லுரையுணர் வுறுகாலே யுணர்வொளி ருதலா ேநர், பிரமந லொளிதானே பிறழ்தலி லுளதே யாம். 35

அகமது வெனவோரா ததுவுள தென வோர்தல், புகலுணர் விதுமாலோ பொடிபட லுளதாகா, சுகமிலை யெனமானந் துனுமெனி னிசமாய்வா மிகலள வைகள்காணே மிது கொடு நசியாதால். 36

உருநிகழ் வறலாலே லுயருல குரமாலா முருநிகழ் வறலா லு மொருபடி மினலா லு முருநிகழ் வுறுநீர்மைக் குரையுர மயலாகா வுருநிகழ் வறவோரே முரையுர முரையாலாம்.

பாலில கறன்மாலேற் பகர்கட வுரமாலாம்
பாலில தது வாதல் பகுமறை தருபாலாற்
பாலில தெனுமாயும் பனுவலி னறிவாலே
பாலில கிலதேகும் பரமந லறிவாலே. 38

வேறு.

தசமனுண் டெனவெயுரை தருமுரம் பிர மையல, வசமதுண் டெனலுமதி னறிவிலா வரணநிகர் நிசமதென் றிடுசொலுரை நிகிலநன் குறவினவிற், றசமனீ யெனலினுரு தடையிலா தறநிகழும். 39

தசமனு ரெனவினவத் தானெனு விடை புகலத், தசமனுந் தனுடனெணித் தானவன் றனையறிவன், றசமனு னெனுநன்மொழி தரு முரங் கெடுவதிலை, தசமனென் பதின்மரடி தலைநடுச் சமுசயமில் 40

வேறு.

சத்தே யென்பது முன்றொடர் மொழியாற் சத்துண்மை, யொத்தே தத்துவ மசிமுதல் வாக்கியத் துருநேர்வாஞ், சித்தே யடிநடு கடை யினு மதுவாத் திகழ்ஞாநந், தத்தா தாதலி னுலப ரோட்சந் தனிநிற்கும். 41

பிறவிமு தற்குறி மித்தமெ னியல்முன் பிரு கோர்ந்தே மறையின தற்பின்வி சாரம தாலுரு வைக்கண்டா, னறிவது வென்றிங் குறையில தேனும வன்ருதை, செறிதரு மநமுயி ரெனநா டுந்தலஞ் செப்புற்ருன். 42

அந்நமு தற்கோ சங்களை மேன்மே லாராய் ந்தே. பிந்நமி லின்புரு கண்டத னியல்பும் பெற வைத்தான், மன்னுமெய்ஞ் ஞாநம நந்தமெ னும்பிர மப்பண்பைப், பன்னியி ருப்பது வாக் குகை கோசம் பகர்வுற்ருன். 43

இந்திர னுந்மா வெனுமிய லாலுண் டென வோர்ந்தே, முந்துற விச்சித் தீரிரு காலயன் முன்னுற்ரு, னந்தமி லாந்மா வெனன்முத லா லுண் டதுவென்றே, வந்தொழி நெறியா லறி வது வென்றும தித்தேமால். 44

பங்கில வாந்தர மொழியா லாமெய் பரோக் கவறி, வெங்கும காவாக் கியநல் விசாரத் தெழி லறிவா, மிங்கப ரோக்கம துற்றிட மாமொழி யேசொன்னுர், சங்கையி லதனுற் பரமப ரோக் கந் தானுமே. 45

அகமென் றுணர்வொலி கட்கா லம்பந
மாய்த்தோன் றுங், தகவுட் கரணஞ் சார றி வே
தொம் பதனுகும். பகமுற் றவன்மா யாவிசே
கத்தின் பயின்மூல னிகழ்வில்ப ரோக்கன்
மெய்ம்முத லான் றற் பதனுமே. 46

வேறு.

ஒருபொ ருட்கி லங்கு நீர்மை யோடி லங்கு
ருமையு, மிருமை யோட கண்ட நீர்மை யேய்
வு ருமை யாற்கொள்வா, மருவு நல்லி லக்க
ணை வயங்கு தத்து வமசிமுன், பெருமை வாக்கி
யங்கண் மீது பேசு பாக லக்கணை. 47

சோய மென்ப தாதி வாக்கி யத்த சொற்
கள் போலவே. ருய தேய்வு ருசஞ் சர்க்க மாத
ருன்வி சிட்டமு மேய வாக்கி யார்த்த மிங்கு
மேவு ருவ கண்டமா, யேய வோர்நல் வாக்கி
யார்த்த மேகொள்வார றிஞரே. 48

எந்த வேறு போத நின்றி லங்கு மன்ன
தொருமையா, னந்த ரூப மாமி தேக நல்ல
போத மாமதே, யிந்த வாறென் றென்றி
ஞென்று ணர்ச்சி யேயு நாணினக், கந்த வத்து
வத்து நீர்மை யொடுப ரோக்க மகலுமே. 49

என்னி னும்மென் னென்னி னீகே ளெங்கு மாமொ ரின்பமாய், மன்னும் வேறு போதமன்ன மாநல் வாக்கி யத்தினு லுன்னு மோர்பரோக்க ஞாந மொன்று மென்று வோதுவார், துன்னு நூற்சித் தாந்த ஞாநஞ் சோபை மிக்கதாகுமே. 50

நிற்க நூற்க ருத்த துத்தி நெறியின் வாக்கியத்தினுற், சொற்க மாதி வாக்கி யம்போற்றுன்னு றும்ப ரோக்கதீ, யிக்க ருத்த டாபிறழ்ச்சி தசம னின்க ணெய்தலா, லக்க ரத்த வாவு யிர்க்க டுத்த பண்பு நீங்குமால். 51

சித்த மான முன்னி லைத்தி றங்கெ டும்மிஙன்சொலன், மெத்த மேன்மை யாம கோவிருத்தி வேண்டு வாற்குறும், வித்த முங்தொலைந்த தாவி ளம்பு லோக வசநநன் கர்த்த மேவ லுற்ற தாநி னருளி னுல கோவகோ. 52

உள்ள மொண்டு சீவ போத முணர்வுறத்த குந்ததா, மெள்ளு பாதி யுண்மை யாலிதின்மை யாற்ப ரந்தகா, தள்ளிவ் வண்ணம் வத்து ஞாநஞ் சார்ந்து பாதி தோன்றலால்,

வில்ள லாமை யாலு பாதி விதேக முத்தி
மட்டுமே. 53

சீவ நீர்மை வத்து நீர்மை சித்த மேவ
னீங்கலான், மேவு பாதி யல்ல தில்லை விதியு
பாதியாதல்போல லோவ வென்கொ லாகி டாவு
யர்ந்த பொன்னி ரும்பெனும், வீவில் வேறு
பாட்டி னுல்வி லங்கி னீர்மை மாறுமோ. 54

அதத்து வாவி ருத்தி ரூப மதனி னுலு
நேரதாய், விதித்த தாமு கத்தி னுலும் வேத
மத்த கங்கடா, முதித்த வத்து தன்னை யோத
லுபய மாம்வி தத்ததென், றிதத்து வந்த குரிசி
ருமி யம்பி னுர்வி ளங்கவே. 55

வேறு.

நானெ னும்பொரு ணீக்குறி னுன்பர
மென்னு ஞாந, மேனுறு மெனல் பாகவி லக்
கணை யேகு மங்கந் தானு ணீக்குறின் விஞ்சிய
சிந்மய சாட்சி தன்பா, னுண தாமெனும் வாக்
கியத் தாலது நாட லாமால். 56

கரிய தாமிது தன்னெளி யேனுங்க டாதி
போல, வுரிய புத்திவி ருத்தியி னேர்வுற லாகு

மிந்தத், துரிய நற்பொரு டன்னைப்ப லத்தினுற் சுட்டொணுவென், றரிய நூல்புக லாரிய ரோ தின ரன்பினுலே. 57

புத்தி யுட்செறி போலியு மோர்குடம் புக்குநிற்கு, மத்தி னுட்புத்தி யாலறி யாமைய ழிந்துபோகுஞ், சித்தின் போலியி னுற்குடந் தோன்றுறுஞ் சேதநத்தின், மெத்து பேதமை மாய்ந்திடப் புத்திவி ருத்திவேண்டும். 58

சொயமி லங்குரு வாதலிற் றன்னுறு சித் தின்போலி, பயனு ருதுக டாதிக ளுக்கப்ப யின்றகாலை, நயந முங்கிளர் தீபமும் வேண்டு நற் றீபநோக்க, வியன தாமொரு நேத்திரம் வேண்டுமவ் வாறுவேண்டா. 59

இருப்ப தேனுஞ்சிற் போலிப ரத்தினை டேகமாய்ப்போம், பரத்தி லேகுடம் போல் வியப் புப்பலம் பண்ணிடாதாற், சரிப்பி லப்பிர மேயம நாதி யென் றிங்குசாற்றுங். கருத்திற் கிட்டுமி தென்பது புத்தியாற் காணலாகும். 60

இவன்மற் றுமெனத் தன்னையு ணர்ந்திடி னென்னும்வாக்காற், சிவந்தன் மேனியு ணர்ந்

தெழு போதமே செப்பலாகுந், தவநல் வாக்கி யத் திங்குர மேவினுந் தான்மொய்ம்பாகா, சவண மாதிசள் சற்குருப் பின்னருஞ் சாற்ற லாலே. 61

பிரம ஈா னெனுஞ் சொற்பொருட் போதம் பெ லக்குமட்டுஞ், சிரவ ணுதிச மைமுத லண்மியே செய்தல்வேண்டுந், திரமு ருமையி னேதும றைபஃறி றத்தவாதல், பரவத் தின் றெனும் பாவனே வேற்றுமைப் பாவமாமே. 62

சாகை காமபே தங்கொடு கன்மம்வெவ் வேறுகண்டே, மாகை யாலிங்கு மவ்வகை யையுறல் கேள்வியாற்ரு, யோகை வேதச்சி ரங்கட்க டிநடு வோடந்தத்து, மேக மெய்யறி விற்கருத் தென்மதி கேள்வியாமே. 63

சமங்வ யாத்தியா யத்தித்து சொன்னதாஞ் சாற்றிரண்டி, லமல மாக்குந்த ருக்கமெய்ப் பாவனே யார்த்ததாமாற், றமம யப்பற்ப வப் பழக் கத்துட ருன்மெய்ஞ்ஞாலஞ், சுமவ டிக் கடி யென்றிடு புத்தியுந் தோன்றுமீட்டே. 64

இனைய தேவிப ரீதமே காக்கிரத் தீதுமாளு,
மனைய துண்மையின் றீக்கைமுன் ஞர்வழி
பாட்டினுலாம், புனையு பாசனை யிங்குமெய்ந்
நூலினும் போந்ததாகும், முனைய ஞர்க்குப்
பின் மெய்ப்பழக் கத்திஞன் முற்றுமன்றே. 65

அதனை நாடலு மோதலுந் தம்மிற்ரு மாய்
தருனு, மிதனி லேயொரு மித்தலு மெய்ப்பயில்
வென்பர்மேலோ, ரதனைத் தீரன்பி ராமணன்
கண்டறி வாக்கல்வேண்டி, யிதரச் சொற்களை
யெண்ணெ வாக்குக்கி ளைப்பதன்ரே. 66

அயலற் றென்றனைச் சிந்தித்து பாசிப்ப
ராரவர்க்கே, நியதமி யோகமுஞ் சேமமு
நானன்னி ருவகிக்கே, னியலும் வேதமி ருதியு
மேவிப ரீதமேகச், சுயசொ ரூபத்தொ ருப்படற்
பாற்றெனச் சொல்லுமென்றும். 67

யாதெ வாறுற மன்னத னுண்மைய கற்றி
மாறும், போத மாம்விப ரீதமெச் சத்துப் புத்தி
போலத், தீதி ருனுட லாதியின் வேறிச்செ கம்
பொயாகும், பேத பாவனை மாறுறக் காண்ப
திப் பெற்றிவிட்டே. 68

மெய்ம்மை நாட்டத்தி றுமிது வாகலின் மெய்மெய்வேறு பொய்ம்மை யாஞ்செக மென்றுநி ரந்தரம் புந்திசெய்க. மெய்ம்மை மந் திர பாவனை போலத்தான் வேறு ஞாலம், பொய்ம்மை யென்றெணும் போதநி யதம் பொ ருந்துமற்றே 69

வேறு

மற்ற தென்றுணர்தி திட்ட வத்துவத ஞுல ருந்தனிகர் மாயவூண், பற்றுளான்செப மியற்று வானிகர் பருகி லானெதுவு நியத மாய்ப், பெற்ற தேலுணுவ னுணிலன்மற்ற வழி பேணு மாறலது நுகருவா. னுற்ற வெந்த வகை யாலு மேபசியொ ருங்க மிக்குவிழை வானரோ. 70

நியம மாச்செபமி யற்றல் வேண்டுமில தேன்மி குந்தமற நேர்தலாற், செயினெ ழிந்த வழி யாம னத்தமிசை செப்பு வன்னமுர னுத லிறைற் றுயர்செ யும்பசியின் வேறு பாவனை தொ லைக்க வேண்டுமெவி தத்துமே. நயம தாகுமிவ னுறுப யிற்சிமிசை நண்ணு ருது முறை சிறிதுமே. 71

அதனை நாடலெழு வாயு பாயமிது வாங்கு முன்னமுறை செய்ததா, லிதனி லொன்றுபடு தலிறி யாநகிக ரில்லை யாரும்வலு கட்டதே, மதியின் விக்கிரக வுணர்வு நீங்கலற மற்று ணர்ச்சிமரு வாமையே, முதிர்நி யாநமிதை யலை செய் நெஞ்சணுகின் மொய்த்த பந்தவலு வாகுமே. 72

மாத வாசலந மாகு மேமநது மதன னிர் மைவலி யதுதிட, மாத லாலிதைய டக்கல் வாயுவை யடக்கன் மானுமென வெண்ணு கேன், சாது வேகட லருந்தி வேரினெடு தான் பெயர்த்துமக மேருவை, மோது வெங்கனல் விழுங்கி னும்மனதை முடிவு செய்தலரி தாகு மால். 73

ஓத லாதியில்வி லங்க கன்றவுட லுறமு வன்மையுறு பந்தமற், றேது மட்டிலிதி காச மாதிகொ டுளக்கி லீலைந டநத்திலும், போத மே சொருப ஞால மித்தையிது பொருளின் முற்றுதலி னுற்பழங், காதை யாதிகளி னுலை கத்தெளிவு காண்க லக்கமத டைந்திடா. 74

உழவு வாணிபம தாதி காவியமு ணர்த்து தர்க்கமெழு வாய்மிசைப் பழகு நெஞ்சது கலங்கு மெய்யுணர்வு பாற லானவைகளாலிவ, ணழுவு ருதுணர்வு போசனாதிகளி னண்ண மிக்கவெளி தாதுமா லிழிகலக்கமுழ தின்மை யால்விரைவி னெய்த லான்மிருதி மீட்டுமே. 75

உண்மை யெண்ணமறன் மாத்திரத்தினிட ருற்றி டாதுதிரி பாலுறுந், திண்மை யுற்று விரை வெண்ணு வான்றிரிபு சேர நேரமில தெங்கணு, நுண்மை யெண்ணமுற நேரமில்லை யய னூற்ப யிர்ச்சிவல னுக்குமேல், வண்மை மன்னுபரி சயம மிக்குதலின் வலியின் மெய்ம் மைநிலை தவறுமால். 76

ஒருவ னுமவனை யேயு ணர்ந்திடுதி யசிய வாக்குகளை யொழியெனு, மருவு மற்றவகை வாக்கி னுக்கதுவ ருத்த மாமெனவும் வினவி னேம், பருக லாதிவிடி னுய்யொ ணுவிதர பனுவ றன்னைவிடி னென்கொலோ, வருகு வாயிவணி லித்து ராக்கிரக மாற்று கின்றனை யென் மூலமோ. 77

செஙக ளுதியர்க ளுலகை யாண்டனர்க
டிகழு மெய்யறிவின் வலிமையா, லீனய வா
புரிய நீயும் வல்லேயெனி னதுப டித்தியல
துழவுசெய் துனிசெய் மற்றிதுபொய் யென்
னும் வாதனேது லங்கி னூழ்கெடாந யந்துதம்
வினைவ யத்தின்வழு வறநடந் திடுவர் மேவு
ருரொருகி லேசமே. 78

தத்த மக்குரிய வினைவ யத்தர்நிலே தவறி
டாரலது தவறுக, வித்த லத்துவினை தனைய
கற்றிவிட யாவ னுக்கெளிய தாமுரை, சத்தறிந்
தவ னறிந்தி லானிருவ ருக்கு மிங்கு வினை சம
னெனும் மூத்த னுக்குறுதி யாற்கி லேசமறு
மூட னுக்கதிட ளுலுறும். 79

பாதை போமிருவ ருக்கு மேதளர்வு பாடு
நேரெனினு மண்மையென் றீது தேர்ந்தவனு
ரத்தின் வற்செலுவ னிதர னேர்விலியி ருப்பனு,
லோது போதமதை நன்கு நேர்படவு ணர்ந்து
ளான்றிரிபி னலமரான் யாது பேணியெவ
னின்ப மேவலுற யாக்கை தாபமுற வேண்
டுமே. 80

ஞால மித்தையெனும் ஞாந முண்மை யின யப்ப தோடிலேந யப்பவன். சால மாயி னவை தாப மென்பதுச மிக்கு மெண்ணெயறு தீபநேர், கோல கந்தருவ நகரி னென்றுமிது கொடிய மாயைபுரி வான்செயற், சீல மென் றுளன யந்தி டான்முறுவல் செய்து விட்டுவிட நினைகுவான். 81

வந்த போதினிமை யான போகமதை மன் னு மிந்தமுறை நாடுவோன், சிந்தை பேணு கில னன்றி மாசதுதெ ரிந்து விட்டுவிட நினை குவா, னந்த மாம்பொருளை யீட்ட றுன்புபின ளித்த றுன்பினிய ழித்தறுன். பிந்த வாவிபிரி தறுன்பு சிசிபொரு ளெண்ணி றுன்பமதி யற்று மால். 82

சந்து மேவுறுந ரம்பெ லும்பினொடு தசைக டுன்றியிடு பாவைய ரெந்தி ரத்துலேயு மங்க பஞ்சரமி தன்க ணேயினிமை யென்னேயோ, முந்து குற்றமெழி னூல்கள் செவ்விதின்வி ரித்த றிந்திடமொ ழிந்திடுஞ், சிந்தை செய்பவ னி வற்றை நாளுமிடர் சேர்வ தில்லேயிது திண் ணமே. 83

பசிவ ருத்தமுறு வானு நஞ்சுகொடு பருகு
தற்துநய வானெனின், வசிவி வேகியுண வால
வாவிலிதெ ரிந்து மற்றதைந யப்பனே, வுசித
முன்னைவினை வலியி னுற்புலனி லுறும வாவெ
னின வேலையுங், கசிவு ருதிவன்வ ருந்தி யுண்
பணரி கைவ யத்தனைநி கர்ப்பவே. 84

அன்ன போகநுகர் வுறினு மன்புடைய
ராங்கு டும்பிகளெ னறிஞர்தா மின்ன முங்
கரும மாய்ந்த தில்லைகொ லெமக்கெனு வயவர்
சந்ததம். பன்னு மிவ்வயர்வு தாப மல்லவிது
பவவி ரத்தியென லாகுமே, முன்னு துட்டசமு
சார தாபமதன் மூல மையலறி வென்பரால்

துன்று நல்லறிவி னுல்வ ருந்திநனி சொற்ப
போகமதின் மகிழுவா னன்றி மிக்கபல போ
கம் வந்துறினு மகம கழ்ச்சியெவ ளவுமிரான்,
பொன்று மிச்சைமிகும் விழைவி னர்க்குமிகு
போக முண்குதலின் மாய்வுரு, வொன்ற நல்
லவியி னனெ ருப்பெனவொ ளிர்ந்து மேலு
முற வளருமே. 86

தேர்ந்த ருந்தலுறு போக மேநனிதி ருத்தி
தந்திடும றிந்துபின், சேர்ந்த வர்க்குமிகு தோழ

